


பெரிய யெழுத்து

# அல்லியரசாணி மாலை.











அல்லிராணி. கிருஷ்ணபகவான். அர்ச்சுனன்.

[illegible]தகிராப் படங்களுடன்

[illegible]கோபால் நாயகர் அவர்களது

[illegible] கோள்டன் பிரஸ்ஸில் பதிப்பிக்கப்பெற்றது.

1924. [அணா, 3

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

வித்வசிரோன்மணியாகிய

புகழேந்திப்புலவரவர்களியற்றிய

# அல்லியரசாணிமாலை.

ஐதீக லெத்தகிராப் படங்களுடன்.




துளசிங்கநாயகர் குமாரர்,

டி. கோபால்நாயகர் அவர்களது

சென்னை:

கோல்டன் எலெக்ட்ரிக் பிரஸ்ஸில்

பதிப்பிக்கப்பெற்றது.

இதன் விலை] 1924. [அணா 8.

கணபதி துணை.

# அல்லியரசாணிமாலை.

## காப்பு.

### விநாயகர் தோத்திரம்.

ஐந்துகரத்தோனே அருளுமையாள்புத்திரனே
அறுமுகற்குமூத்ததொரு யானைமுகப்பிள்ளையாரே
வித்தைக்களஞ்சியமே வேழமுகப்பிள்ளையரே
தொந்திவிநாயகனே தொப்பைக்கணபதியே
பானைவயிற்ருேனே பறமேந்துங்கையோனே
மூலமுதலே முன்னடக்கவேண்டுமையா.

### சரஸ்வதி தோத்திரம்.

நாபிற்சரஸ்வதியே நான்முகனுர்தேவியரே
சதுர்முகனுர்தேவியரே தாயேசரஸ்வதியே
வாக்குமரமருள்வாய் மறையவனுர்தேவியரே
நாவுதவருமல் நற்கருத்தைதாருமம்மாள்
இந்தக்கதைதனக்கு இனிகருத்தைதாருமம்மாள்
பூவிலமாந்ததொரு பொற்கொடியேநான்சரணம்
சரணமென்றடிபணிந்தேன் தற்காக்கவேண்டுமம்மாள்
தப்புகளுண்டாயின் தாயேயருள்புரிவாய்
குற்றமிருந்தாலுங் கொண்டணைக்கவேண்டுமம்மாள்
அல்லிகதையுரைக்க அருள்புரியவேண்டுமம்மாள்.

### நாட்டுச்சிறப்பு.

தேன்பெருஞ்சோலை தென்னவளநாடு
கனியுதிருஞ்சோலை கனமதுரை நன்னுடு
வடகாஞ்சிமூத்திரங்கும் வடமதுரைப்பட்டணமாம்
தென்காஞ்சிமூத்திரங்குந் தென்மதுரைப்பட்டணமாம்
வாழைவடக்கீனும் வடமதுரைப்பட்டணமாம்
சோலைக்கிழக்கீனுந் தெய்யபெலாமேற்கீனும்
வாழைவடக்கீனும் வாங்கமுகுமேற்கீனும்
கரும்புமிளநீருங் கண்திறந்துமடைபாயும்

கட்டுக்கலங்காணுங் கதிருழக்குநெற்காணும்
அரிதாளறுத்துவா மறுதாள்பயிராகும்
அரிதளின்கீழாக ஐங்கலந்தேன்கூடுமட்டும்
யானைகட்டத்தாளும் வானமட்டும்போராகும்
மாடுகட்டிப்போரடித்தால் மாளாதுசெந்நெலென்று
யானைகட்டிப்போரடிக்கும் அழகானதென்மதுரை
தானுகத்தான்வளர்ந்து தழைத்தோங்குந்தென்மதுரை
சோலைமலருடைய சொக்கர்கிருபையினால்
அங்கயற்கண்மீனாட்சி அம்மையருளாலே
மாதமொன்றுமும்மாரி வருஷிக்குந்தென்மதுரை
மும்மாரிபெய்யும் முறைமையுள்ளதென்மதுரை
பஞ்சைபனுதி பரதேசிகிடையாது
பஞ்சங்கிடையாது பாண்டிவளநாட்டில்
கருப்புக்கிடையாது கனத்ததொருமதுரையிலே
கூலிகுறையாது குறைமறக்காலளக்கார்கள்
அங்காடிகூடை யதிரவிலைகூறுர்கள்
ஏழைபரதேசி யில்லறங்குடிவாழ்க்கை
தழைத்தோங்கிவாழ்வார்கள் சங்கரன்கிருபையினால்
எங்கெங்கினுமிருந்து ஏழைபரதேசிகளும்
அடுப்பார்பரிசனங்கள் அந்தமதுரையிலே
மதுரையையடுத்தவர்கள் வாழ்வரசுபெற்றிடுவார்

பாண்டியன் பெருமை.

நீதிமனுமுறைகள் நெறிதவறுமன்னவனும்
செங்கோல்பிடித்த சித்திராங்கதபாண்டியனும்
மவுடமுடிசூடும் மன்னன்சிங்காதனத்தில்
தங்கமுடிசூடி தாணிபதியாண்டிருந்தான்
சொக்கர்வலுமையுண்டு துரைராஜபாண்டியற்கு
மீனாட்சிவலுமையில் மேன்மையுடனாண்டிருந்தான்
ஆறி லாருகடமை யரசனவன்வாங்குவது
சங்கரநெறிப்படியே தரணிதனையாண்டிருந்தான்
சொக்கர்திருவிழாவைச் சோராமற்செய்திய்வான்
ஐயன்திருவிழாவை ஆனந்தமாய்நடத்தி
உலகந்தழைத்தோங்க உத்தமனாண்டிருந்தான்
தாழ்வுகளில்லாமற் றழைத்தோங்கிவாழ்ந்திருந்தான்
அப்படியாகவாழ்ந்து அரசாளும்நாளையிலே

## சோழராசன் வறுமை அல்லது சிறுமை.

சோழராசன் தன்னுட்டில் சொர்னகிரிப்பட்டணத்தில்
மழைகள்கிடையாது மன்னனதுசீமையிலே
தூறல்கிடையாது சோழனதுசீமையிலே
பயிர்கள்விளையாது பறவைகள்நாடாது
குடிக்கசலங்கிட்டாது குருவிகள்நாடாது
தீய்ந்தனபயிர்களெல்லாந் தேசங்களத்தனையும்
காய்த்தனமரங்களெல்லாங் கனிகள்கிடையாது
ஏரிகுளங்கள்தனி லிறைக்கசருங்கிட்டாது
பூமிதனிற்புல்லு பூண்டுங்கிடையாது
சருகுபோலுலர்ந்தனவே தனிச்சோழன்பட்டணத்தில்
அன்னங்கிடையாது அரிதானபரிசனங்கள்
சோறுகிடையாது சோழனதுசீமையிலே
எல்லாரும்பரதேசி யேழைகளாய்ப்போனுர்கள்
பெண்டுடனேபிள்ளைகள் புருஷசனங்களெல்லாம்
இனியிருந்தாலிவ்விடத்தி லிறந்துமடிவோமென்று
சொல்லாமலோடுகிருர் சோழராசன்சீமைவிட்டு
வலசைவாங்கிப்போனுர்கள் மன்னர்பரிசனங்கள்
குலைவலைசைவாங்கினுர் குடித்தனக்காரரெல்லாம்
அண்டிபிழைக்கவென்று அல்லவருமோடிவிட்டார்
வந்துமிகச்சேர்ந்தார்கள் மதுரைவளநாட்டில்
பாண்டியன்தேசமதிற் பரிசனங்கள்வந்தடுத்தார்
அப்போதுசோழன் அவனுடையபட்டணங்கள்
பாழடைந்துபோயிற்றே பரிசனங்களில்லாமல்
சோழனதுசீமையிலே துற்குறியடைத்தனவே
பன்னிரண்டுதன்வருஷம் பாரில்மழையில்லாமல்
மாடுகள்கிடையாது மணிதருங்கிடையாது
தங்கநிழல்கிடையாது தரித்திரமேபெரிதாச்சு
என்னசெய்வேனென்று எண்ணமிட்டான்சோழனவன்
வாடியனந்தளர்ந்தான் வாடும்பயிரதுபோல
செடியின்கீழ்புல்லதுபோற் செழித்ததிருமுகங்கள்
களர்நிலத்துப்புல்லதுபோற் கருகிநிறங்குலைந்தான்
எண்ணுதுமெண்ணி யேங்கிமனந்தளர்ந்து
யாரையடித்தோமோ அநியாயஞ்செய்தோமோ
கூலிகுறைத்தோமோ குறைமரக்காலிட்டோமோ
பஞ்சைபனுதிகளை பறக்கடித்தோட்டினேமோ

அந்தணர்வேதியற்கு அபசாரஞ்செய்தோமோ
தெய்வத்தின்தன்செயலோ திருவுளத்தின்சோதனையோ
ஆரையடுப்போம் அண்டிப்பிழைத்திடுவோம்
எவரையடுப்போம் இக்குறையைத்தீர்த்திடுவோம்
தேசமும்பாழாச்சு ஜெனங்களெல்லாம்பறிபோச்சு
அல்லவரும்போயடுத்தா ரணிமதுரைப்பாண்டியனை
பாண்டியன்தேசம் பதவியடைந்ததுகாண்
சொக்கர்கிருபையினாற் சுகமாயிற்றுதென்மதுரை
மீனாட்சிவலுமையினால் மேன்மைபட்டான்பாண்டியனு
தெய்வச்செயலாலே சீர்பெற்றான்பாண்டியனும்
நானுமவருடைய நாதாடிதாள்பணிந்து
பாண்டியனனுமதியாற் பகவானை நாம்வணங்கி
சொக்கர்மீனாட்சியரின் துணையடியைநாம்பணிந்து
பாண்டியனைக்கண்டு பகவானுக்கறிக்கையிட்டு
ஐயர்கிருபையினா லதிஷ்டம்பெறவேண்டும்
இதுதான்வயணமல்லால் இதைவிடவேறேயுண்டோ
மகாதேவர்கண்திறந்தால் மழைக்குக்குறைச்சலுண்டோ
தழைத்திருக்குஞ்சீமையென்று தாணிபதிஎழுந்திருந்தார்
மதுரைக்குப்போகவென்று மன்னனெழுந்துவந்தான்
சிநேகந்தான்செய்வோம் தென்மதுரைப்பாண்டியனை
என்றுபயணமிட்டா னிடறுகளைத்தான்தொலைக்க
கொஞ்சுமுள்ளசேனைகளைக் கூடத்துணையாக்கி
பூவின்முடிதுலங்க பொன்னாபரணமின்ன
வாளுங்கடகமும் வயிரமணிடால்துலங்க
புரவின்மேலேறி புறப்பட்டான்சோழனவன்

சோழராசன் பாண்டியனைக் காண்கிறது.

பாண்டியன்தேசத்திற் பக்குவமாய்வருகிறானே
வெகுதூரமாய்நடந்து வேஷ்டைகள் தான்பட்டு
தொலைதூரமாய்நடந்து தென்மதுரைவந்தானே
மதுரைவளநாட்டில் வந்துவிட்டான்சோழனவன்
கோட்டைக்குள்ளே நுழைய கொற்றவனாஞ்சோழனவன்
தூதுவர்களோடிப்போய் சொன்னார்கள்பாண்டியற்கு
சந்தோஷங்கொண்டு தனிமதுரைப்பாண்டியனும்
வரச்சொல்லுமென்று மன்னன்கொலுவாந்தான்
அப்போதுதூதுவர்வந் தறிக்கையிட்டார்சோழனுக்கு

கொலுமுகத்தைத்தேடி கொற்றவனுந்தானடந்து
பாண்டியனைக்கண்டு பரிவுடனேதெண்டனிட்டான்
தெண்டனிட்டதோழனுமே சித்திராங்கதராஜன்
திடுக்கென்றெழுந்திருந்து சிங்காதனமேடைவிட்டு
கூடவேகையெடுத்துக் கும்பிட்டான்பாண்டியனும்
கட்டத்தழுவி களிகூர்ந்துறவாடி
கூட்டிவந்துகொலுமுகத்திற் கூடவுட்காரவைத்தான்
இட்டசிம்மாசனத்தி லிருந்தானேசோழராசன்
சிநேகிதன்முகம்பார்த்து தென்பாண்டியராசன்
சோழன்முகம்பார்த்துச் சொல்லுகிறான்பாண்டியனும்
எங்கேவந்தீரென்னசேதி யென்னுயிர்க்குயிர்த்தோழா
அவசரமாய்வந்ததென்ன ஆட்கள்படையில்லாமல்
வேர்வைகள்பொழிய வேற்றுமுகமாவதென்ன
சிந்தைகலங்கத் திருமுகந்தான்வாட
பூமாலைத்தான்கசங்க பொன்மகுடந்தான்கருக
அழகுகள்தான்மாறி யனலிட்டமெழுகதுபோல்
உருமாறிவந்ததென்ன வுணர்வுடையமன்னவரே
எந்தனுக்குத்தான்தெரிய இயம்புங்காணென்றுரைக்க

சோழராசன் பாண்டியனிடத்திற் சொல்வது.

அவ்வார்த்தைதான்கேட்டு அப்போதுசோழனவன்
தனக்குள்ளவருத்தமதைச் சாங்கமாய்ச்சொல்லலுற்றார்
பன்னிரண்டுவருடமாகப் பாரில்மழையில்லாமல்
தவிக்கிறதேயுலகந் தாங்கமுடியவில்லை
நிருவகிக்கமாட்டாமல் நிலைக்காமலோடிவிட்டார்
கருகிறதேபூமியெல்லாங் கம்மிற்றேராச்சியங்கள்
தாளமுடியவில்லை தனிமதுரைப்பாண்டியரே
தானிளைத்துப்போனல் நன்மையோவுந்தனுக்கு
உம்முடையராச்சியந்தா னொருகுறையுமில்லாமல்
தாழ்வுகளில்லாமற் றாணிகள்தான்தழைக்க
தேசஞ்செழிக்க சிறப்புடனே நீர்வாழ்க
எளியவன்போலேநான் இந்தச்சிறுமைபட
பார்க்கமனம்வந்ததோ பாராளும்பாண்டியரே
என்-தேசஞ்செழிக்க சனங்களுமீடேற
அவ்வளவுநீருதவி யனுக்கிரகஞ்செய்தாலே
நன்றிமறப்பேனே நானுள்ள நாள்வரைக்கும்

சகாயமறப்பேனே தாரணியுள்ளளவும்
உதவிமறப்பேனே வூழியுள்ள நாள்வரைக்கும்
இந்தசகாயமதை எப்போதும்யான்மறவேன்
சஞ்சலந்தீரவைப்பாய்தனிமதுரைப்பாண்டியரே
அவ்வசனங்கேட்டு அழகுள்ளபாண்டியனும்
சோழன்முகநோக்கிச் சொல்லுவானொருவசனம்
என்னாலேயாகுமோ இவ்வுலகந்தான்தழைக்க
நம்மாலேயாவதுண்டோ நாடுகள்தழைத்தோங்க
உன்னாலுமென்னாலு முலகந்தழைத்திடுமோ
தேவாதிதேவர்திருவருள் தானிருந்தால்
நாதாதுதயவு நமக்குயிருந்ததென்றால்
சொக்காதுதய்வால் தொல்லுலகந்தான்றழைக்கும்
அவருடையசெயலல்லா லாசனுலாவதுண்டோ
தெரியாதோவுந்தனுக்குத் தெளிவறிந்தசோழமன்னா
நாதராலென்னுடைய நாடுந்தழைத்ததென்றான்
அவ்வசனங்கேட்டு அருஞ்சோழனே துரைப்பான்
உமதுதயவாலே உரிமைபடவெந்தனுக்கு
நாதருக்குச்சொல்லி நாடுதழைக்கவையும்
சொக்கருக்குச்சொல்லி தேசம்செழிக்கவையும்
என்றுமிகவேண்டினான் இராசனந்தப்பாண்டியனை
அப்படியேநல்லதென்று ஆனதொருபண்டியனும்
வேந்தன்வளவனுக்கு விருந்தமுதுசெய்துவைத்து

பாண்டியனுஞ் சோழனுஞ் சொக்கரிடம்
வந்து கண்டது.

இருவருங்கூடி யீசனது ஆலயத்தில்
சொக்காதுகோவிலுக்குத் துரிதமுடன்வந்தார்கள்
நாதரதுசன்னிதிக்கு நலமுடனேவந்தார்கள்
சுவாமியைக்கண்டு தொழுதடிகளைப்பணிந்தார்கள்
சாஷ்டாங்கதெண்டன் சரணமென்றடிபணிந்தார்
இருவருமேயடிபணிந்து ஈசரைத்தோத்தரித்தார்
கைகட்டிவாய்புதைத்து கர்த்தரைத்தோத்தரித்தார்
தும்பைமலர்சூடுகின்ற சொக்கரித்தோத்தரித்தார்
ஆலவிடமுண்ட ஐயரைத்தோத்தரித்தார்
தஞ்சையமுண்ட நாதரைத்தோத்தரித்தார்
இடறுகளை நீக்கிவிடும் ஈசனேசரணமென்றார்

துன்பத்தைநீக்கிவிடுஞ் சொக்கரேசரணமென்றார்
ஏழைமுகம்பாருமையா ஈசனேசரணமென்றார்
இப்போதுசொக்கலிங்கர் அந்தமொழிகேட்டு

சொக்கர் சொல்வது.

குஞ்சிரிப்புகொண்டாரே கொடிமுடிகைலாசர்
ஏதுவகையாக இருவருமாய்வந்தீர்கள்
வந்தவிபரமதை வகையாகச்சொல்லுமென்றார்
அவ்வசனங்கேட்டு அழகுள்ளபாண்டியனும்
சொக்கரைச்சேவித்து சொல்லுகிறான்ராசனவன்
மதுரையிலேவாழுகின்ற மகதேவஆண்டவனே
எந்தனுக்குக்குறைவில்லை யுந்தனருளாலே
இந்தசோழராசனுக்கு வந்ததொரு துன்பங்கள்
சொல்லத்தொலையாது துயரமிகத்தோன்றுதையா
மழைகள்கிடையாமல் வையகங்கள்பாழாக்கி
உலர்ந்தசருகதுபோ லுலகங்களத்தனையும்
வாடித்தவிக்கிறார்கள் மனிதர்களெல்லோரும்
அன்னங்கிடையாது அரசனதுபட்டணத்தில்
சோறுகிடையாது சோழனதுசீமையிலே
மிகவும்வருத்தமுற்றான் வேந்தனந்தசோழராசன்
தயவுபுரிந்து தக்காக்கவேண்டுமையா
மனதுகளித்து மழைபெய்யவையுமையா
நாடுசெழிப்பதற்கு நாதரேகண்பாரும்
பூமிசெழிப்பதற்குப் புனிதரேகண்பாரும்
கண்பார்க்கவேண்டுமென்று கர்த்தரேதெண்டனிட்டோம்

சொக்கநாதர் சொல்வது.

அவ்வசனங்கேட்டு ஆண்டவருமேதுரைப்பார்
அரசர்களேநீங்கள் அஞ்சவேவேண்டாங்காண்
எவனெவன்றன்றனக்கு எந்தவதிகாரமுண்டோ
அந்தவதிகாரம் அவனவனேசெய்கிறது
எனக்கந்தவதிகாரம் இல்லைகாண்பாண்டியனே
வருணபகவான் மனதுவைத்தாராமாகில்
பேயாமழைபெய்து பெருகவைப்பார்பூமியெல்லாம்
சாகரமாய்ப்பெய்து தரணியெல்லாம்பெருகவைப்பார்
வருணனுக்கதிகாரன் வானவர்கோனிந்திரன்காண்
மேகத்துக்கதிகாரன் மேலானஇந்திரன்காண்

இந்திரனை நீங்க ளிருவரும்வணங்கிடுங்கள்
தேவேந்திரனைத் தெரிசித்தீராமாகில்
உங்கள்குறைவதனை யுரையுங்களிந்திரற்கு
மனதிரங்கவேண்டி வணங்கினீராமானால்
வருணனைத்தானழைத்து மழைபெய்யவைப்பான்காண்
மேகத்தைத்தானது விடைகொடுப்பானிந்திரனும்
இந்திரன்றன்றயவால் எங்குந்தழைத்தோங்கும்
தெய்வலோகம்போங்களென்று சிவனார்விடைகொடுத்தார்
அவ்வசனங்கேட்டு அழகுதுரைபாண்டியனும்
சொக்கர்விடைகொடுக்கச் சோழனும்பாண்டியனும்
நல்லதென்றுசொல்லி நாதரடிபணிந்து
இருவருமாய்நடந்தார்கள் ஈசரதுகோயில்விட்டு
ஆலயத்தைவிட்டு அப்பால்நடந்தார்கள்

இந்திரலோகங் காண்கிறது.

தெய்வலோகம்போச் சீக்கிரமாய்த்தானடந்தார்
சோழனும்பாண்டியனுந் துருசாய்நடந்தார்கள்
இந்திரலோகத்திற்கு இசைந்துநடந்தார்கள்
தெய்பதியதற்குச் சீக்கிரமாய்த்தானடந்தார்
அமராபதிதேடி அரசர்கள்தானடந்தார்
வானுலகங்கிட்டி வருகுமந்தவேளையிலே
ஆயிரங்கண்ணரவையிலமர்ந்திருந்தார்
முப்பத்துமுக்கோடி முனிவர்களுந்தேவர்களும்
நாற்பத்தெண்ணாயிரம் நலமானரிஷிகளுடன்
தும்புருநாரதருந் துருவாசமாமுனியும்
கிம்புருடர்கின்னரர்கள் கெருடகாந்தருவருடன்
கின்னரிவீணைகள் கீதங்கள்பாடிநிற்க
மேனகைரம்பையும் மெல்லிதிலோர்த்தமையும்
ஊர்வசிநாட்டியங்க ளுச்சிதமாய்ச்செய்துநிற்க
இந்திராணிதேவியுடன் இந்திரன்கொலுவிருந்தான்
அந்தச்சமயத்தி லழகுள்ளபாண்டியனும்
சோழனும்பாண்டியனுந் துரிதமாய்வந்தார்கள்
இந்திரன்கொலுத்தேடி யிருவரும்வருகையிலே
கண்டேனேஇந்திரனும் காவலர்கள்வருகிறதை
பூலோகராசாக்கள் பொன்னுலகம்வருகிறார்கள்
நரமனிதராசாக்கள் நாடிவரக்காரணமேன்
இவர்வலுவால்வருவாரோ ஈஸ்பரனார்தன்னருளால்

சொக்கருள்பெற்று சொக்கபதிவருகிறார்கள்
நல்லதென்றுசொல்லி நலமுடனேபோர்த்திருந்தார்
பாண்டியனுஞ்சோழனுமாய் பதிகொலுவில்வந்தார்கள்
இந்திரனைக் கண்டது.
சொர்க்கலோகஇந்திரனைச் சோழனவன்தான்பார்த்து
மிகவும்பயந்து மேன்மையுள்ளஇந்திரற்கு
அஞ்சிப்பயந்து அடிதொழுதுதெண்டனிட்டான்
சாஷ்டாங்கதெண்டனிட்டான் சசிதேவிநாயகற்கு
தெண்டனிட்டசோழனைத் தேவேந்திரன்வாழ்த்தி
வணங்கியசோழனை வாயாரத்தான்வாழ்த்தி
பொற்பீடம்போடுமென்றார் பூலோகச்சோழனுக்கு
எட்டுப்படியின்கீழிட்டார்கள் பொற்பீடம்
அந்தமுள்ளபீடத்தி லமர்ந்தானேசோழனவன்
மதுரையாளும்பாண்டியன் வணங்காமற்றானிருந்தான்
நம்மைப்போலேயிவனொரு ராசனல்லோஇந்திரன்தான்
இந்திரனைநாமும் எப்படிவணங்குறது
பூலோகஇந்திரன்போற் பொன்மதுரையாளுகிறோம்
சங்கரன்கிருபையினாற் றாணியையாளுகிறோம்
ஈசன்தயவிருக்க இவனைநாம்வணங்குவதோ
சொக்கர்மகத்துவத்தால் தொழுகாமலெதிரேநின்றான்
எதிரேநின்றபாண்டியனை யிந்திரன்தான்பார்த்து
வந்திருக்கும்பாண்டியன்றான் வணங்காமலிருப்பதென்ன
நம்மைமதிக்கவில்லை நானெனபாண்டியனும்
எதினால்மதியாம லிருக்கின்றான்பாண்டியனும்
சொக்கர்வலுமையினாற் றொழுகாமற்போனானே
நாதர்துதயவால் நம்மைமதிக்கவில்லை
பூலோகமன்னனுக்குப் பெருமைகள்தானுமுண்டோ
கெருவம்படைத்தோர்க்கு கேடுவருந்தெரியாது
இவனுடையமகத்துவத்தை யினியறியவேண்டுமென்று
நல்லதனத்திலே நடுங்கவைக்கவேண்டுமென்று
உபாயத்தினாலே யொடுங்கவைக்கவேண்டுமென்று
மர்மத்தைக்கொண்டாராம் வானவர்கோனிந்திரனும்
ஆராதாதுவரே யருகிருக்குங்காவலரே
சரியொத்தபாண்டியற்குச் சரீபீடம்போடுமென்றார்
எதிராகப்போட்டார்கள் இலங்கபொற்சிம்மாசனம்
குந்துமென்றார்பாண்டியனைக் கொலுக்கூடசபைதனிலே

சரியாகக்குந்திஞன் தனிமதுரைப்பாண்டியனும்
ஆரடாதுவரே யரசாளும்மன்னனுக்கு
வந்ததொருமன்னனுக்கு மாலையொன்றுபோடுமென்ருர்
கண்காட்டிஞரிந்திருங் கனமூடனேமல்லருக்கு

இந்திரன் கெண்டிமாலை சூடினது.

பாண்டியராசனுக்குப் பதித்தமுத்துக்கெண்டியொன்று
ஆயிரம்பேர்சுமக்கும் ஆணிமுத்துக்கெண்டியொன்று
கொண்டுவந்துபோடுமென்ருர் கூடல்வாழ்பாண்டியற்கு
சூக்ஷமாயொருமாலை துரிதமுடன்போடுமென்ருர்
அப்படியேஓடிஞர்கள் அந்தப்புறந்தானுலைழந்து
ஆயிரம்பேர்மல்லர் ஆள்பிடித்துத்தோளுென்றி
நெக்கியெடுத்தார்கள் நேரானமுத்துக்கெண்டி
இத்தோடேபாண்டியன்ருன் ஈரல்நடுங்கிடுவான்
தூக்கிக்கொண்டுவந்தார்கள் சூராந்தமல்லர்களும்
இந்திரன்கண்காட்ட எதிரேவந்தார்மல்லர்களும்
பாண்டியற்குவெகுமதியாய்ப் பார்மாலைசூடுமென்ருர
போட்டார்கள்கழுத்திலேதான் போர்மல்லராயிரம்பேர்
அப்பெரியமாலையைத்தான் அழகுள்ளபாண்டியனும்
நாதாதுகிருபையிஞல் நடுக்கங்களில்லாமல்
சொக்கரைத்துதிசெய்து தோளிலேதாங்கிக்கொண்டான்
மார்பைநெளித்து மாலையைத்தாங்கிக்கொண்டான்
கண்டார்களெல்லாருங் கனமானபாண்டியனை
தேவேந்திரன்கண்டான் திறமையுள்ளபாண்டியனை
இவஞலேயொன்றுமில்லை யீசராதுதன்பெலன்தான்
அறிவோமிவனுடைய ஆங்காரவலுமையென்று
பாண்டியன்மேலே பகைவைத்தானிந்திரனும்
ஒருவருக்குந்தெரியாமல் உள்ளத்தில்பகையைவைத்தான்
பாண்டியன்முகம்நோக்கிப் பண்புடனேயிந்திரரும்
சோழனும்நீருமாய்ச் சொற்கபதிவந்ததென்ன
வந்தவயணமதை வகைபிரித்துச்சொல்லுமென்ருர்
அப்போதுபாண்டியனும் அருள்புரிந்துஉரைப்பான்
எந்தன் அலுவலிஞலிவ்விடத்தில்வந்ததில்லை
சோழனுக்காயிங்குவந்தேன் சொர்க்காதிபதியோனே
அவ்வரசனலுவல்கொண்டு அமராபதிவந்தேன்
தொந்தரைகள்படுகிருள் சோழனிந்தமன்னவனும்
மழைமாரியில்லாமல் வருத்தங்கள்மிகவாகி

கம்முதுஇராச்சியங்கள் கருகிறதேபூமியெல்லாம்
பரிசனங்களெல்லவரும் பரதேசியானார்கள்
பன்னிரண்டுவருஷம் பாரில்மழைகிடையாது
அந்தவிசனத்தாலடுத்துவந்தாரெத்தனைத்தான்
என்னாலேயாகாதென்று பீசாண்டைபோயுரைத்தேன்
உம்மண்டைபோக வுத்தரவுசெய்தார்காண்
ஈசன்விடைபெற்று இவ்விடத்தில்வந்தோம்நாம்
உம்மாலேயான உதவிசெய்யவேண்டுமென்றான்
அந்தமொழிகேட்டு ஆயிரங்கண்ணிந்திரும்
சோழன்முகம்பார்த்துச் சொல்லுவாரிந்திரும்
எதுக்கும்அஞ்சாதே இன்பமுள்ளமன்னவனே
ஈசர்கிருபையினா லின்பசவுக்கியமுண்டு
அப்படியேசெய்விப்பேன் அஞ்சாதேசோழா நீ
நெறிமுறைமைதானறிந்த நீதியுள்ளமன்னவனே
நாதர்தன்வார்த்தைக்கு நானென்றும்பேசுவனோ
அப்படியேயானடப்பேன் அரசனேநடவுமென்றார்
தேவேந்திரான்சொல்லத் திடுக்கென்றெழுந்திருந்து
சாஷ்டாங்கதெண்டனிட்டுச சரணமென்றடிபணிந்தான்
வாழ்த்திவிடைகொடுத்தார் வானவர்கோனிந்திரும்
உத்திரவுபெற்றான் உலகாளுஞ்சோழராசன்
பா..டியனுமப்போது பக்குவமாயெழுந்திருந்து
இந்திரரேவிடைதாரும் எங்களிருவருக்கும்
போய்வாருமென்று போகவிடைகொடுத்தார்
அதிகமனமகிழ்வாய் அரசர்களிருவருமாய்
தெய்வலோகம்விட்டுத் திரும்பினார்பூலோகம்
மதுரைவளநாட்டில் மன்னவர்கள்வந்தார்கள்
வந்தசோழனுக்குவெகு மதிகள்செய்தனுப்பிடவே
பாண்டியன்விடைபெற்று பார்மன்னன்சோழனவன்
சொக்கரைத்தரிசித்துச் சோழன்நடந்தானே
தன்னுடையராச்சியத்திற் றனஞ்செயனுந்தானடந்தான்
இப்படியாகச்சோழன் இருக்குமந்தநாளையிலே

இந்திரன் கோபித்துச் சோழன் பெருமைபடவும்
பாண்டியன் சிறுமைபடுவுஞ் செய்தது.

ஆகாசஇந்திரனர் அன்புடனேஅதுசெய்தார்
பாண்டியன்வந்ததும் பார்சோழன்வந்ததும்
தன்னைவணங்காமற் றயிரியமாய்ப்போனதுவும்

நரனுனபாண்டியன் நம்மைவணங்காமல்
மதியாமற்போனதென்ன மட்டடக்கவேணுமென்று
கோபங்கள்கொண்டானேகொழுந்தணல்போலிந்திரனும்
எரிபாந்தகண்களுடன் இந்திரனுரேதுசெய்தார்
மேகக்களேழையும் மேன்மையுடன்வரவழைத்து
சப்தமேகமத்தனையுந் தானேவரவழைத்து
வருணபகவானை வரவழைத்துஇந்திரனும்
கேளுங்கள் நீங்கள் கெடியானஎன்வசனம்
இன்றுமுதல் நீங்கள் ஈடழிவான்மதுரையிலே
கால்வைக்கக்கூடாது கருமுகிலே நீங்களெல்லாம்
அநீதவான்மதுரையிலே அடிவைக்கக்கூடாது
தூறல்விழப்போகிறீர்கள் துன்மார்க்கன்மதுரையிலே
கட்டியடிவையாமல் இடைந்துமேபெய்யுங்கள்
அவனுடையசீமைகளி லடிவைக்கப்போகாது
மதுரையிலேநீங்கள் மழைபெய்தீராமானுல்
கால்விலங்குங்கைவிலங்குங் கழட்டாப்பெருவிலங்கும்
தாள்விலங்குந்தோள்விலங்குந் தரிக்காப்பெருவிலங்கும்
விலங்குகள்போட்டு வெட்டியெறிந்திடுவேன்
வார்த்தையைத்தடுத்து வருஷிக்கப்போகிறீர்கள்
சோழனதுசீமையிலே சொர்ணமழைபெய்திடுங்கள்
மாதமும்மாரி வருஷியுங்கள்சோழனுக்கு
முப்போகந்தான்விளைய மும்மாரிபெய்திடுங்கள்
கலகந்தெளியவேதான் கருமுகிலேபெய்திடுங்கள்
எந்நாளுஞ்சோழனுக்கு இடையூறுவாராமல்
அவனுடையநாட்டிலே அமர்ந்துபொழியுங்கள்
என்றுவிடைகொடுத்தார் ரீந்திரனுரப்போது
நல்லதென்றுசொல்லி நலமானமேகமெல்லாம்
மதுரைநாடாமல் வருகிறதேமேகமெல்லாம்

சோழராசன் பெருமை பட்டது.

சோழனதுசீமையிலே சொலிக்கிறதேபெருமழைகள்
கடலிரச்சல்போலே கமறிற்றிறேமேகங்கள்
குமறிற்றுமேகமெ லாங் குடங்கொண்டுவார்த்தாப்போல்
இறைகிறதேமேகங்கள் ஏகவெள்ளம்பெறுகிறது
சேனைமழைப்போலே சொரிகிறதேமேகமெல்லாம்
நல்லமழைபெய்வதனுல் நாடுஞ்செழுத்திடவே
பூமிகுளிர்ந்தனவே பொய்கைநிரம்பினவே

ஏரிகள் நிரம்பி யெதிர்க்கிறதேயேகவெள்ளம்
மடுவுகள் நிரம்பி வழிகிறதேபெருஞ்சலங்கள்
ஆறுகள் நிரம்புவதால் அடைபடும்வெகுஜனங்கள்
கழனிகள் நிரம்பி கால்வாய்கள் தானிறம்பி
ஊற்றுகள் தான்சுரந்து ஓடிற்றேஜலம்விசையாய்
தடாகங்கள் தானிறம்பி தாமரைகள் பூத்தனவே
வயல்கள் நிரம்பி வாய்க்காலுந்தானோடி
உலர்ந்தமரங்களெல்லாம் உயிருண்டாய்த்தளிர்த்தனவே
அடியற்றமரங்களெல்லாம் அன்பாய்த்தளிர்த்தனவே
இலையுந்தழைகளெல்லாம் ஏகமாய்த்தளிர்த்தனவே
காடுசெடிகளெல்லாம் கனக்கவேதான் றழைக்கும்
செடிகள்மரங்களெல்லாஞ் செழிக்கத்தழைத்தனவே
பூர்க்காமரங்களெல்லாம் பூத்துச்சொரிந்தனவே
காயாமரங்களெல்லாம் காய்த்துச்சொரிந்தனவே
கிள்ளப்பழுத்தனவே கிளிகள்வந்துசேர்ந்தனவே
அள்ளப்பழுத்தனவே அணிகள்வந்துபாய்ந்தனவே
செந்நெல்விளைந்தனவே கேசஞ்செழித்தனவே
பயிர்கள்விளைந்தனவே பலனைக்கொடுத்தனவே
சோலைகள்சாலைகள் சூழ்ந்ததடாங்களில்
குயில்களெடுத்தனவே குருவிகளும்வந்தனவே
மயில்களடுத்தனவே வான்கோழிவந்தனவே
தாராவும்உள்ளானுந் தாவியடுத்தனவே
அன்னங்கள்பேடைகள் ஆந்தையடுத்தனவே
கொக்கும்வக்காகூச்சலிட கோகிலங்கள்பாடுவன
பண்டுகள்தின்று பட்சிகள்பாடுவன
கனிகளைத்தின்று களித்தனபறவையெல்லாம்
ஏருகட்டியுழுவாரு இளநாற்றுநடுவாரும்
பயிரிடுங்குடிகள் பலப்பட்டுப்போனார்கள்
ஓடுங்குடிகளெல்லாம் ஊரைவந்துசேர்ந்தார்கள்
பரதேசியாதேசி பஞ்சபனுதியெல்லாம்
சோழராசன்பட்டணத்திற் சுகப்பட்டுவாழ்ந்தார்கள்
பிச்சைக்காரரெல்லாம் பெருமையடைந்தார்கள்
சோழமண்டலமெல்லாஞ் சுகமாய்த்தழைத்தனவே
சோழமகாராஜன் தொலைத்தான்விசனமெல்லாம்
கீர்த்திகளைப்பெற்றான் கிருபைக்கடலானான்
இந்திரனைத்தன்மனதிலெண்ணி நினைந்திருப்பான்

மாதமும்மாரி வருஷிக்குமண்டலத்தில்
சோழமண்டலமென்று சொல்வார்கவிவாணர்
அப்படியாகவாழ்ந்தான் அழகானசோழமன்னன்

பாண்டியன் வறுமை யடைந்தது.

பாண்டியநாட்டார் பரதேசம்போருகிறார்கள்
மழைகள்கிடையாது மதுரைநகர்சீமையிலே
தூரல்கிடையாது தென்மதுரைப்பூமியிலே
துளிகள்விழுவதில்லை சொக்கர்மதுரையிலே
காய்ந்துலர்ந்துபோயினவே கனமதுரைப்பட்டணத்தில்
எறிந்துபுகைகிறதே ஈரங்கிடையாமல்
குடிக்கநீர்கிட்டாது குளங்கள்மடுக்களெல்லாம்
காகங்குடிப்பதற்கு காண்டிஜலம்கிடையாது
ஆறுகுளங்களெல்லாம் அடங்கலும்வாண்டனவே
ஏறிகள்வாண்டனவே ஏற்றக்கோலாழமட்டும்
பூமிக்குள்சூடெழும்பிப் பொங்கிற்றேதணலாக
விளைவுகள்கிடையாது வேந்தன்மதுரையிலே
களைவுகள்கிடையாது கனமதுரைபூமியிலே
பொய்துறைநாட்டிலே புழுதியடைந்ததுவே
சாகுபோலுலர்ந்தனவே தழைத்தமரங்களெல்லாம்
பூவியிலுலர்ந்தது பூண்டுங்கிடையாது
பறவைகள்கிடையாது பாண்டியன்தேசத்தில்
குடிவலசைவாங்கினர் கொடிமதுரையுள்ளவர்கள்
பஞ்சைபனுதியாய்ப் பரதேசம்போகிறார்கள்
அன்னங்கிடையாது அழகுள்ளமதுரையிலே
மதுரையைச்சுற்றி மகாவனங்கள்செடிகளெல்லாம்
காய்ந்துமிகத்தீய்ந்து கரும்புகைச்சல்கொண்டனவே
தங்கநிழல்கிடையாது தனிமதுரைப்பூமியிலே
ஊரிலேயள்ளவர்கள் உறக்கங்கள்கொண்டார்கள்
பாழடைந்தமுகமானர் பாண்டியநாட்டிலுள்ளோர்
அன்னவிசாரம் அதுவேபெரிதாச்சு
பன்னிரண்டுவருஷம் பாரக்கருப்பாச்சு
சரீரம்வெளுத்தார்கள் சல்லடைக்கண்ணானர்கள்
பெண்டுடனேபிள்ளை புருஷர்களொருதேசம்
திக்குகள்கெட்டுத் திசைமாறிப்போனர்கள்

அப்படியலைந்து அணிமதுரைப்பூமியிலே
இந்திரனாலே இடருகள்நேர்ந்தனவே
ஆயாசத்துடனே அணிமதுரைப்பாண்டியனும்
மழையில்லாநாடு வையகம்தானுமோ
என்றுவிசனமா யிருக்குமந்தவேளையிலே
மேகம்பொழியுந் தனிச்சோழன்நாட்டிலே
மேகங்குமரி மேலாகப்போய்விடுமாம்
மதுரையைநாடாமல் வகையுடனேபோய்விடுமாம்
இப்படியோடும்போது இதிலேயொருமேகம்
குட்டிமேகமொன்று குறுக்கிட்டுஓடும்போது
வருகிறவிசைதனிலே மதுரையொன்றுதெரியாமல்
பொழிந்துகொண்டேயோடிற்று போகும்விசைதனிலே
அந்தமழையெல்லாம் அணிமதுரைபெருகிறது
வெள்ளம்புரண்டது வேந்தன்மதுரையிலே
வைகைப்பெருக்கெடுத்து மாவெள்ளம்ஓடுவதை
அதுகண்டுபாண்டியனும் அவசரமாயெழுந்திருந்தான்
அரிதமாயெழுந்திருந்தான் சுந்தரப்பாண்டியனும்

பாண்டியன் வைகையாற்றை அணைகட்டியது.

ஓடுகிறவெள்ளத்தை உள்ளடக்கவேணுமென்று
அப்புறம்போகாமல் அணைகட்டவேணுமென்று
ஆராடாதூதுவனே அணிமதுரைப்பட்டணத்தில்
வீட்டுக்கோராள்தான் விடுபட்டுவரவேணும்
ஆளனுப்பாவிட்டால் ஆக்கினைசெய்வேனென்று
அணைகட்டவரச்சொல்லி அடியடாதமுக்கென்றான்
அப்படியேதானடித்தான் ஆனதொருசாம்புவனும்
அந்தத்தமுக்கடிக்க அணிமதுரையுள்ளவர்கள்
வீட்டுக்கோராள்கள் விடுபட்டுவருகிறார்கள்
அவரவர்கள்தம்முறைக்கு ஆளொருவர்வாரார்கள்
மண்வெட்டிக்கொண்டு வருகிறார்களணைகட்ட
பங்குவளவிதமாகப் பாறைகொண்டுஓடிவந்தார்
அவரவர்க்குப்பங்கு அளந்துகொடுத்தார்கள்
அளந்திட்டபங்குகளில் அதிலேகுறைபட்டால்
பங்குள்ளவிதக்காரனைப்பட்டாவுக்கிறையிடுவேன்

என்றுதிட்டஞ்செய்தான் இராசனந்தபாண்டியனும்
அவரவர்கள்பங்குவீதம் அனைவருங்கட்டும்போது
மதுரையிலேயொருத்தி வாணிச்சியென்பவளாம்
அவளுக்குயாதொரு ஆண்திக்குதானுமில்லை
அவளுக்கொருபங்கு அணைகட்டச்சொன்னார்கள்
பிட்டுசுட்டுவிற்று பிழைக்குமந்தவாணிச்சி
என்னசெய்வேனென்று எண்ணமிட்டாள்வாணிச்சி
ஆளுங்கிடையாது ஆருமற்றபாவிநான்
எனக்கிட்டஒருபங்கும் எப்படிக்குச்செய்வேன்யான்
அணைகட்டஎந்தனுக்கு ஆளுங்கிடையாது
ஆளில்லையென்றால் அரசனுங்கேட்பானே
என்றுவிசனமிட எண்ணியிருக்கையிலே

வாணிச்சி பிட்டுக்கு சொக்கர் மண் சுமந்தது.

அவளுடையவிசனத்தை யாற்றவேவேணுமென்று
அட்டாளுஞ்சொக்க ரையாவரேதுசெய்தார்
அவளுக்குஆளாகி அணைகட்டவேணுமென்று
ஒட்டனைப்போல வுருவெடுத்துச்சொக்கலிங்கர்
தட்டுடனேமண்வெட்டி தலைமேலேதானெடுத்து
வாணிச்சிமுன்பாக வந்தாரேசுவாமியவர்
கண்டாளேகிழவியரும் கடுகவேஏதுசொல்வாள்
ஆரடாஒட்டாநீ அணைகட்டவந்தாயே
என்பங்குக்காளாகி யெனக்கணைக்கட்டுவாயோ
கட்டுவேனென்றார் கனமதுரையொட்டனவர்
கேட்டதொருகூலி கிருபையுடன்தருவவேனென்றார்
அவ்வார்த்தைக்கேட்டு அந்தவொட்டனேதுசொல்வார்
கூலிக்குபிட்டு கொம்பனையேநீகொடம்மாள்
பிட்டுக்குமண்சுமந்து போடுகிறேனணையாக
அப்படியேநல்லதென்று அவ்வாணிச்சிக்கிழவி
பிட்டுசுடும்போது பிட்டுமுதிர்ந்ததுதான்
உதிர்ந்தபிட்டைத்தானெடுத்து உத்தமியுங்கொடுத்தாளே
அந்திமடியில்வைத்து ஈஸ்வரனொட்டனவர்
வாணிச்சிபங்குக்கு வந்தாரேயணைகட்ட
உதிர்ந்தபிட்டைத்தின்று ஒருகூடைமண்சுமந்து

போடுவாரொருதட்டு பிட்டுஞ்சரியாகும்
மறுபடியும்தான்வருவார் வாணிச்சியண்டையிலே
பிட்டுசுடுவாளாம் பொடிபொடியாயுதிர்ந்திடுமாம்
உதிர்ந்ததொருபிட்டுக்கு ஓடிவந்துநிற்பாரும்
பிட்டெடுத்துக்கொடுப்பாள் பேருனஒட்டனுக்கு
பிட்டுதின்றுபோவார் போடுவார்தட்டுமண்ணு
ஒருதட்டுமண்ணுக்கு உதிர்ந்தபிட்டுசரியாகுமாம்
வாணிச்சிஅண்டைக்கு வந்துநிற்பாரொட்டனவர்
பிட்டுசுடும்போது பொடிபொடியாய்யுதிர்ந்திடுமாம்
உதிர்ந்ததொருபிட்டுக்கு ஓடிவந்துநிற்பாராம்
பிட்டைக்கொடுப்பாளாம் போவாராம்தின்றுகொண்டு
ஒருதட்டுமண்போடுவதி லுதிர்ந்தபிட்டுசரியாகும்
மறுபடியும்வாராரும் வாணிச்சிபிட்டுக்கு
ஒருபிட்டுசுட்டாலும் உதிராதிருப்பதில்லை
சுடப்பட்டபிட்டனைத்துஞ் சொரசொரென்றுதிர்ந்திடுமா
ம், உதிர்ந்ததொருபிட்டுக்கு ஓடிவந்துநிற்பாரும்
பிட்டுதின்றுகொண்டே போடுவாரொருதட்டு
பிட்டுவிலையாகவில்லை ஒட்டன்வேலைசாயவில்லை
பாதியணையாயிற்று பாதியின்னங்கட்டவில்லை
அவரவர்பங்குக்கு அணைகட்டியாயிற்று
வாணிச்சிபங்குக்கு வாப்புகட்டித்தீரவில்லை
பிட்டுகளைத்தின்கிறதும் போவதும்வருவதுமாய்
ஒட்டன்திரிவதிலே உதிர்ந்தபிட்டுசரியாயிற்று
பொழுதுமறைந்தது பொன்மதுரைபாண்டியனும்
கட்டினஅணைகளை கனமுடனேபார்த்துவந்தான்
வாணிச்சிபங்குக்கு வாப்பின்னுங்கட்டவில்லை
ஆருதடாயிந்தபங்கு அணைகட்டித்தீரவில்லை
எவனதடாயிந்தஅணை யென்றனேபாண்டியனும்
அரசனுக்குச்சொல்லுகிற ரணைகட்டுமன்னவர்கள்
இந்தநகரிற்பிட்டுசுட்டு எதார்த்தமாய்விற்குகின்ற
நன்னிலைசேர்வந்தியை நங்கையொருத்திபங்கு
வாணிச்சிபங்குக்கு வந்தானேரொட்டனவன்
அவனுடையபங்கிதுதான் அணைகட்டவில்லையென்றார்
கோபங்கள்கொண்டானே கொற்றவனார்பாண்டியனும்
எங்கேயடாஒட்டனவ னிழுத்துக்கொண்டுவாருமென
அடிக்குங்கோற்கைக்கொண் டருகில்நின்றசேவகர்கள்

திடுக்கென்றுதான்பயந்து தேடினார்வொட்டனையும்
ஒட்டனைப்பிடித்துவந்தார் உலகாளும்ராசரண்டை
கண்கள்சிவப்பேறிக் கனமதுரைபாண்டியனும்

சொக்கர் பிரம்பா லடிபட்டது.

பிட்டுக்குமண்சுமந்த பித்தனென்றறியாமல்
ஒட்டனென்றெண்ணியல்லோ ஓங்கியேயடிக்கலுற்றான்
கைபிடித்தபிரம்புதன்னை கரகரென்றுதான்சுழட்டி
ஒட்டன்முதுகின்மேல் ஓங்கியேயடித்தானே
ஐயாந்தசொக்கருக்கு அந்த அடிபடவே
வருத்தங்கள்கொண்டாரே மதுரைச்சொக்கநாதருந்தான்
அந்தவடியுந்தான் அனைவர்க்கும்பட்டனவே
அவரவர்கள்தம்முதுகில் அடித்தழும்புநேர்ந்தனவே
திக்குதிசைகளெல்லாம் தீவாந்தரங்களெல்லாம்
அண்டங்கள்தீவுகளும் ஆகாசமெவ்விடத்தும்
சகலஜீவஜெந்துக்கும் தழும்புமிகவுண்டாச்சு
பாண்டியன்முதுகின்மேற் பார்த்தழும்பாயிற்று
எல்லவரும்பயந்தா ரிந்தவடியாலே
பாண்டியனுமப்போது பயந்துநடுநடுங்கி [து
எங்கேயந்தவொட்டனென்று ஏறெடுத்துப்பார்க்கும்போ
எங்கெங்குந்தேடினான் இனிமதுரைபாண்டியனும்
காணுததினாலே காவயினிடிவிழுந்தான்
வந்தவரொட்டனல்ல மாயாண்டிசொக்கரவர்
ஆண்டவராகவேணும் ஆளடிமைசெய்யவந்தார்
தெரியாமற்போச்சுதென்று சிந்தைமிகவாடி
தீவினைக்காளானோம் தெய்வமென்றுபாராமல்
வல்வினைக்காளானோம் வரனென்றறியாமல்
இந்தவிதிப்பயனை எப்போதுலைத்திடுவோம்
வந்தது நமக்குமல்லோ மதிமோசமென்றுசொல்லி
எந்தவிதத்திலேயும் ஈடேறப்போறதில்லை
தெரிந்தது நமக்கென்று தென்மதுரைபாண்டியனும்
மெத்தவிசனமாய் விடுதிக்கிவந்துவிட்டான்
அழகியசொக்கரவர் ஆண்டவனாப்போது
ஒட்டனுருவமதை உத்தமனார்தான்மறைத்து
ஆலயத்தில்வந்தாரே அட்டாளும்சொக்கலிங்கர்

வருத்தத்துடனேயவர் வந்து நின்றாராலயத்தில்
அப்போதுமீனாட்சி யண்டையிலேஓடிவந்து
ஏதுகாண்சுவாமி நீரு மிப்படிக்குவந்ததென்ன
அலையகுலையவந்தீர் அக்குறையைச்சொல்லுமென்றாள்
கேளுமென்னுயசியே கிளிமொழியேமீனாட்சி
வாணிச்சிக்காகவல்லோ மண்சுமக்கபோயிருந்தேன்
பிட்டுக்குமண்சுமக்கப் பிரம்படிபட்டுவந்தேன்
அடித்தான்பிரம்பாலென் னங்கந்தழும்பாக
கொடுத்தான்முதுகின்மேற் கொடும்பாவிபாண்டியனும்
சகாயஞ்செய்யப்போனேன் அபாயம்வந்துநேர்ந்ததுவே
அபாயமென்னைசெய்தவனை ஆதரிக்கப்போறதில்லை
என்றுரைக்கசொக்க ரெடுத்துரைப்பாள்மீனாட்சி
அறியாமற்செய்தபிழை பெரியோர்மனம்பொருப்பார்
மருரூபங்கொண்டல்லவோ மண்சுமக்கப்போனதினால்
ஆளடிமையென்றுசொல்லி அடித்தான்பிரம்பாலே
ஐயனென்றுதானறிந்தா லடிபணிந்துதொழுதிடுவான்
தெரியாதவன்செய்தால் சித்தத்தில்வையாமல்
ஆதறிக்கவேண்டுமென்றாள் அங்கயற்கண்மீனாட்சி
அவ்வசனங்கேட்டு அழகுசொக்கரேதுசொல்வார்
என்னையடித்தயடி எல்லோர்க்கும்பட்டதுகாண்
உலகத்துக்கெல்லாம் உரைத்ததேபிரம்படிதான்
சித்தர்கள்முனிவர்கள் தேவருக்கும்பட்டதுவே
வானவரிஷிகளுக்கும் மாயனுக்கும்பட்டதுவே
சப்தரிஷிகளும் தபோதனர்க்கும்பட்டதுவே
கன்னியர்கள்கெற்பங் கருவுக்கும்பட்டதுவே
இந்தப்பழிபாவம் எப்படிதொலையுமடி
இப்பழிக்குபெண்ணே மைந்தன்வரந்தான்கொடுக்கேன்
கருவுதரிக்கவேதான் கன்னியரேநான்கொடுக்கேன்
அந்தப்பழிபாவம் அத்தோடேதொலையுமடி
என்றுமிவருரைக்க ஏந்திழையும்பேசாமல்
மௌனமாய்த்தானிருந்தாள் மதுரைமீனாட்சியரும்
இப்படிசிலகாலம் இருக்குமந்தவேளையிலே
பாண்டியநாடு பரிசனங்களெல்லவரும்
அரசனுடநாடு அருமைமழையில்லாமல்
தத்தளித்துப்போகிறதே தனிமதுரைபூமியெல்லாம்
அரசாளுத்தண்டித்த அந்தகொலைபாதகனும்

நம்முதேநாட்டிற் கதறுதேபூமியெல்லாம்
மைந்தருமில்லை மகுடமுடி அரசனுக்கு
பிள்ளைகளுமில்லை பேரானமன்னனுக்கு
அப்படியாகத்துன்பம் அரசனும்பட்டிருந்தான்
ஆரையும்வணங்காத அந்தசித்ராங்கதனும்
சிறுத்தேனெனச்சொல்லி பெருத்தவரையோயடுத்தான்
தெய்வமேகதியென்று தேசத்தையாண்டிருந்தான்
சொக்கரேகெதியென்று தோத்திரங்கள்செய்திருந்தான்
பன்னிரண்டுதன்வருடம் பாரில்மழையில்லாமல்
துன்பங்களுடனேயல்லோ துரைத்தனமும்பண்ணிவா

சொக்கரும் மீனாட்சியும் கானகம்வந்தது.

மதுரையிலேவாழும் மகாதேவர்சொக்கலிங்கம்
அங்கயற்கண்மினாக்ஷி அம்மனும்சொக்கருமாய்
இருவருமப்போது ஏகாந்தவேளையிலே
தேவியரைப்பார்த்து சுவாமியவரேதுசொல்வார்
பெண்மணியேமீனாட்சி பொற்கொடியேஆலயத்தில்
தணலாயெரிக்கிறது தனிக்காற்றடியாமல்
ஒடுக்கங்களாகிறது உள்மதுரைபட்டணத்தில்
காத்துவாடைக்குநாம் கானகத்திற்போய்வரலாம்
மதுரையைச்சுற்றி வருவோம்நாம்பெண்மயிலே
வாருமென்றுசொக்கர் மயிலணையைத்தானழைக்க
அப்படியேநல்லதென்று அங்கயற்கண்மீனாட்சி
சம்மதப்பட்டு ரதியும்புருஷனுமாய்
இடபத்தின்மேலேறி பீஸ்பரனும்பீஸ்பரியும்
எருதின்மேலேறி யிருவரும்வெளியானார்
ஆலயத்தைவிட்டு மகாதேவர்வெளியானார்
மதுரையைவிட்டு மகாதேவர்வெளியானார்
பட்டணங்கள்சுற்றி பார்த்துவருகையிலே
அழகுமறைந்தது அழகானதென்மதுரை
அண்டவொருநிழலும் ஆதரிக்கக்கிட்டாது
ஒண்டநிழலில்லை யொருமரமுங்கிட்டாது
தோட்டங்கிடையாது துரவுகள் அந்திருக்கும்
நிற்கநிழலுமில்லை நிலத்திற்றரிப்போமென்றால்

கானகங்களத்தனையுங் கட்டையாயுலந்திருக்கும்
செடிகள்கிடையாது செட்டுகள்கிடையாது
தழைகள்கிடையாது சற்றேயிருப்போமென்ருல்
வெய்யிலுறைக்கிறது வெங்கானல்வீசிடுமாம்
கானலுறைக்கிறது கடுங்கானல்வீசிடுமாம்
வேர்வைபொழிகிறது விமலருக்கும்பார்வதிக்கும்
அண்டமுடிகூடவில்லை அக்கினிவாடையது
அக்கினிவாடையது அனல்கொண்டுவீசுதையா
நடுக்காட்டில்வந்தார்கள் நாதருந்தேவியுமாய்
அந்தநடுகாட்டில் அலைந்துவருகையிலே
அங்கேயொருவில்வமாம் அடர்ந்துதமைத்திருக்கும்
பசுமையாகத்தழைத்துப் படர்ந்துநெருங்கிருக்கும்
சந்துகள்தெரியாமல் தழைத்திருக்கும்வில்வமரம்
எந்நேரமுஞ்சலங்கள் இலையிற்படர்ந்திருக்கும்
காய்த்துப்பழுத்து கனிகளுதிர்ந்திருக்கும்
பூத்துப்பழுத்துப் புட்பம்பரிமளிக்கும்
தென்றலதுவீசுந் தேகங்குளிர்ந்திருக்கும்
அந்தமரமொன்று அவ்விடத்திற்றழைத்திருக்கும்
அவ்விடத்தில்வந்தார்கள் அரனும்உமையவளும்
தேகமுந்தான்குளிர்ந்து சோபந்தெளிந்தது
இந்தநடுகாட்டி லிதுதழைத்த அதிசயத்தை
கண்டறிவோமென்று கடுகியேகீழிறங்கி
எருதைநிழலில்விட்டு இறங்கினர்மரத்தருகில்
ஆயாசந்தீர்வதற்கு அவ்விடத்திலுட்கார்ந்தார்
சவுக்கியமானுர்கள் தங்கள்சரீரத்தில்
இருவருமுட்கார்ந்து ஏகாந்தமாயிருக்க
பட்டப்பகலிலே பகலானவேளையிலே
உச்சியிற்சூரியன் உருமுத்தின்வேளையிலே

நீர்க்காக்கையைக் கண்டது.

அங்கேயொருநீர்க்காகம் அலைகடலிற்போய்முழுகி
கடலில்முழுகியே கடல்ஜலத்தைத்தான்வாரி
செப்படையில்நிறைய ஜெலங்கொண்டுவருகிறதாம்
கடல்நீரைறெக்கையிலே காகமதுகொண்டுவந்து
வில்வமரத்தின்மேல் மேலாகத்தான்பறந்து

மோலகத்தான்பறந்து மேலிருந்துவீசினது
மழைமாரிபோலே வருஷிக்குங்காகமது
வருஷித்ததுஜலங்கள் மகாதேவர்மேற்படவே
குளிர்ந்ததுதேகங் கூடல்வளர்சொக்கருக்கு
அங்கயற்கண்ணம்மனுக்கும் அங்கங்குளிர்ந்ததுகாண்
ஏதுயிந்தஜலமென்று ஏறெடுத்துப்பார்த்தார்கள்
சங்கருஞ்சங்கரியுந் தலையெடுத்துப்பார்க்கையிலே
நீர்க்காகஞ்சலம்பொழிந்து நின்றுபறந்தது
அந்தநல்லகாகத்தை ஆண்டவனுதான்பார்த்து
பார்த்தாயோபெண்ணே நீ பட்சியதுதன்னறிவு
கண்டாயோபெண்ணே நீ காக்த்தின்தன்னறிவு
இந்தமரத்துக்கு இக்காகம்நீர்தெளிக்க
ஏதனுல்தெளிக்கிறதோ இதையறியவேண்டுமென்று
காகத்தைதான்கேட்டு காரியமறிவோமென்றார்
அப்படியேயழையுங்கள் அறிவுள்ளகாகமதை
என்றுஉமையுரைக்க ஈஸ்பருமப்போது
ஆகாசத்திற்றான்பார்த்து அந்தநீர்க்காகமதை
கைகாட்டித்தானழைத்தார் கைலாயநாதருந்தான்
கண்டதுகாகங் கைலாயநாதரென்று
அஞ்சிப்பயந்து ஆகாயம்விட்டிறங்கி
தாய்தகப்பன்வந்தாரோ நற்காக்கநம்மையென்று
சீக்கிரமாய்த்தானிறங்கி திட்டெனவேயோடிவந்து
மூக்கால்வலம்வந்து முடிவணங்கித்தெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துத்தெண்டனிட
தெண்டனிட்டபட்சியைச் சிவனுருந்தான்வாழ்த்தி
அடிபணிந்தகாகமதை யரனுருந்தான்வாழ்த்தி
இந்தமரத்துக்கு இறைப்பதென்ன நீசலத்தை
இந்தமரத்தினுலே இத்தனைவருத்தமென்ன
வருத்தத்தோடேஇங்குநீ வந்துநீர்தெளிப்பதென்ன
சொல்லுமென்றுகேட்டார்கள் சொக்கரும்அம்மனுமாய்
கண்டதுகாகம் கனக்கமிகப்பயந்து
சொல்கிறதுகாகஞ் சொக்கரவர்கேட்க
தங்களுக்கேயுகந்த தனித்தமாமென்றுசொல்லி
விமலர்க்குகந்தவில்வமா மென்றுசொல்லி
அதனுற்கடல்நீரை அள்ளிவந்துயான்தெளித்தேன்
நாடோறும்யான்தெளித்தேன் நாதருக்குவத்ததென்று

இதுதானேயெந்தனுக்கு ஈஸ்பரனார்கட்டளைதான்
அவ்வார்த்தைதான்கேட்டு அரனாரும்அம்மனுந்தான்
பூரித்தாரிருதோளும் புத்தியுள்ளகாகமென்று
ஆநந்தமாய்ப்பூரித்து அறிவுள்ளகாகமென்று
கட்டித்தழுவி காகத்தைமுத்தமிட்டு
எந்தனுக்கேத்ததொரு இந்தமரமென்றறிந்து
களையாகவந்தவர்க்குக் களையாற்றிவைத்தாயே
இந்தச்சகாயமதை யெங்களுக்குச்செய்தாயே

சொக்கர் நீர்க்காக்கைக்கு வரங்கொடுத்தது.

உனக்கொருசகாயம் உதவிசெய்வேனென்றுசொல்லி
என்னவரம்வேண்டும் இன்பமுடனுந்தனுக்கு
கேட்டவரந்தருவேனென்றார் கிருபைகளிகூர்ந்து
அப்போதுகாகந்தான் அரனாரைச்சேவித்து
சொல்லுகிறதுகாகஞ் சொக்கருக்குத்தெண்டனிட்டு
கைலாயநாதரே கண்மூன்றுடையவரே
என்மனதிலேயிருக்கும் உண்ணத்தைச்சொல்லுகிறேன்
கன்னிப்பெண்ணாகிக் கனமதுரைப்பாண்டியனை
சேரவேண்டுமென்று சிந்தையில்நினைத்திருந்தேன்
என்னுடையபாலகனுக்கு இசைந்துபட்டந்தரவேண்டு
அந்தவரமெனக்கு அருள்புரியவேண்டுமையா
காகமதுசொல்லுவதைக் கண்டாரேசொக்கலிங்கர்
ஆனாலொருவார்த்தை அன்பாககாகமேகேள்
கன்னிப்பெண்ணாகிக் கனமதுரை நீபோனால்
மன்னனைச்சேர்ந்தாலும் மலடியாய்ப்போயிடுவாய்
உன்னைப்பெண்ணாக்கி யொருமாதங்கெற்பமதாய்
அனுப்பினேனுன்னை அரசன்மதுரையிலே
ஆரென்றுகேட்பான் அணிமதுரைப்பாண்டியனும்
ஆருமற்றபாவிநான் அண்டிவந்தேனும்மையென்று
சொன்னாயேயாமாகில் தோழியாவைத்துக்கொள்வான்
தாதியாயிருந்தாயானால் தையலரேயுந்தனைத்தான்
வசந்தநாளானால் மருவமனங்கொள்வான்
ஆருமறியாமல் அணைவானேயுந்தனைத்தான்
அணைத்தாசைதீர்த்திடுவாய் அரிவையிளமானே
உன்வயிற்றிலேபிறக்கும் உறுதியுள்ளபாலனுக்கு
பட்டந்தரிப்பான் பட்டணத்திலொருபங்கு

அந்தவரமளித்தேன் அப்படியேநடவுமென்ருர்
சம்மதித்துக்காகஞ் சந்தோஷங்கொண்டதுவே
காகத்தைப்பெண்ணுக்கி கருப்பமுமுண்டாக்கி
நீர்காக்கையென்று நேரிழைக்குப்பேர்கொடுத்தார்
நடவுமென்றுபேர்கொடுத்து நாதாவர்போய்விட்டார்

நீர்காக்கைப் பெண்ணுகிப் பாண்டியனை யடுத்தது.

அப்போதுநீர்காக்கை யரிவையந்தப்பெண்ணனங்கு
மதுரைநகர்தேடி வந்தாளேபெண்மயிலாள்
பாண்டியனிடத்திற் பக்குவமாய்வந்துநின்ருள்
அப்போதுபாண்டியன் அரிவையரைத்தான்பார்த்து
சுந்தரமும்வடிவுமுள்ள தோகையரைத்தான்பார்த்து
ஆரடிபெண்ணேநீ யறியவுரையுமென்ருன்
அவ்வசனங்கேட்டு ஆரணங்குஅதுசொல்வாள்
ஆருமில்லாப்பரதேசி அண்டிவந்தேனும்மையென்ருள்
ஒருமாதம்கெற்பம் உத்தமியாளெந்தனுக்கு
ஆருமற்றஎந்தனை நீர் ஆதரிப்பாயென்றுரைத்தாள்
அவ்வசனங்கேட்டு அந்தநல்லபாண்டியனும்
கெற்பமானமங்கை கிளிமொழியாளாகையினல்
காப்பாற்றவேணுமென்று கன்னியரேயஞ்சாதே
அப்படியேசெய்வேனென றரிவையரைக்கூட்டிப்போய்
தன்னுடையதேவியண்டை தாதியாய்வைத்துவிட்டார்
சகலவிசாரணைக்குந் தாதியாய்த்தானிருந்தாள்
அழகுந்திருமேனி யலங்காரமாயிருப்பாள்
புத்தியுள்ளகுணவதியாய் பூவையரிருந்தாளாம்
பாண்டியன்தேவிக்கும் பட்சமாய்த்தானிருந்தாள்
சுந்தரமும்எவ்வனமுஞ் செல்லத்திலேயாது
வாலிபமாய்ப்பெண்மயிலும் மன்னதுதேவியண்டை
அதிகாரம்பெற்று அவளிடத்திருக்கையிலே
வசந்தமானகாலம் வந்துமிகநேரிடவே
மன்மதவேதையினல் மன்னனந்தபாண்டியனும்
தன்னுடையதேவியாரந் தையலரண்மனைக்கு
மாளிகைதேடி வரும்போதந்தவேளையிலே
வாசற்படியிலே மயில்போலத்தாதியவள்
பொற்பதுமைபோலே பொன்னுபரணமின்ன

நின்றாளே நீர்க்காக்கை நேரிழையைத்தான்பார்த்தான்
அதிகமயல்கொண்டானே அந்தமுள்ளசுந்தரிமேல்
ஒருவர்க்கொருவர் உடன்பட்டிருவருமாய்
ஆசையுடன்போவதற்கு அரிவையரைத்தானழைத்து
அதற்கந்தநீர்க்காக்கை அரிவையருஞ்சம்மதித்து
என்வயிற்றினிற்பிறக்கும் இனிதானமைந்தனுக்கு
பட்டங்கொடுப்பீரா பாண்டியரேயென்றாளாம்
நாலிலொருபங்கு நடத்துவேன்மங்கையரே
அப்படிக்குச்சம்மதித்தாள் அரிவையிளமாது
ஆருமறியாமல் அங்கொருவர்காணமல்
கூடியணைந்தான் கோலவிழிமாதரசை
ஆனூர்வரத்தாலே ஆசைகலிதீர்த்தானே
சுகத்துடனேசேர்ந்து அரிதமுடன்பாண்டியனும்
தேவியிடம்பாண்டியனுஞ் சீக்கிரமாய்நடந்துவிட்டான்
இப்படிசிலகாலம் இருக்குமந்தநாளையிலே
அப்போது நீர்க்காக்கை யரிவையிளம்பிறையும்
மாதமும்பத்தாகி வருந்திமிகத்தளர்ந்து

நீர்க்காக்கை நீன்முகனை பெற்றது.

பிள்ளையைப்பெற்றாள் பெரிதானமதுரையிலே
மைந்தனைப்பெற்றாள் மாதந்தநீர்க்காக்கை
தாதிவயிற்றிற் சந்ததிபிறந்ததென்று
சந்தோஷங்கொண்டு சருக்கரைவழங்கினார்கள்
நீர்க்காக்கைபெற்றெடுத்த நேரானபாலனுக்கு
நீன்முகனென்று நேர்த்தியாய்ப்பேருமிட்டார்
பிள்ளையில்லாமாளிகையி பிள்ளைபிறந்ததென்று
பாண்டியன்தேவி பட்சமாய்த்தான்வளர்த்தாள்
பிள்ளையும்வளர்ந்து போனமாளிகையில்
தாதியுடபிள்ளையென்று சலங்கைக்கொலுசுமிட்டு
காப்புகடகமிட்டு கண்டசாமணிந்து
ஆடையணிந்து ஆபரணந்தான்பூட்டி
வயதுமைந்தாகவேதான் வளர்த்துவரும்நாளையிலே
ஐந்துவயதாகி அமர்த்தினார்பள்ளியிலே
பண்ணுதமிழ்வித்தை படிக்கவைத்தார்பள்ளியிலே
அம்புபிடிக்கறிந்தா ஆயுதம்பிடிக்கறியான்

சகலமுங்கற்று சாமர்த்தியமானபின்பு
அவனுக்குவேறே யரண்மனையமர்த்திவைத்தார்
வெள்ளாட்டிபெற்றெடுத்த வீரிய நீன்மகனும்
மீறிவளர்ந்திருந்தான் வீரியன்மதுரையிலே
அப்படியிருக்க ஆனதொருபாண்டியர்கள்
நமக்குபிள்ளையில்லையென்று ராஜனந்தபாண்டியனும்
சிம்மாசனமீதிற் செங்கோலுந்தான்பிடிக்க
பட்டத்தையாள்வதற்குப் பாலகனில்லையென்று
விசனத்தைக்கொண்டாராம் வேந்தனந்தப்பாண்டியனும்
சித்திராங்கதனுடனே சேர்ந்திருந்தபாண்டியர்கள்
ஆருயிரம்பேர்கள் அணிதிரளாம்பாண்டியர்கள்
பிள்ளைகளில்லாத பெருமலடாய்ப்போனோமே
ஆருயிரவர்களல்லவரு மலடானோம்
அவர்களுடன்கூட ஆரார்கள்தான்மலடு
ஆண்மலடுபெண்மலடு அனைத்துயிருந்தான்மலடு
பாண்டியர்களேறிவரும் பட்டத்தானைதான்மலடு
கொட்டாநிறைந்ததொரு குதிரையெல்லாந்தான்மலடு
பாட்டைநிறைந்ததொரு செல்வாடுதான்மலடு
தொழுவம்நிறைந்ததொரு செல்வாடுதான்மலடு
எறப்பிலேயிருக்கின்ற எலிகளெல்லாந்தான்மலடு
தெருவிலேகூடுகட்டுஞ் சிறுகுருவிதான்மலடு
தெருவிலேதானிருக்குந் தென்னமரம்தான்மலடு
கொல்லையிலேதானிருக்கும் கொன்றைபுன்னைதான்மலடு
வாசலிலே நிற்குமந்த வாழைமரந்தான்மலடு
அழுக்கெடுக்கும்வண்ணானும் அம்பட்டனுந்தான்மலடு
வளர்க்கின்றநாய்களுடன் வாழ்பூனைதான்மலடு
மைந்தனுமில்லாமல் மகாபாவியானார்கள்
பிள்ளையுமில்லாமற் பெரும்பாவியானார்கள்
குழந்தைகுரல்கேளாக் கொடும்பாவியானார்கள்
மைந்தன்பெறவேண்டுமென்றுவருந்தியேபாண்டியர்கள்
சாலைகள்போட்டுவைப்பார் சத்திரங்கள்கட்டிவைப்பார்
நடபாயிதிருக்குளமும் நல்லதண்ணீர்கிணறெடுப்பார்
தவித்துவருவார்க்குத் தண்ணீர்பந்தல்போட்டுவைப்பார்
பசித்துவருவார்க்குப் பாலமுதம்செய்துவைப்பார்
ஆலயங்கடோறு மணிமதிற்கட்டிவைப்பார்
கோயில்கடோறுங் கோபுரங்கள்கட்டிவைப்பார்

காணுதகோவில்கட்குக் காணிக்கையனுப்பிவைத்தார்
செங்கல்லைக்கண்டவுடன் தெய்வமென்றுகைதொழுதார்
கருங்கல்லைக்கண்டவுடன் கர்த்தனென்றுகைதொழுவார்
எத்தருமஞ்செய்தாலு மேதாலும்பிள்ளையில்லை
தபசுக்குப்போகவென்று தங்கள்மனதிலெண்ணி

நீன்முகனுக்குப் பட்டங்கட்டி
பாண்டியர்கள் தபசுக்குப் போனது.

வெள்ளாட்டிபெற்றெடுத்த வேல்வேந்தனீன்முகனை
மதுரையாள்வதற்கு மன்னுக்குப்பட்டங்கட்டி
நீன்முகன்தானழைத்து நீதியுள்ளபட்டங்கட்டி
ஆதிசிவனைநோக்கி யருந்தபசுசெய்யவேண்டும்
மைந்தன்வரத்தைப்பெற்று வருகிறநாள்வரைக்கும்
எல்லையரசாளுமென்று இனியபட்டங்கட்டிவைத்தார்
எல்லையரசாளுமென்று இனியபட்டங்கட்டிவைத்தா
ஆயிரம்பாண்டியர்க ளையமாரனைவோர்கள்
ஆண்பெண்ணடங்கலு மரியதவஞ்செய்வோமென்று
போகிறாபாண்டியர்கள் பொன்மலையைத்தான்தேடி
வனமாய்வனங்கடந்து வருகிறார்பாண்டியர்கள்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தொலைந்து
சிறுவதபருவத்தைச் சேர்ந்தார்கள்பாண்டியரும்
ஆறுயிரம்பாண்டியரும் அவருடையதேவியரும்
தெர்ப்பாசனம்போட்டுச் செய்கிறார்பெருந்தபசு
கண்ணிரண்டுமூடியே கையிரண்டுமேந்திகொண்டார்
பரமசிவனைநோக்கிப் பாரதவம்பண்ணுகிறார்
மைந்தனைவேண்டியல்லோ மாளிகைமறந்தார்கள்
புத்திரனைவேண்டியல்லோ பூமியைமறந்தார்கள்
பாண்டியர்களேறிவரும் பட்டத்துவெள்ளானை
ஆறுயிரவருடன் யானைதவஞ்செய்கிறது
நாற்காலுயரெடுத்து நடுவேயொருதும்பிக்கையால்
தும்பிக்கைநாட்டியல்லோ செய்கிறதுபெருந்தபசு
இப்படியாகவே இவர்கள்தவம்பண்ணுகிறார்
அப்போதுபரமசிவன் ஆதிகைலையிலே
ஆவணிமாதத்திற்ரு ணன்பானநாளையிலே
பிட்டுதிருநாளுக்குப் புறப்பட்டார்சொக்கலிங்கம்
தேவாதிதேவருடன் தெருசுற்றிவலம்பெறவே

அரகராவென்றசத்தம் அலைகடல்போற்கோஷ்டமிட
சிவசிவாவென்றசத்தந் தேவருக்குங்காதடைக்கும்
அச்சத்தந்தான்கேட்டு அங்கையற்கண்ணே துசொல்வார்
என்சுவாமியென்குருவே என்னுடையகர்த்தாவே
அரகராவென்றசத்த அலைகடல்போற்கேட்கிறது
சிவசிவாவென்றசத்தஞ் செவியடைந்துபோகுதையா
இவ்வனந்தனிலேயிந்த இரைச்சலென்ன ஆண்டவனே
என்றுதான்கேட்டளவி லீஸ்பரனுரே துசொல்வார்
ஆறுயிரம்பாண்டியர்க ளரியதவம்பண்ணுகிருர்
மதுரைநகராளும் வாழ்பாண்டிநாட்டார்கள்
புத்திரனைவேண்டியே பெரியதவம்பண்ணுகிருர்
மைந்தனைவேண்டியே வருந்திதவம்பண்ணுகிருர்
கோவிலுக்குப்போவோம் கோமளமேயென்றழைத்தார்
இவ்வார்த்தைதான்கேட்டு ஈஸ்பரியுமேதுசொல்வாள்
தபசுபண்ணும்விந்தைதனை சாமியேநானறியேன்
ஏதுதவம்பண்ணுகிரு ரீஸ்வரரேபார்ப்போம்வா
அம்மனும்ஐயருடன் அல்லவருங்கூடிவந்தார்
ஆறுயிரவர்களின் அருந்தபசுபார்த்தாள்
புத்துமூடிப்போனது பெருங்கரையானரித்ததுவும்
வுல்லுமூடிப்போனதும் புழுதியடைந்ததுவும்
ஆனேதவசுநிலை யருந்தபசுபண்ணுவதும்
உற்றுப்பார்த்தாளே உத்தமியாவீஸ்வரீயும்
ஐயாபரமரே ஆறுயிரவருக்கும்
புத்திரனளித்துவிடும் புகழானபாண்டியற்கு
மைந்தன்வரங்கொடுப்பீர் மகாதேவாயென்றுசொல்ல
ஆனுற்கேள்பெண்மயிலே அவர்கள்செய்தகொடுமைகளே
கூலிகுறைத்தவர்கள் குரைமரக்காதிட்டவர்கள்
அங்காடிகூடைதன்னை யதிரவிலையிட்டவர்கள்
பட்டையில்நெற்களிலே பதரைக்கலந்தவர்கள்
பசித்தாமுகம்பாரார் பாலடைக்குப்பால்வாரார்
தவித்தார்முகம்பாரார் தாகங்கொடுத்தறியார்
ஆண்டிபாதேசியைபோலங் கொருநாள்வடியெடுத்தேன்
பாண்டியராசர்கள் பருமுத்தளக்கையிலே (றேன்
சிவதருமமென்றுசொல்லி சேர்ந்துவந்து பிச்சையென்
பதரானமுத்தெடுத்து பாவியெனக்கிட்டார்கள் (கள்
சொத்தைமுத்துபோட்டார்கள் தோஷியந்தப்பாண்டியர்

பதரிட்டபாவிகட்குப் பாலன்கொடுப்பதில்லை
பிட்டுக்குமண்சுமந்தேன் பிரம்பாலடியும்பட்டேன்
என்னதவம்பண்ணினாலு மேதாலும்பிள்ளையில்லை
ஏழுபிறப்பிலேயு மிப்பிறப்பிற்பில்லை
என்றதுதான்கேட்டு ஈஸ்பரியாளேதுசொல்வாள்
எப்பாவஞ்செய்தாலு மீஸ்பரனேமனமிரங்கி
புத்திரனளிக்கவேண்டும் புகழானபாண்டியற்கு

பாண்டியற்கு ஈஸ்பரிபுத்திரி வரங்கொடுத்தது.

ஈஸ்பரரேஉன்சித்த மிரங்காமற்போனாலும்
ஒரு-பெண்ணாகிலுமளிப்பேன் பேருலகிற்பாண்டியற்கு
அங்கையற்கண்ணம்மை யவளதிகமனமகிழ்ந்து
தோள்சதைதையைகிள்ளயம்மை தூரயெறிந்துவிட்டாள்
அல்லியுங்கொடியு மடர்ந்தொருபொய்கையிலே
செந்தாமரைவெண்டாமரைசேர்ந்ததொருபொய்கையிலே
வானவருமிந்திரரும் வந்திருக்கும்பொய்கையிலே
சந்திரருஞ்சூரியரும் சந்திபண்ணும்பொய்கையிலே
தாமரைபொய்கையிலே தண்ணீர்தடாகத்தில்
அல்லியிலைமேலே் வந்துதவிழ்த்ததுகாண்
கையாகிக்காலாகிக் கண்ணுமுகமுருமாகி
குவ்வாகுவ்வாவென்றுசொல்லி குழந்தையழுகிறது
சந்திரனைப்போலே தளும்புதுகாண்பொய்கையிலே்
சூரியனைப்போலே துலங்குகிதக்குழந்தை
மேகத்துமின்னலைப்போல் மின்னுகிறதக்குழந்தை
இப்படியாகவே தானிருக்கின்றவேளையிலே
அங்கயற்கண்ணம்மை யவளுமனமகிழ்ந்து
குழந்தைதனக்கேத்தபடி குமரிவாங்கொடுத்தாள்
ஏழாம்பிராயந்தனி லிளவரசுபட்டமென்று
பன்னிரண்டாம்பிராயத்திற் பார்த்தனுக்குமாலையிட்டு
எல்லையரசாண் டிருக்கவரங்கொடுத்தாள்
அம்மன்கழுத்ததனி லணித்தபதக்கமுடன்
சுவாமிகழுத்திற் றரித்தபதக்கமும்
வாங்கித்தரித்தாளே வரிசையுள்ளகுழந்தைக்கு
அல்லியென்றபேருமிட்டு அங்கயற்கண்மீனாட்சி
பாண்டியரைத்தானழைத்து பார்வதிரிமேதுசொல்வாள்

ஆருயிரவரே யணிதிராளாம்பாண்டியரே
அல்லியிலைமேலே யழகுமைந்தனிருக்கிறது
ஆணுமது பெண்ணுமது ஆருயிரவருக்கும்
எடுத்துப்போகுமென்று ஈஸ்பரியும்போய்மறைந்தாள்
அப்போதுபாண்டியரும் அரனுரைத்தான்வணங்கி
தவசுநிலைகலைந்து தானெழுந்தார்பாண்டியர்கள்
அல்லியிலைமேலே யழுதிருந்தமைந்தனைத்தான்
தாங்கள்பெற்றதுபோலே தழுவியெடுத்தார்கள்
வாரியெடுத்தார்கள் மார்போடணைத்தார்கள்
மதுரைநகர்நோக்கி வருகிறார்கள்பாண்டியர்கள்
ஆளோடேவிட்டார்க ளறிக்கையிட்டார்பாண்டியர்கள்
மைந்தனைப்பேறுபெற்று வருகிறார்பாண்டியர்கள்
புத்திரனைப்பேறுபெற்று புண்ணியர்கள்வருகிறார்கள்
நீன்முகராஜனுக்கு நீதியுடன்சொல்லுமென்று
தூதனுடன்சொல்லியே தூதுவிட்டார்பாண்டியர்கள்
ஒற்றொளொருவனுந்தா னுத்தமற்குச்சேதிசொன்னான்
கேட்டந்தநீன்முகனுங் கெர்வமதிகமாகி
ஆடாதாதவரோ அகங்காரமல்லர்களே
பாண்டியராஜருடன் பாங்காகவார்த்தைசொல்லும்
நீன்முகாசனவன் நிலைகொண்டான்ராச்சியத்தை
நீங்கள்தரித்துவைத்த நிர்ணயப்பட்டமுது
பட்டங்குறைவதில்லை பாருலகைவிடுவதில்ல
மதுரைக்குவந்தாலே வல்லுயிரைவாங்குவேன்யான்

நீன்முகாசனுக்குப் பாண்டியர் பகுதிகட்டி
திர்மானித்தது

எங்கேநீங்களிருந்தாலு மெந்தனுக்குப்பகுதிகட்டி
வருஷத்துக்கொருதரம் வரவனுப்பும்பாற்குடங்கள்
ஆருயிரம்பாற்குடங்க ளனுப்பவேண்டுமென்னர்க்கு
அனுப்பாமற்போனுக்கா லாக்கினைகள்செய்திடுவேன்
நீன்முகாசன் நிச்சயமாய்சொன்னனென்று
பாண்டியராசற்குப் பாங்குடனேசொல்லுமென்றார்
ஒற்றொளொருவனவ னோடினன்ராசாண்டை
ஆருயிரம்பாண்டியர்க ளாயருக்கேதெண்டனிட்டு
நீன்முகன்சொன்னசெய்தி நிகழத்தினார்தூதர்களும்

எங்களால்வந்தவினைக் கெவரென்னசெய்வார்கள்
அவனைவெருக்கவென்றா லதிகமானபாவம்வரும்
வடமதுரைப்பட்டணத்தில் வந்துகுடித்தனமாய்
உழவுகுடித்தனமா யுத்தமர்கள்வாசம்பண்ணார்
வருஷத்துக்கொருதரந்தான் வரவிடுவார்பாற்குடங்கள்
இந்தவிதமாகவேதா னிருந்தார்கள்பாண்டியர்கள்
சொக்கரருளாலே சுந்தரியாளல்லிற்கு
மாணிக்கத்தொட்டிலிட்டு வளர்த்தார்களபாண்டியற்கள்
ஒருமாதமிருமாத மொன்றிரண்மூன்றாச்சு
ஐந்தாறுமாதத்திலே அல்லிகவிழ்ந்தாள் தவிழ்ந்தாள்
ஒருவஷமிருவருஷ மொன்றிரண்டுமூன்றாச்சு
சிற்றாடைகட்டுவாளாஞ் சிறுகம்பிகோலிடுவாள்
பாவாடைகட்டுவாளாம் பந்துவிளையாடிடுவாள்
அம்மானார்பந்துகளு மழகாளபுள்ளடிப்பாள்
ஐந்தாம்வருஷமதி லழகாகப்பள்ளிவைத்தார்
ஏழுபிராயமட்டும் யிளங்கொடியாள்தான்படித்தாள்
ஆறுசாஸ்திரம் நான்குவேதமறுபத்துநால்கலைக்யானம்
அம்புவித்தைவில்வித்தை ஆஸ்தானவித்தையெல்லாம்
காணலாவுபத்தியங்கள் கற்றுக்கொண்டளல்லியரும்
பள்ளியின்கணோதி பகற்பாடமொப்புவித்து
பாலமிர்தமுண் ணாரைக்கு பத்தினியாள்வருகலுற்றான்
அப்போதுநீன்முகன்றா னாயிரவாண்டை
வாங்கிவரச்சொல்லியே வரவிட்டான்தூதுவரை
ஆயிரந்தூதுவரை அனுப்பினான்நீன்முகனும்
ஆயிரங்குடத்தி லப்பட்டமானபாலாம்
மலைகளுடன்தலைகொடுக்கு மல்லர்வெளிபட்டார்கள்
காற்றிலும்வேகமாக கடுந்தூதர்வாரார்கள்
தங்ககுடமெடுத்து தானவந்தார்மல்லரெல்லாம்
பாண்டியராசரண்டை பாங்குடனேவந்தார்கள்
பகுதிகளைக்கட்டுமென்று பாற்குடங்கள்முன்னேவைத்து
அரமனைக்கேவேணும் அனுப்புங்கள்பாலையென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு அஞ்சிப்பயந்தெழுந்து
காராவின்பசும்பாலை கரந்துமேபாண்டியர்கள்
ஆயிரங்குடத்திலன்பாக நிறப்பிவைத்து
மஞ்சள்மேற்றுணிகட்டி மாலைதனைச்சுற்றிவைத்தார்

வரிசைவரிசையாக வைத்தார்கள்பாற்குடத்தை
பதினாயிரந்தூதருக்குப் பாலமுதேபோசனங்கள்
போசனஞ்சமைக்கலுற்றார் புகழானபாண்டியர்கள்
அரிப்பதுவும்பொரிப்பதுவு மடிசல்சமைப்பதுவும்
இந்தவிதமாக இருக்கின்றவேளையிலே
அந்தசமயத்தி லல்லியம்மாள்வந்துவிட்டாள்
பதினாயிரந்தூதுவரைப் பார்க்குடங்கள்பார்த்தாளே
அரிப்பதுவும்பொரிப்பதுவு மரிசல்சமைப்பதுவும்
இந்தமகிழ்ச்சிகொண்டு ஏதுசொல்வாளல்லியம்மாள்
ஒருநாளுங்கண்டதில்லை யசசிதசம்பிரமங்கள்
இன்று அதிசயமா யெந்தனுக்குத்தோன்றிற்று
இந்தஉறன்முறையா ரெங்கிருந்துவந்தவர்கள்
ஒருநாளுங்கண்டதில்லை யுச்சிதமானவரை
இன்றுபதிதாக இங்குவந்தார்காணும்
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வார்பாண்டியர்கள்
அவ்வார்த்தையுந்தனுக்கே னமுதுண்ணபோடியம்மா
பாலமுதுமுண்டுநீயும் பள்ளிக்குப்போவென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லிமனதுநொந்து
இதுசொல்லாமற்போனீரானால் நல்லதொருபாண்டியன்
வல்லபிராணனைதான் கல்லோடேமோதிடுவேன்
செத்துமடிந்திடுவேன் செலவழிந்துபோய்விடுவேன்
மாண்டுமடிந்திடுவேன் வைகுந்தஞ்சேர்ந்திடுவேன்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆருயிரவர்சொல்வார்
ஆருயிரவருமே யாண்மலடுபெண்மலடாய்
மைந்தனைவேண்டியல்லோ மகாதவம்பண்ணேமம்மா
என்னதவம்பண்ணினாலு மேதாலும்பிள்ளையில்லை
மகாமுனிவர்தபசுபண்ணி மாமலையைத்தான்தேடி
நாங்கள்தவத்திற்கு நகர்விட்டுப்போவதற்கு
வெள்ளாட்டிபெற்றதொரு வீரான நீன்மகனை
பட்டந்தரித்துவைத்துப பாரத்தவசுபோனேம்
சிறுவதபருவதத்திற் சேர்ந்துதவம்பண்ணேமம்மாள்
மீனாட்சிதயவாலே மிக்கசொக்கருளாலே
அல்லியிலைமேலே ஆணங்கைப்பெற்றெடுத்தோம்
ஒருவர்வயிற்றிற்பிறந்ததில்லைவன்கொடுமைசெய்ததில்லை.
குடலிற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை
ஓடுகிறதண்ணீரிலே யுள்ளமணற்சேறுமுண்டு

அடிக்கிறகாற்றதனி லலைகாற்றுரும்புமுண்டு
காலகாலகண்டருக்குக் கண்டத்தில்கருப்புமுண்டு
குண்டுமணிக்காணுலுங் கொஞ்சங்கருப்புமுண்டு
சந்திரற்குமாசியுண்டு சற்றேகருப்புமுண்டு
உனக்கு-மயிரேகறுப்பொழிய மற்றக்கறுப்புமில்லை
புருவங்கருப்பொழிய பின்னைக்கறுப்புமில்லை
அல்லியிலைமேலே ஆரணங்குநீபிறந்தாய்
வாத்திறைப்பேறுபெற்று வந்தாயம்மாள்தென்மதுரை
வெள்ளாட்டிபெற்றெடுத்த வீருனநீன்மூகனும்
ஊரில்வரவொட்டாம லோட்டிவிட்டானப்புறத்தே
உறவுகுடியாக ஊரிற்பிழையுமென்ருன்
ஆருயிரம்பாண்டியற்கு ஆருயிரம்பாற்குடமும்
வருஷத்திற்கொருதரந்தான் வாங்குகிருன்பகுதியவன்
உன்னைப்பெறவேண்டி யூரிழந்தோம்பதியிழந்தோம்
செங்கோல்துரைத்தனமும் சீமையிழந்தோமம்மா
ஏழுவருஷமம்மா இப்படியனுப்புகிரும்
இந்தவருஷமுமே யிங்குவந்தார்மல்லரவர்
பாற்குடம்நிறப்பிவைத்தோம் பாலமுதம்செய்கிருேயாம்
பாலமுதமுண்டுநீ பள்ளிக்குப்போவென்ருர்

அல்லியம்மாள் மல்லர்களை அவமானஞ்

செய்தனுப்பியது.

அவ்வார்த்தைதான்கேட்டு அல்லிமிகக்கோபமதாய்
எட்டிப்பழம்போலே இருகண்சிவந்தாளே
கோவைப்பழம்போலே கூரியகண்சிவந்து
வெள்ளாட்டிப்பையனுக்கு வீரியங்களுண்டாமோ
எருதுபசுவாமோ இளைத்தபுலியுமுண்டோ
உயரப்பரந்தாலும் ஊர்க்குருவிபருந்தாமோ
கொசுவும்பருந்தோடு கூடப்பாக்குமோதான்
விரலேபுரலாணு லுரலென்னகொள்ளுமையா
வெள்ளாட்டிப்பையனைத்தான் வெட்டித்தலைதள்ளாமல்
பாண்டியராசர்களே பாராளவந்தீர்களே
உங்களைப்போல்ராசாக்க ளுலகத்தில்நானறியேன்
என்றுமிகக்கோபமுட னெழுந்தாளே அல்லியம்மாள்
எழுந்திருந்து அல்லியம்மாள் எழிலானபாற்குடத்தை

இடதுகால்தன்னாலே யெட்டியுதைத்தாளே
ஆருயிரம்பாற்குடத்தை யகங்கொண்டிட றிவிட்டாள்
ஆடாமல்லர்களே யழையும்பிடாரனைத்தான்
ஓடியழையுமென்று ளொருநொடியில்வாருங்கள்
அங்கிருக்கும்மல்லரவ ரதுரிதமாகவோடி
பாம்புபிடாரர்களைப் பறந்தோடியழைத்துவந்தார்
வாழ்வரசியல்லியற்கு வந்துதெண்டம்பண்ணினார்கள்
எம்மையழைத்தவகை யேதுகருமமென்றார்
காட்டுக்குப்போய்நீங்கள் கன்னிபுத்துமருந்துவைத்து
கருநாகஞ்செந்நாகம் கண்ணாடிவிரிய ஞடு
மண்ணுளிதாசரியு மலையேறிவிரியனுந்தான்
ஊதுசுருட்டைப்பாம்பும் உரகமிருதலைமணியன்
நீக்கத்துகுட்டிநாகம் நீதியுள்ளபாம்புகளும்
வர்னவர்னப்பாம்புகளை வகைவகையாய்த்தான்பிடித்து
ஓட்டம்நடையாக ஒருநொடியில்வாருமென்றாள்
அவ்வார்த்தைதானகேட்டு அந்தபிடாரரெல்லாம்
ஓட்டம்நடையாக வோடிவந்தார்பிடாரரெல்லாம்
காட்டுக்குப்போனார்கள் கன்னிபுத்துமருந்துவைத்தார்
வண்ணவண்ணபாம்புகளை வரிசையுடன்தான்பிடித்தார்
பெட்டிநிரம்பவே பிடித்தார்கள்பிடாரரெல்லாம்
காடுசெடிதாண்டி கடுகியேயோடிவந்தார்
அல்லியரசாணி யாரணங்குமுன்புவந்தார்
பாம்புகளைமுன்னேவைத்துப் பணிந்தார்பிடாரர்களும்
அல்லிப்பெருமாளும் ஆரணங்குமேதுரைப்பாள்
பாற்குடங்கதன்னிலேதான் பாம்பையடையுமென்றாள்
பஞ்சவர்னச்சீலையினாற் பானைவாய்கட்டுமென்றாள்
ஆருயிரங்குடத்தி லடையுமென்றாள்பாம்பையெல்லாம்
பஞ்சவர்னச்சீலைகட்டி பைங்கிளியின்முன்னேவைத்தார்
அல்லிபெருமாளு மாரணங்குமேதுரைப்பாள்
அம்பட்டரைத்தேடி யழையுமென்றுயல்லியரும்
ஓடியழைத்தலவோ வோட்டம்நடையாகவந்தார்
ஆருயிரந்தாதுவரை யழகுமொட்டைசெய்யுமென்றாள்
தாடிசிரைத்தவரை தலைபோடிபண்ணுமென்றாள்
மீசைசிறையுமென்றாள் முன்போடிபண்ணுமென்றாள்
கரும்புள்ளிசெம்புள்ளி கலந்தழகாய்க்குத்துமென்றாள்
அல்லியம்மாள்சொற்படிக்கு யழகுமொட்டையிட்டாரே

முன்மீசைதான்சிறைத்து முகத்தினில்பொட்டுமிட்டார்
ஆடாதூதுவரே அன்பானவார்த்தைகேளும்
நீன்முகராசனுக்கு நீங்கள்போய்சொல்லுங்கடா
பாண்டியராசனுக்குப் பட்சமுள்ள அல்லியம்மாள்
இந்தவரிசைகளை யனுப்பினளென்றுசொல்லும்
உன்தொண்டைக்குத்தூண்டிமுள் தொப்புளுக்குவீராணி
அவன்மண்டைக்குக்கோடாலி மார்ப்புக்குசெப்புலக்கை
கழுத்தடியிற்கத்தியவள் காமாட்சியம்மையென்று
ஊட்டியறுக்கவந்த வுண்மைப்பராஞ்சோதி
தலைமாட்டிற்பாம்பலவோ தாயந்த அல்லியென்று
சொல்லுங்கள் தூதுவரே துரைராசநீன்முதற்கு
வெள்ளாட்டிடையனுக்கு விந்தையைசெப்புமென்றுள்
ஆயிரம்தூதுவர்களக்குடமெடுத்துக்கொண்டார்
வருகிறார்மதுரையது வடமதுரைதான்விடுத்து
தேனுமதுரையது தென்மதுரைவருகிறார்கள்
தெற்குத்தெருகடந்து தேரோடும்வீதிவிட்டு
மகாராசன்கொலுதனிலே வந்தார்கள் தூதுவர்கள்
அப்போது நீன்முகனு மப்பிங்ஙனமாடுகைக்கு
சனியெண்ணெய்மண்டபந் தானமர்ந்தான்வாழ்மார்பன
எண்ணெய்பிட்டுக்கொண்டே யிருக்கிறவேளைதனில்
பாற்குடத்தைமுன்னாலே பார்மீதிறக்கிவைத்தார்
வரிசைவரிசையாக வைத்தார்கள்பாற்குடத்தை
வந்திருக்கும்தூதரெல்லாம் வரிசையாய்நின்றார்கள்
இதுஎன்னவதிசயங்களெவர்செய்தவண்மையிது
எட்டிப்பழம்போலே யிருகண்ணுந்தான்சிவந்து
கோவைப்பழம்போலே கூர்விழிக்கண்சிவந்தான்
இப்படிசசெய்தவரை யெனக்கறியசசொல்லுமென்றான்
பால்வார்த்தனுப்பாமற் பாம்பையடைத்ததென்ன
ஆடாதூதுவரே யறியவுரையுமென்றான்

நீன்முகனுக்குத் தூதர்கள் சேதி சொல்லுதல்.

அவ்வார்த்தைகேட்டவர்களஞ்சியுரைக்கலுற்றார்
ஐயாவேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
ஆயிரம்பாண்டியர்க்கே யரியவொருமகளாம்
அல்லியிலைமேலே ஆணங்குபெண்பிறந்தாள்

எழுபிராயமுண்டு இளங்கொடியாள்மாதுகன்னி
பாண்டியராசரைநாம் பகுதிபோய்கேட்டவுடன்
பகுதியுங்கட்டினார்கள் பாங்குடங்கள்தானிரைத்தார்
எங்களுக்குஞ்சாப்பாடு இன்பமுடனேசமைத்தார்
அவ்வளவிலல்லினல்லா ளானந்தவாழ்மாரி
பள்ளிக்கூடம்படித்துப் பாலமுதுண்ணவந்தாள்
எங்களைக்கண்ட வுட னிவர்களாரென்றுகேட்டாள்
பாற்குடங்களை துவையாபாண்டியரேசொல்லுமென்றாள்
அவ்வளவிற்பாண்டியர்க ளஞ்சிப்பயந்துரைப்பார்
உமக்கு-பட்டந்தரித்துவைத்துப் பாரதவம்போனதுவும்
அல்லியரைப்பெற்றதொரு அதிசயத்தைசொன்னார்கள்
அதுகேட்டுஅல்லியவள் அதிகமானகோபமதாய்
வெள்ளாட்டிடையனுக்கு வீரியங்களுண்டாச்சோ
ஆறாயிரங்குடத்தை யரைநொடியிலிடறிவிட்டால்
பாம்பைபிடித்துவந்து பாற்குடத்திலேயடைத்தாள்
வாருமென்றம்பட்டரைவழுங்க மொட்டையடியுமென்று
தலைபோடிபண்ணினார்கள் தனிப்பொட்டுமிட்டார்கள் (ள்
கரும்புள்ளிசெம்புள்ளி கலந்தழகாய்பொட்டுமிட்டார்
உன்-தொண்டைக்குதூண்டிமுள் தொப்புளுக்குவீராணி
மண்டைக்குக்கோடாலி மார்புக்குச்செப்புலக்கை
கழுத்தடியிற்கத்தியவள் காமாட்சியம்மனென்றாள்
ஊட்டியமுக்கவந்த உண்மைபரஞ்சோதியென்றாள்
உந்தனுக்குச்சொல்லுமென்று உத்தமியனுப்பிவைத்தா
தருமதுரைமகராசி தப்பவிட்டானெங்களைத்தான்
பிழைத்துவந்ததெங்கள் பெரியோர்செய்தபு ண்ணியந்தா
என்றுசொல்லக்கேட்டு எழுந்தானே நீன்முகனும் (ன்

நீன்முகன் அல்லியின்பேரிற்படையெடுத்தது.

ஆடாதுதுவரே யழையுங்கள்மந்திரியை
இன்றுவெளிக்கூடா மியலுடனேபோடுமென்றான்
பாளையங்களுள்ளதெல்லாம் பயணமிட்டுவாருமென்றான்
சண்டைக்கொடிபோட்டு சண்டைமுரசடியுமென்றான்
தேரையலங்கரித்துச் சீக்கிரமாய்வாருமென்றான்
ஆறாயிரமந்திரிக ளல்லவரும்பயணமென்றான்
காலாள்பரிசேனை கடுகியேபயணமென்றான்

ஆருயிரம்பாண்டியரை அதம்பண்ணிப்போட்டுவிட்டு
அல்லியெனும்பெண்ணரசையரைநொடியிற்பிடித்துவந்
தலைபோடிபண்ணியே தம்பலஞ்சுமக்கவைப்பேன் (து
எண்ணெயிட்டேவென்றலைக்கே யியல்பாயராக்கிடுவேன்
அப்போதுஸ்நானமா யாடுவேனபிஷேகம்
என்றுவெழுந்தானே யியல்புள்ளநீன்முகனும்
கட்டினதுகச்சுமல்ல கைதனிலேவி லுமல்ல
மூகத்திலேமீசையல்ல மூன்கட்டுச்சீலையல்ல
தலையிலேபாகையல்ல தரித்ததுஆடையல்ல
என்றவனும்மார்பைதட்டி யெழுந்தானேநீன்முகனும்
மூத்தினுருமாலை மூகமழகாய்த்தான்கட்டி
அம்புறுத்தூணிமூது கணிந்தம்புவில்லெடுத்தான்
காங்குகச்சைதானணிந்தான் கத்திவாறுதோளிட்டான்
தேரைச்சுற்றிநமஸ்கரித்துத் தேரின்மேலேறினனே
ஏறினதேர்மேலே யெடுத்தார்நெடுங்குடைகள்
கானல்தனக்கொடுத்தார் கருப்புநல்லகூடாரம்
வெயிலுக்கெடுத்தார்கள் வெள்ளைநல்லகூடாரம்
பனிகளுக்கெடுத்தார்கள் பட்டுநல்லகூடாரம்
கருப்புநிசான்சிவப்புநிசான் கலந்துபறக்கிறது
அடிபடும்ரணமூரசு ஆனைவருக்குங்கிடுகிடென்ன
கோடைகாலத்திடிபோலே குமூறுதேபேரிகைகள்
வெண்கலபேரிகைகள் விருதுமுழக்கமிட
அமரதருஞ்சமரதரும் அர்த்தராதாவருகின்றார்கள்
கலிங்கர்தெலுங்கருடன் கன்னடம்வருகிறார்கள்
துலுக்கர்மலுக்கருடன் சோனகரும்வருகிறார்கள்
வன்னியருஞ்சன்னியரும் மராட்டியரும்வருகிறார்கள்
வருகிறசனங்களானல் மட்டுமிதங்களில்லை
கொக்குவெளுத்ததுபோற் குடமல்லிபூத்ததுபோல்
வானங்கவிந்ததுபோல் மல்லிகைபூத்ததுபோல்
நீன்முகன்சேனையெல்லாம் நெருங்கிவருகிறது
செந்துளெழும்புகுது தெருவெல்லாம்கப்புகுது
கருந்துளெழும்புகுது கதிரோனைக்கப்புகுது
கோட்டைகடந்தார்கள் கொப்பெனவேவருகிறார்கள்
அப்போதுபாண்டியர்க ளறிந்தார்கள்சேதிதன்னை
நீன்முகன்வருஞ்சேதி நிமிஷத்திற்றுணரிந்தார்
ஐயோமகனேயென்று அலறலுற்றார்பாண்டியர்கள்

தவசுசெய்துபெற்றோமே தவங்குலையநாளாச்சு
பாரதவம்நாங்கள்செய்து பாலகியைப்பெற்றுமே
நீன்முகன்கையாலே நீமடியநாளாச்சோ
வருகிறான் நீன்முகனும் மட்டில்லாச்சேனையுடன்
என்னசெய்வோம்மகளே யென்றுவிழுந்தேயழுதா
அல்லிப்பெருமாளும் ஆணங்குதான்கேட்டு
அஞ்சாதீவரயமாரே அவனைபலிகொண்டிடுவேன்
மாண்டிடுவேனென்று மனதில் நீங்கள் நினையாதீர்
செத்துமடிவேனென்று சிந்தைதனில்வையாதே
அரைநாழிக்குள்ளே யவனுங்காரநானழிப்பேன்
என்சமர்த்தைப்பாருமென்று எழுந்தாளேயல்லியம்மாள்

அல்லியம்மாள் சொக்கரையும் அம்மனையுந்
தொழுது வரம்பெற்றது.

அல்லிக்குளமுழுகி யலர்தாமரையெடுத்து
சொல்லாது ஆலயத்திற் சுந்தரியும்போய்ப்புகுந்தாள்
கொண்டுவந்தபூமலரைக் கொம்பனையும்பூசைசெய்தாள்
ஒருவர்-வயிற்றில்பிறவாமல் வன்கொடுமைசெய்யாமல்
குடலிற்பிறவாமல் குலக்கொடுமைசெய்யாமல்
அல்லையிலேமேலென்னை யாச்சியரேபிறப்பித்தாய்
பொற்றாமரையிலேதான் பிறப்பித்தாயீஸ்பரியே [டு
நீன்முகனைக்கொல்லவேண்டும் நீலியட்டங்கட்டவேண்
மாற்றானைக்கொல்லவேணும் வையகத்தையாளவேணும்
வாழ்த்தியேதேர்கொடம்மா மந்திரவாள்கைகொடம்மா
என்றுவணங்கியே இறங்கிநமஸ்கரித்தாள்
மாணிக்கர்சொக்கர் மனதுமிகக்குளிர்ந்து
அகிலாண்டநாயகியா ளங்கையற்கண்மனமகிழ்ந்து
மதுரைமீனாட்சியுந்தான் மங்கைமனமிரங்கி
மச்சுரங்கொடுத்தாள் மந்திரவாள்கைக்கொடுத்தாள்
தீவிச்சுக்கைகொடுத்து திருநீறுமள்ளியிட்டாள்
வண்ணலட்சந்தூதர்களை மகாதேவர்தான்விடுத்தார்
அல்லியற்குத்துணையாக அநேகம்பேர்வந்துவிட்டார்

## அல்லியம்மாள் நீன்முகனைச் சங்கரித்தது.

காலாளுஞ்சேனைகளுங் கடுகியேபயணமாச்சு
தேரைச்சுற்றிதெண்டனிட்டு தேரின்மீதேறினனே
அம்புவில்லுங்கையிடித்து ஆயுதமுந்தோளில்வைத்து
மந்திரவாள்கைபிடித்து மச்சுரதந்திருப்பிவிட்டாள்
தேவதுந்துமிமுழங்க தேன்மொழியாள்வருகிறளே
சித்திரத்தேரும் செருக்களத்தேவருகிறதே
வந்துவளைத்தாளே வல்லிடிபோலல்லியரும்
வில்வளைத்துநாரிபூட்டி வில்குணத்தொனிகள்செய்தார்
மாரிசரம்பொழிந்தாள் மகாசேனையுள்ளவர்மேல்
தொட்டாளேவில்லதனைச் சொரிந்துவிட்டாள்பாணமது
விட்டாள்சரபாணம் மேனியெல்லாந்தான்மறைய
யானைசேனைபரிவாரம் அடங்கலுங்கொல்லலுற்றுள்
யானைத்தலைகளெல்லா மபயமிட்டுக்கீழ்விழவே
ஒட்டகத்தலைகளெல்லா மோலமிட்டுக்கீழ்விழவே
குதிரைத்தலைகளெல்லாங் கொக்கரித்துக்கீழ்விழவே
ஆனைமேலிருந்தவர்க ளபயமிட்டுக்கீழ்விழவே
ஒட்டகத்தின்மீதிருந்தோ ரோலமிட்டுக்கீழ்விழுந்தார்
குதிரைமேலிருந்தவர்கள் கொக்கரித்துமண்ணைக்கவ்வ
தென்னங்காய்போலாகச் சேனைத்தலையுருளவிட்டால்
பனங்காய்கள்போலாகப் பார்தனிலேதலையுருள
செண்டுசெண்டாய்வேணதலை செருக-ளத்துருளவிட்டா
அறுந்ததலைகளெல்லாம் அம்மானையாடுகுது
ஆலைவாய்க்கரும்பதுபோ லரைத்துரசம்பிழிந்தாள்
கரும்புக்கரணைபோலே கண்டித்தாள்வேணதலை
மதப்பட்டயானைகள்தான் மடுவைக்கலக்கினுற்போல்
குட்டிமதயானைகளுங் குளங்கலக்கிவிட்டதுபோல்
கிண்ணிலேசந்தனத்தைக் கூட்டிவழித்ததுபோல்
நீன்முகன்சேனையெல்லாம் நிர்த்தூளிபன்னலுற்றுள்
பிடாரியம்மன்கோயிலுக்கு பலிகொடுக்கும்பாவனைபோல்
அம்மையார்கோயிலுக்கு ஆடுவெட்டும்பாவனைபோல்
அரைநாழிக்குள்ளே அதம்பண்ணுள்பாளையத்தை
சண்டைபண்ணமாட்டாமற் றளர்ந்தோடிப்போருர்கள்
பண்டாரமென்பாரும் பரதேசியென்பாரும்

நாமத்தைக்காண்பித்து நான்தாதனென்பாரும்
பூநூலைக்காண்பித்து பிராமணனென்பாரும்
சமர்க்குவரவில்லையென்று சலாம்செய்தோடுவாரும்
தண்ணீர்தண்ணீரென்றுசொல்லி தவிக்குமாம்பாளையங்க
வடுகரெல்லாம்நீளென்பார் வன்றமிழர்தண்ணியென்பார்
துலுக்கரெல்லாம்பாணியென்று சொல்லிப்புலம்புகிறார்
இவ்விதமாய்பாளையத்தை இறக்கடித்தாளல்லியம்மாள
நீன்முகராசனண்டை நேரிழையும்வந்தெதிர்த்தாள
ஆரடா நீன்முகனே யறிவுகெட்டபாதகனே
வெள்ளாட்டிப்பையலே வீரியமுனக்கேண்டா
தம்பலவட்டிலேந்துந் தாதிபெற்றமகனே நீ
மதுரமபுளிமாயா வைகாசிதையாமா
எருதுபசுவாமா எதிர்த்துவந்தாயாண்பிள்ளையாய்
உன்னைக்குநிப்பேனே உனக்குமொருசேவகமோ
கொசுவும்பருந்தாமோ கூடப்பறக்குமோடா
உயரப்பறந்தாலும் ஊர்க்குருவிபருந்தாமோ
அணிப்பிள்ளையசக்கினாலும் அரிக்குட்டிகீழ்விழுமோ
ஓதிபெருத்தாற்றுணுமா ஒட்டாங்கச்சிழுளையாமா
கொல்லவென்றேபூவுலகில் அல்லியிலேபெண்பிறந்தே
பொற்றாமரையிலே பிறப்பித்தாளீஸ்பரியாள
உன்-தொண்டைக்கிதூண்டிமுள தொப்புளுக்குவீராணி
மண்டைக்குக்கோடாலி மார்புக்குச்செப்புலக்கை
கழுத்தையறுக்கவந்த காமாட்சியம்மனடா
உன்குலதெய்வமடா ஓங்கார அல்லியம்மாள
அறியாமற்போனாயடா அறிவுகெட்டநாய்தலையா
அரைநாழிக்கொள்ளையிலே அந்தகனூர்சேர்க்கிறேன்பார்
கால்நாழிக்கொள்ளையிலே கைலாயம்சேர்க்கிறேன்பார்
உண்டவுப்புமாண்டதோ ஊற்றுபாழாச்சுதோ
தின்றவுப்புமாண்டதோ தெருவுபாழாச்சுதோ
காலனுயாரவந்து கைகட்டியழைத்தானோ
இயமனுருயாரவந்து இங்கேவாவென்றாரோ
ஆகையினாலேயடா அமருக்குவந்துவிட்டாய்
என்சமத்துஞ்சேவகமு மிப்போதறிவாய்பார்
தேரைத்தூத்திவிட்டாள செங்கையில்வில்லெடுத்தாள
கேட்டந்தநீன்முகனுங் கெர்வமதிகமுமாய்
நெற்றிக்கண்ஈஸ்வரனார் நிமிர்ந்துவிழிபார்த்ததுபோல்

வலதுபக்கமீசையது வல்லயம்போலே துடிக்க
இடதுபக்கமீசையது ஈட்டிப்போலே துடிக்க
மீசை துடிக்கிறதும் முன்கோபமாகிறதும்
சாணுண்டேபெண்ணே நீ சமர்த்தாகப்பேசுகிருய்
சவுரியத்தை நானழிப்பேன் தம்பலங்களே ந்தவைப்பேன்
வல்லமையைப்பாரென்று வளைத்தானேவில்லதனை
இவ்விருவர்தேருமிருநிலத்திருன்சுழல
மாணிக்கச்சொக்கரையு மனதில் நினைத்தாளே
அங்கயற்கண்ணுயகியை ஆதிபரமேஸ்பரியை
மனதில் நினைத்தல்லோ வாங்கிவிட்டாள்பாணமதை
பாவியந்த நீன்முகனும் பதறிச்சரம்பொழிந்தான்
விட்டான்சரபாணம் மெல்லி நல்லாள்மேனியிலே
கோடானகோடிபாணம் குறித்தானே நீன்முகனும்
அல்லிப்பெருமாளும் அதிகமானகோபமுடன்
ஒன்றுக்குப்பத்துகணை யொருநூற்றுக்காயிரமாம்
சரமேற்சரம்பொழிந்தாள் வருணது அஸ்திரங்கள்
வாயுவினஸ்திரங்கள் வருணது அஸ்திரங்கள்
திவ்விய நல்ல அஸ்திரங்கள் தீர்க்கமுள்ள அஸ்திரங்கள்
சண்முகனஸ்திரமாஞ் சந்திரனஸ்திரமாம்
பானுவினஸ்திரமாம் பார்வதியஸ்திரமாம்
வக்ரதந்தனஸ்திரமாம் வருணனுட அஸ்திரமாம்
இடிபகவானஸ்திரமாம் இந்திரனஸ்திரமாம்
ராமச்சந்திர அஸ்திரமாம் நவச்சந்ர அஸ்திரமாம்
பிரமனுட அஸ்திரமாம் பெருமாளினஸ்திரமாம்
கார்த்திகைமாதமதில் அடர்ந்தமழைபெய்ததுபோல்
ஐப்பசிமாதத்தில் அடர்ந்தமழைபெய்ததுபோல்
சோனைமழைகளுமே சொரிந்ததுபோற்றூவிவிட்டாள்
விட்டதொருபாணமது மட்டுமிதங்களில்லை
நான்குநாள்மட்டும் நல்லசண்டைபண்ணலுற்றுர்
வில்பிடித்தகைகளது மெத்தசிவப்பேறிற்று
அம்பிழுத்தகைகளாறு லல்லிப்பூவர்ணமாச்சு
நெல்லிப்பழம்போலே நெருங்கிடுங்கொப்பளங்கள்
இவ்விதமாக இருவர்சண்டைபண்ணினர்கள்
அப்போது அல்லியம்மாள் அம்மனேயேதோத்தரித்து
இடியாஸ்திரமதனை யெடுத்துமந்ரா தூபமிட்டு

மார்பளவுவாங்கியேதான் தோள்பிளக்கவேதொடுத்தாள்
வாய்களில்நெருப்பெறிய வந்துவிழுந்ததுவே
தேருமுடைந்ததுவே செம்புரவிசெத்ததுவே
போட்டசட்டைவச்ரகபாய் பொடியாகத்தானழித்து
சட்டைதமான்வச்ரகபாய் தவுடுபொடியாச்சுது
சல்லடைக்கண்போலே சரீரங்கள்தொளையாகி
பதாதியாய்நின்றுனே பராக்கிரமநீன்முகனும்
எடுத்தான்வளைதடியை ஏற்றினன்கேடயத்தை
கண்டாளே அல்லியம்மாள் கண்சிவந்துகோபமுடன்
கேடயமும்வாளெடுத்துக் கெர்ச்சித்துக்கீழ்குதித்தாள்
எலியைக்கண்டபூனையைப்போ லெழும்பினளல்லியம்மா
பசுவைக்கண்டபுலியதுபோற் பாய்ந்தானே நீன்முகனும்
யானைகண்டசிங்கம்போ லல்லியெழுந்தாளே
கொக்கைகண்டராஜாளிபோற் குதிக்கிறுன் நீன்முகனும்
மானைக்கண்டசிவிங்கையைப்போல் வருகிறுளல்லியம்மா
உன்னைவிடுவேனென்று உன்மனதிலெண்ணுதே
நீன்முகாவுன்றலையை நிமிஷத்தில்வாங்குவேன்பார்
இடசாரிவலசாரி இருவர்களுஞ்சுழலுகிறுர்
சக்கரஞ்சுழல்வதுபோற் சமர்த்தாகச்சுற்றுகிறுர்
வண்டுதும்பிபோலாக வட்டமிட்டகருடனைப்போல்
முன்கந்துபாய்ந்தலவோ முதுகின்மேல்வெட்டுவாளாம்
தட்டிஉதறிநிற்பான் தாக்குவானல்லியரை
எமனும்எமன்போலே இந்திரனுமிந்திரன்போல்
மலையும்மலையோடு வந்தெதிர்த்தபாவனைபோல்
புலியும்புலியுடனே பதுங்கியெதிர்த்ததுபோல்
நான்குநாழிகைமட்டும் நல்லசண்டைபண்ணினர்கள்
பொற்றுமரைதனிலே பிறந்தெடுத்த அல்லியரும்
ஆலவாய்ச்சொர்க்கரென்னும் ஆண்டவரைத்தானினைத்
மதுரைமீனுட்சியை மனதிலேதானினைந்து (து
முன்கந்துபின்கந்து முப்பத்திரண்டுகெந்தும்
பக்கவளவாகவந்து பாச்சலுடனேயெழும்பி
வீசினள்வாளாலே வேறிரண்டுதுண்டாக
கருப்பங்கருணையைப்போற் கண்டித்துக்கீழ்விழ்த்தி
ஏறினள்தேர்மே லெடுத்தாள்நெடுங்குடையை
நீன்முகன்விழுந்தானென்று நீள்சங்குதான்தொனித்தா
தேரைத்திருப்பிவந்தாள் தேன்மொழியாளல்லியம்மாள்

நீன்முகன்மார்மீதில் நீலிரதமோட்டினளே
செயங்கசெயங்களென்று செப்பேரிபோட்டுவந்தாள்

## அல்லியம்மாள் மதுரைக்குவந்து பட்டங்
## கட்டிக்கொண்டது.

எழுபதுசேனதிபதி யெல்லவருமோடிவந்தா
தப்பிப்பிழைத்தவர்கள் சகலசனங்களெல்லாம்
அல்லிப்பெருமாளுக்கு அடிபணிந்துதெண்டனிட்டார்
அடைக்கலமாச்சியென்று அடிபணிந்துதெண்டனிட்டா
தேவதுந்துமிமுழங்க தேவர்பூமாரிபெய்ய
ஆயிரவரொன்னு மையன்மார்தாமறிந்தார்
சந்தோஷப்பட்டங்கு தார்வேந்தரோடிவந்தார்
மகள்தன்னைப்பார்த்தலவோ மகிழ்ந்தார்கள்பாண்டியர்கள்
மதுரைத்தெருவனைத்தும் மாவிலையாசிலையால்
தோரணங்கட்டுமென்றாள் துரைமகளல்லியரும்
அரைநாழிக்குள்ளே அலங்கரித்தார்பட்டணத்தை
எங்குமலங்கரித்து எத்திசையும்நீர்தெளித்து
வாழைகமுகுமரம் வாசலெல்லாம்நட்டார்கள்
சேனைகள்சூழ்ந்துவர செயபேரியடித்துவர
மேளங்களார்ப்பரிக்க மொய்குழலிவருகிறாளே
மதுரைத்தெருவைச்சுற்றி மாளிகையில்வந்தமர்ந்தாள்
சிம்மாசனத்தின்மீ தேறினாள்தேன்மொழியாள்
ஆருயிரம்பாண்டியரா மையமாரானவர்கள்
பட்டந்தரித்தார்கள் பத்தினியாளல்லியற்கு
சீமைத்துரைத்தனமுஞ் செங்கோலுந்தந்தார்கள்
பொம்மைவிருதுகட்டி பூதலைகட்டிவைத்து
அல்லிக்கொடிகட்டி யாசுநிலையாளுகிறாள்
மதுரையம்பத்தாறுகாதம் மாதுமையாளுகிறாள்
ஆண்பட்டங்கட்டியே பூமியரசாளுகிறாள்
பெண்பட்டங்கட்டியே பூமியரசாளுகிறாள்
இந்தவிதமாக எல்லையரசாண்டிருந்தாள்
இப்படியாகவேதான் இருந்தாசுஆளுகையில்
ஆணலழகுமன்னன் அருச்சுனனுமப்போது
இந்திரபுரிப்பட்டணத்தில் வந்துசிலதிருடர்

பசுதிருடிப்போனசெய்தி பார்த்திபன்தானறிந்து
அம்புவில்லெடுக்க அரண்மனையிற்போய் நுழைந்து
ஏழாம்நிலையின்மேல் இன்பமாயேறினனும்
தருமருந்துரோபதையுஞ் சருவிவிளையாடையிலே
குங்குமப்பூமெடையிலே கூடியுறவாடினர்கள்
கலந்திருந்தவண்மைதனைக் கண்ணாலேகண்டுவிட்டான்
முன்னிட்டகாலையவன் பின்னிட்டுவாங்கினனே
மந்தாரக்குந்தியரை மாதாவைத்தேடிவந்தான்
ஆச்சியர்தன்பாத மடிவணங்கித்தெண்டனிட்டான்
வாழ்த்திவிடைகொடுத்து வர்ணித்தாள்குந்தியம்மாள்
ஆச்சியரேயென்தாயே யடியேனொருவார்த்தை
அண்ணனுந்தேவியரு மன்பாகமெத்தையின்மேல்
கலந்துவிளையாடுவதைக் கண்ணாலேகண்டேனம்மாள்
சருவிமயலாகையிலே சடுதியில்யான்கண்டுவிட்டேன்
பார்த்தபடியினாலே பாவம்வந்துநேர்ந்ததம்மாள்
ஆகாதபாவத்துக்கு ஆளானேனச்சியரே
பொல்லாதபாவம்வந்து போதப்பலித்ததம்மாள்
இப்பாவந்தீர்வதற்கு எத்தலங்களும்பார்த்து
கோதாவரியமுனை குமரிசரஸ்வதியும்
கங்கைநருமதை காவேரிதுங்கபத்ரி
காசிஸ்நானஞ்செய்யவேண்டுங் கன்பாவந்தீரவேண்டும்
பாரதஸ்தலங்களெல்லாம் பார்த்துவருகிறேன்யான்
சிவஸ்தலம்விஷ்ணுஸ்தலந்தெரிசனம்செய்வேன்யான்
கால்கொண்டதூரமெல்லாங் கண்டுவருவேன்யான்
போகவேண்டுமென்று பொன்னடியைத்தெண்டனிட
அவ்வார்த்தைதான்கேட்டு அழுதுபுலம்பலுற்றாள்
உன்னையான்பாராமலொருநிமிஷம்நிற்கமாட்டேன்
பாராதிருப்பதற்குப் பாவிமனம்வருமோ
செத்துமடிந்து செலவழிந்துபோவேனென்றாள்
அழுதுபுலம்பலுற்றாள் ஆரணங்குகுந்தியம்மாள்
அழுதகுரல்கேட்டு அத்தருமாராயர்வந்தார்
சந்தனவடிவழகன் தருமாராயர்வந்துவிட்டார்
ஏதுக்கழுவதுதா னென்றாயேசொல்லுமென்றார்
அருச்சுனன்சொன்னதெல்லாமாசசியருந்தாமுரைத்தால்
மாதாமொழிகேட்டு மறலிமைந்தன்மனம்நொந்து
சொற்பேச்சுகேளானே சுத்தப்பூமுடியான்

என்வார்த்தைகேட்டானே இளவிஜயராசனென்று
யாரை நினைத்தானோ அளவற்றசிந்தையிலே
எவரை நினைத்தானோ இன்பமுள்ளசிந்தைதனில்
எம்பெருமாள்மேகவண்ணு ஏழுலகளந்தவரே
அடியளந்தமாயவரே ஆதிமூலம்வாருமென்றார்
இவ்வேளையிச்சமையம் இங்கேவாசுவாமியென்றா
தருமர்நினைத்ததனைச் சுவாமியிதுவறிந்தார்
ஏழையழுதகண்ணீர் வாளாகதைத்ததுவே
தருமர்நினைத்ததுதான் தப்பாமற்றுமறிந்து
வட்டமாங்கருடனேறி வந்துவிட்டாரெம்பெருமாள்
சிவந்தகருடனேறு ஸ்ரீராமர்வந்துவிட்டார்
காடுசெடிதாண்டி கரியமலைதான்கடந்து
ஆறுசுனைகடந்து யதிகவனந்தான்கடந்து
சந்தணவடிவழகன் தருமரண்டைவந்துவிட்டார்
வாகனம்விட்டிறங்கி வந்துசரணமிட்டா
என்னையழைத்ததுதானேதுகருமமென்றார்
சிம்மாசனம்போட்டு சீராயிருமென்றார்
இட்டசிம்மாசனத்தில் எம்பெருமாள்வீற்றிருந்தார்
சந்தனவடிவழகர் தருமராயரேதுரைப்பார்
ஆணலழகுமன்னன் அருச்சுனராசனவன்
தீர்த்தயாத்திரைபோகச் சிந்தையில்நினைந்தானே
காசியாத்திரைபோகக் கருத்தில்நினைந்தானே
யார்சொல்லுங்கேளேனென் றருச்சுனன்போகலுற்றான்
தனியேஅனுப்புதற்குச் சற்றுமனந்தோன்றவில்லை
அருச்சுனற்குத்துணையாக அரிராமாபோய்வாரும்
கூடத்துணைபோங்கள் கோபாலசுவாமியேநீர்
கும்பிடுந்தெய்வமேநீர் குழைத்திடும்நாமமேநீர்
உன்னையேநம்பியா னுயிர்கொண்டுலாவுகிறேன்
யாரைச்சதமென்பேன் அன்னையரைத்தஞ்சமென்பேன்
எவரைச்சதமென்பேன் இனியாரைத்தஞ்சமென்பேன்
உம்மையல்லால்வேறுதுணை உண்டோவிம்மாநிலத்தில்
அருச்சுனனர்பின்சென்று அழைத்துவந்துசேருமையா
போய்வாருஞ்சுவாமியென்றார் புகழ்வேந்தன்தர்மலிங்கம்
மாதாவாங்குந்தியம்மாள் வாழ்த்திசெலவுதந்தாள்
மாயனருச்சுனனும் வணங்கியெழுந்திருந்தார்

## மாயவனும் அருச்சுனனுந் தீர்த்தயாத்திரை போகிறது.

காஷாயந்தானுடுத்தி கடுகிவேஷங்கொண்டார்கள்
சன்யாசிவேஷங்கொண்டு தவமுனிபோல்வடிவெடுத்தார்
அம்புவில்லுங்கைபிடித்து அரியமுனிபோல்நடந்தார்
தருமாபுரம்வீமாபுரம் தானிபுரந்தான்கடந்தார்
உத்திரவனங்கடந்து இனியவனம்போகலுற்ருர்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
காசிநதிபோய்மூழ்கிக் கனதீர்த்தமாடினர்கள்
விசுவநாதசுவாமியைத்தான் வேண்டிதரிசித்தார்கள்
துங்கபத்ரிகோதாவரி தொலைதீர்த்தமாடினர்கள்
தருமதைசரஸ்வதியில் ஸ்நானமுஞ்செய்தார்கள்
மல்லிகார்ச்சுனைவந்து மயேஸ்வரனைபூசைசெய்து
திருப்பதியேவந்தார்கள் தெரிசனமேசெய்தார்கள்
கண்ணப்பன்காட்சிதந்த காளஸ்திரீவந்தார்கள்
காளத்திநாதனையுங் கானம்மனைத்தரிசித்தார்
திருப்பாலைவனந்தனிலே சீருடனேவந்தார்கள்
பாலீசர்நாதரை பணிந்துதெண்டஞ்செய்தார்கள்
வான்மீகரர்ச்சித்த மருந்தீசரை தரிசித்தார்
திருவொற்றியூரில்வந்து தியாகரைபூசைசெய்தார்
கழுக்கள்வலமவந்து கடைநயினர்பூசித்த
திருக்கழுகுன்றபதி தேடியேவந்தார்கள்
வேதகிரிலிங்கத்தை வேண்டிசரணமிட்டார்
வண்ணாப்பெண்ணுக்காய் மணம்போனரென்றசொல்லி
அண்ணாமலையாரை யாணழகர்தேடிவந்தார்
அருணகிரிநாதரைத்தா னடிபணிந்துதெண்டனிட்டார்
புத்திடங்கொண்டதொரு பொன்திருவாரூர்போனர்
தியாகரைதெரிசித்துத் திரும்பினரிருவருமாய்
சிதம்பரந்தன்னிலேதான் சபாபதியைதெரிசித்தார்
மாயூரங்கும்பகோணம் வந்துதரிசித்தார்
ஸ்ரீரங்கம்வந்தலவோ ஸ்ரீரங்கரைபூசைசெய்தார்
ஜம்புகேஸ்வரத்திலேதான் ஜம்புலிங்கந்தரிசித்தா
இராமேஸ்வரத்துக்கு இருவருமாய்நடந்தார்

சேதுவில்ஸ்நானஞ்செய்து சேதுலிங்கம்பூசைசெய்து
பிட்டுக்குமண்சுமந்த பித்தரைக்காணவென்று
மதுரைநகர்தேடி வருகிருரிருவருமாய்
வருகிறவழிதனிலே வாணியனெருவனவன்
அல்லியரசாணி யாரணங்குமாதினுக்கு
நித்தமவன்மூத்தளக்கும் நீதியுள்ளவாணியன்தான்
அன்றுடகமுத்தி லளவுகுறைந்ததென்று
படிமூத்துகுறைந்ததென்று பதறிப்புலம்புகிருன்
வாயிலறைந்துகொண்டு மண்ணிற்புரளுகிருன்
அழுதகுரல்கேட்டு அங்குவந்தாரிருவருமாய்
ஆரடாதம்பியரே அழுதுபுலம்புவதேன்
உன்னே-அநீதம்பண்ணவரார் ரடித்தும்பறித்தவரார்
இப்போதுன்னுடமைகொள்ளை யிட்டவரெவர்காணும்
அழுதுபுலம்புவதே னவ்வயணஞ்சொல்லுமென்ருர்
வனந்திரியுஞ்சன்யாசி வார்த்தையதுங்களுக்கேன்
ராஜாத்திவார்த்தையதை நானுரைக்கக்கூடாது
சொன்னேனேயாமாகிற் சுகமாக்கப்போரீரோ
உங்களாலாவதென்ன வூர்வழியேபோங்களென்ருர்
அவ்வார்த்தைதான்கேட்டு அர்ச்சுனனுமேதுரைப்பார்
சொன்னுற்குறைவுண்டோ சுகம்பெறுவீர்வாணியரே
பெரியோர்க்குசொன்னதினுற் பிழையுண்டோவுந்தனுக்கு
உன்-மனதுகுறைவகற்றி வகைமானஞ்செய்திடுவோம்
அழுதவயணமதை யறியவுரையுமென்ருன்
ஆறுற்கேள்சன்யாசி யவ்வயணஞ்சொல்லுகிறேன்
ஐயாபெரியவரே ஆண்டவரேகேளுமையா
மானுமதுரையது வடமதுரைப்பட்டணத்தில்
தென்மதுரையாளுகின்ற தேன்மொழியாளல்லியம்மாள்
ஆருயிரம்பாண்டியற்கு அரியதுரைமகள்காண்
வயிற்றிற்பிறந்ததில்லை வன்கொடுமைசெய்ததில்லை
குடலிற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை
ஓடுகிறதண்ணீரி னுள்ளேமணற்சேறுமுண்டு
அடிக்கிறகாற்றதனி லலைக்காற்றிற்றுரும்புமுண்டு
சந்திரற்குமாசியுண்டு சற்றேகருப்புமுண்டு
குண்டுமணிக்காணுலுங் கொஞ்சங்கறுப்புமுண்டு
புருவங்கறுப்பொழிய பின்னேகருப்புமில்லை
மயிரேகறுப்பொழிய மற்றக்கறுப்புமில்லை

ஆருயிரவருந்தா னரியமைந்தனில்லாமல்
மாளுவோமென்றுசொல்லி மலைமேற்றவமிருந்தார்
மாளாதேயென்றுசொல்லி மலரிலவதரித்தாள்
பொற்றாமரை தனிலே பிறந்தாளேமாதுகன்னி
அல்லியிலைமே லருமையாய்த்தான்பிறந்து
அல்லியென்றுபேருமிட்டு ஆரணங்குபெண்வளர்ந்தார்
ஏழுபிராயமதி லெதிர்த்துவந்த நீன்முகனை
நீன்முகனைகொன்றவளும் நீலிபட்டங்கட்டிக் கொண்டா
பொம்மைவிருதுகட்டி பூமியரசாளுகிறாள் (ள்
அவ்வார்த்தைதான்கேட்டு அர்ச்சுனனுமேதுரைப்பார்
அழகில்மிகுந்தபெண்ணை ஆணழகர்சொல்லுமென்றார்
அவளழகும்பாவனையு மையாவேசொல்கிறேன்கேள்
எல்லார்தலைமயிரு மிருமுழமுமொருமுழமாம்
எல்லார்தலைமயிரு மிருபாகமொருபாகம்
ஆரணங்குகூந்தலது அறுபத்துமூன்றுமுழம்
வண்டுமுதுகோடுபோலே மயிர்நிறமாயிருக்கிறது
தேய்பிறைசாயலைப்போல் திருநெற்றிகண்ணழகும்
வேப்பிலைசாயலைப்போல் மேற்புருவத்தினழகும்
கூரியமூக்கழகுங் குளிர்ந் மூகத்தழகும்
மூத்துப்போற்பல்வரிசை முருக்கிதழ்போற்செவ்வுதடும்
நீர்முட்டைபோற்கண்ணழகும் நெரித்தபுருவமுடன்
சங்குகழுத்தழகுஞ் சாதிலிங்கமேனிகளும்
காமன்கடைந்ததுபோற் கலசத்திளமுலையும்
கர்ப்பகச்சாயலைப்போற் கைத்தலமிரண்டழகும்
ஆலிலைபோலாக அமர்ந்ததிருவயிறும்
சிங்கத்திடைபோற் சேர்ந்தவிடையழகும்
இளவாழைத்தண்டதுபோ லிருதொடைவடிவழகும்
மூத்துச்சிப்பிபோலே முழங்காலிரண்டழகும்
புத்தகஞ்சேர்ந்ததுபோற் புறங்காலின்பேரழகும்
சுவரிலெழுதலாகுஞ் சித்திரம்போற்பார்க்கலாகும்
படத்திலெழுதலாகும் பதுமைபோற்பார்க்கலாகும்
வேரிற்பவளங்கள் மின்னுகிறகாந்தியவள்
மின்னலொளிபோலே மெல்லிநல்லாள்தன்னிறங்கள்
கொம்பனையாள்வார்த்தையது குயில்களகுரலோசை
காய்க்கும்பிராயமையா கன்னிகட்டும்காலமையா
பூர்க்கும்பிராயமையா பிஞ்சுவிடுங்காலமையா

அவளைப்போலழகுடையா ளாருமில்லைவையகத்தில்
கட்டழகிமாதினுக்குக் கலியாணமாச்சுதடா
மாலைபசுங்கிளியு மணமுகூர்த்தஞ்செய்தனளோ
ஆனுற்கேளசன்யாசி யவ்வார்த்தைசொல்லுகிறேன்
கொளளவருமாப்பிளளைக்குக் குறடாகொடுப்பேனென்று
ஆளவருஞ்சம்பந்தியையடிப்பேனென்றுளசேருபந்தால்
கலியாணமென்றவளைக் கண்ணைப்பிடுங்கிடுவாள
மூன்வாசற்படிதனிலே மூச்சிகொட்டாகட்டிவைத்தால்
பாலைக்கறந்துதான் பட்டணத்தில்வைத்தாக்கால்
பறக்கிறகாகமது பாராதுதலையெடுத்து
ஆண்காற்றடியாது அல்லியம்மாள்கோட்டைதன்னில்
ஏறுவதும்பெண்குதிரை இருப்பதுவும்பெண்சேனை
பன்னிரண்டுவயதாச்சு பாலப்பிராயமையா
நித்தங்கலமூத்தளப்பேன் நீதியுள்ளமாதிகனுக்கு
அவளுக்கு அன்றுடகமூத்தி லளவுகுறைத்தையா
ஆகையினுலேதா னழுதுபுலம்புகிறேன்
வெட்டியெறிந்திடுவாள் வீரமணிவாளினுலே
கொல்லநினைப்பாளே குடிகேடுவந்திடுமே
ஆகையிருலேதா னழுதுபுலம்புகிறேன்
அவனுக்காதரவுசொல்லி யப்ரிறமேபோனைகயிலே

அருச்சுனன் அல்லியின்மேலாசை கோண்டது.

அருசசுனராஜனவ னதிகமோகங்கொண்டானே
அப்புறம்நடக்கநியான் அர்ச்சுனராஜமன்னன்
ஆல்லியர்மேலாசயது அதிகமோகங்கொண்டானே
காமவிகாரத்திற் கீளதாங்கிப்போனுனே
மன்மதனெய்தகணை மார்பைப்பிளக்கிறதே
சித்தசன்தொடுத்தகணை சிறுமார்புருகிறதே
மோகித்தானு மூர்ச்சைபட்டுப்போனுனே
பாணங்களைந்துப் பட்டுநெஞ்சுருகிறதே
மாரன்விடும்பாணமது மார்புருகிப்போகிறதே
ஆயன்பெருமாளே அடியேனெருவிண்ணப்பங்கேள்
கட்டினவிருதுகளைக் கடுகியவிழ்க்கவேணும்
அல்லியரைமாலையிட்டு அழகுமணஞ்செய்யவேணும்
எந்தவிதமானுலு மிணைமாலைகூட்டவேணும்

மாலையிட்டாலல்லாது மாயவனேவருவதில்லை
செத்துமடிவேனையா செலவழிந்துபோவேனையா
அவ்வார்த்தைதான்கேட்டு அரிராமரேதுசொல்வார்
கட்டென்னகாவலென்ன காவலதிகாரமென்ன
ஆருயிரவர்களா மையமார்சேனையென்ன
சேவகமிருந்ததொரு தேன்மொழியாளல்லியரும்
கலியாணம்பண்ணுதற்குக் காண்டீபா ஆகுமோதான்
கொல்லநினைப்பாளே குடிகேடுவந்திடுமே
செத்துமடிவாயே செலவருந்துபோய்விடுவாய்
தேசத்திற்பெண்களோடா சேனபேர்கிட்டாரோ
சாதியிலொருபெண்ணைத் தாலிகட்டிவைப்பேனடா
குலத்திலொருபெண்ணை கோலம்பண்ணிவைப்பேனடா
மாதுடையவார்த்தையைத்தான் மறந்துவிடுவாள்விசயா
பெண்ணென்றவார்த்தையைநீ போட்டுவிடுவாள்விசயா
அல்லியரைமாலையிட ஆகாதுவுன்னாலே
செத்துமடிந்திடுவாய் செலவழிந்துப்போயிடுவாய்
நச்சுநச்சயென்னாதே நாம்போவோம்ராசாவே
தீர்த்தயாத்திரைவந்து சேனநாளாச்சுதடா
தருமருந்தம்பியருந் தவித்துப்புலம்புவாரே
ஆரணியவாசம்வந்து அநேகநாளாச்சுதடா
என்றதுதான்கேட்டு ஏதுசொல்வான்வாள்விசயன்
நான்-செத்துமடிந்தாலும் செலவழிந்துபோனாலும்
மாண்டுமடிந்தாலும் வைகுந்தஞ்சேர்ந்தாலும்
செத்தவிடந்தனிலே செங்கழுநீர்பூபூர்ப்பேன்
மாண்டவிடந்தனிலே மல்லிகைபூபூர்ப்பேன்
பஞ்சணைமெத்தையிலே படுக்கைமலராவேன்யான்
கொண்டைக்குப்பூவாவேன்கொசவணத்திற்பையாவேன்
நெற்றிக்குப்பொட்டாவேன் நீலவிழிமையாவேன்
முந்தானைத்தொங்கலிலே முள்ளாகியொட்டுவேன்யான்
காலுக்குமிஞ்சிபோலுங் கைவளையல்தானாவேன்
மாலையிட்டாலல்லாது மாயவனேவருவதில்லை
கலியாணஞ்செய்துவைக்கும் கரியமாலெம்பெருமாள்
உன்-புண்ணியத்தினாலேதான் பிழைக்கவழியாருமையா
பார்த்திபன்யாவினது பாதம்பணிந்தானே
ஆயர்பெருமாளும் அருளாளரேதுசொல்வார்
புத்திகெட்டுநானுமுந்தன் பின்னாலேவந்தேனடா

அறிந்துமிருந்தும்நான் அறிவழிந்துவந்தேனடா
பெண்களைப்பார்த்துநீ பேதைபோற்புலம்புகிறாய்
அல்லியின்மேற்சிந்தையா யருச்சுன னுஞ்சோபமானன்
காமக்கணைப்பட்டு களைதாங்கிக்கீழ்விழுந்தான்
ஆயன்பெருமாளும் ஆலோசனைபண்ணலுற்றார்
மாதுயென்னுமல்லியரை வரவழைக்கவேண்டுமென்று
மாயமிருகந்தனை மாயவனுருண்டுபண்ணார்
காட்டானைசிங்கங்களுங் காடிபுலியாளிகளும்
மானுமுயல்களுடன் மட்டற்றபன்றிகளும்
மயிலுங்குயிலன்னம் வண்ணவண்ணபட்சிகளும்
அநேகமிருகங்களை யரிராமருண்டுபண்ணார்
மதுரைக்குடிபடைகள் மகாசனங்களத்தனையும்
காட்டில்வாத்தான்பயந்துகன்னிநல்லாள்முன்னேவந்து
அல்லியற்குதெண்டனிட்டு அடிபணிந்தே துரைப்பார்
இத்தனைநாள்பிழைத்தோ மிடுக்கமிலையென்றிருந்தோம்
என்னகுறைசெய்தோமோ எண்ண வாண்ணுமிருகங்கள்
காட்டுக்குப்போவோமென்றாற் கனத்தமிருகமம்மா
பொல்லாதமிருகங்கள் புலிகள் துரத்துதம்மா
எதாற்பிழைப்போமென் றெல்லவருந்தானழுதார்
அல்லிப்பெருமாளும் ஆரணங்குமேதுரைப்பாள்

அல்லியரசாணி வேட்டைக்கு வருகிறது.

மிருகத்தால்மடிவோமென்று மிகவும்பயப்படாதே
வேட்டைக்குநான்போய் வேணமிருகமெல்லாம்
அரைநாழிகைக்குள்ளே அதம்பண்ணிபோடுகிறேன்
அஞ்சாமலெல்லவரு மரண்மனைக்குப்போங்களென்றாள்
அத்தண்டபேர்களெல்லா மரண்மனைக்குப்போனபின்பு
ஆரடிதாதியரே யலங்காரச்செங்கமலம் [ருள்
வேட்டையாடும்பெண்களை விரைந்தழைத்துவாருமென்
குறவர்பெண்கள்மறவர்பெண்கள் கூட்டிவாதாதியரே
வில்லியர்பெண்களைநீ விரைந்தோடியழையுமென்றாள்
குதிரைமேற்சீனிகட்டு கொப்பெனவேதாதியென்றாள்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆரணங்குதாதியவள்
இலாயத்தில்கட்டிவைத்து இருக்கின்றபுரவிகளில்
பாராசாரிபுரவிதன்னைப் பாங்குடனேதானவிழ்த்து

குதிரைக்குளுப்பாட்டி கொண்டகடிவாளமிட்டு
நாலுகாலுக்கும்வண்டையமாம் நடுக்கழுத்திற்கொலுசுக
பக்கத்திலங்குபடி பதியவைத்தாரப்பொழுது [ளும்
கண்ணாடிசல்லி கவரிமான்சுங்குவிட்டு
மூத்துத்துராகலிக்கத்துரா முனைனாலேதான்சொருகி
இமாம்பட்சியிறகுதன்னை யியல்பாகத்தான்சொருகி
குதிரையையலங்கரித்துக் கொண்டுவந்துமுன்புவிட்டார்
அம்புவில்லுங்கைபிடித்து அம்ராதூணிமுதுகணிந்தாள்
பதினாயிரங்கோழிமார் பாங்காகச்சூழ்ந்துவர
ஆயிரம்யானைசேனை அல்லியுடன்பயணமாச்சு
வெள்ளிதமுக்கடித்தார் வெண்கலக்கொம்பூதினார்கள்
பொன்னுதமுக்கடித்தார் புறப்பட்டார்பெண்களெல்லாம்
வேட்டைநாய்சங்கிலியும் விருதுகட்டிவருகிறார்கள்
மான்வலையும்வல்லயமும் வளைதடியுஞ்சக்காமும்
இரட்டைகுழைதுப்பாக்கி யிருதோளிலிட்டார்கள்
காற்செருப்புந்தோற்குல்லாவும் கைதனில்சில்லாக்கோல்
அந்தவிதப்பெண்களெல்லா மல்லியரைசூழ்ந்துவர
அப்போதுஅல்லியம்மா ளாரணங்குதானெழுந்து
புரவியருகில்வந்தாள் பெண்கொடியாள்மாதுகன்னி
புரவிதனைச்சுற்றிவந்து போதவேசரணஞ்செய்தாள்
கழுத்துமயிர்பிடித்துக் கடிவாளங்கைபிடித்தாள்
தட்டினாள்புரவிதனைச் சடுதியிற்றானேறினளே
அடிவயிற்றிற்கால்தட்ட அபாரியாயோடிற்று
ஆயிரங்குதிரைகளி லல்லியம்மாள்குதிரையது
காற்றாய்ப்பறந்தலவோ கடிகியேவருகிறது
பட்டணந்தான்கடந்து பாரவனந்தான்புகுந்தாள்
காட்டைவளைத்தார்கள் கருநாயைச்சூழவிட்டார்
செடியைவளைத்தார்கள் செந்நாயைச்சூழவிட்டார்
கோணக்கொம்பூதுவார்கள் கொப்பெனதமுக்கடிப்பார்
ஆயன்பெருமாளும் அருச்சுனரைத்தானெழுப்பி
வருகிறாள்காணல்லியரும் வனந்தனிலேவேட்டையாட

அல்லியற்கு அருச்சுனன் அம்புபொறுக்கித் தருவது.

அவள்-எய்கிறபாணமெல்லா மெழில்விசயா நீபொறுக்கி
அம்புகள்தான்பொறுக்கி யல்லியற்குநீகொடுத்து

வல்லமையாய்வந்தாலே மாலையிட்டுவைப்பேனென்றூர்
அந்தமொழிகேட்டு அருச்சுனன் தானெழுந்தான்
மாயமிருகமது வந்துதே அல்லிமுன்பு
புள்ளிமான் றன்னேயே பொற்கொடியாள் கண்டுவிட்டாள்
மானைத்துரத்தியேதான் வருகிருளல்லியம்மாள்
காற்ருய்ப்பறந்திற்றே கானகத்தில்மான துதான்
குதிரைசவாரிவிட்டு கொப்பெனவே துரத்தலுற்ருள்
கூடத்தொடர்ந்தானே கோபாலன்மைத்துனனும்
அல்லியராசாணியவள் அம்புகளெய்ததெல்லாம்
பொறுக்கித்தருவானே போர்விஜயனருச்சுனனும்
காடெல்லாம்வேட்டையாடி களைத்தாளே அல்லியரும்
விடுவிடுநேரமது வெயிலானவேளையிலே
ஆலமரத்தடியி லங்கேயிறங்கிவிட்டாள்
ஆரடிதாதியரே ஆசனம்போடுமென்ருள்
அரைத்துணிதானவிழ்த்து அருச்சுனன்கீழ்போட்டான்
குதிரையைக்கட்டுமென்று கொப்பெனவேதான்படுந்தாள்
அகிலமரந்தன்னுடனே யணைத்துவைத்தாள்குதிரைத [னை
பாங்கியரேஎன்னுடைய பாதம்பிடியுமென்ருள்
அருச்சுனராசதுரை அல்லியற்கெதிரேவந்து
அல்லியம்மாள்தன்பாத மருச்சுனன்பிடிக்கலுற்ருன்
கைகால்பிடிக்கையிலே கணையாழிகழற்றிக்கொண்டான்
ஆரடிதாதியரே யலங்காரத்தோழியரே
நீங்கள்-கற்றகதைதனிலே கதையொன்றுசொல்லுங்கள்
களைகள்தெளியவேண்டுங் கதையொன்றுசொல்லுங்கள்

அருச்சனன் அல்லியற்கு கதைசொல்லல்.

ஆணுலழகுமன்ன னல்லியர்க்குகதையுரைப்பான்
குருகுலவங்கிஷாங் குந்திமக்களைந்துபேராம்
துருவாசர்மந்திரத்தால் துலங்கவந்தநவமணிகள்
சந்திரகுலம்விளங்கத் தருமாவனைந்துபேர்கள்
பாண்டுராசன்பெற்றெடுத்த பஞ்சவர்களைவருண்டு
தருமருக்குநேரிளையான் வில்வாங்குமருச்சுனன்காண்
வீமருக்குநேரிளையான் வில்வாங்குமருசசுனன்காண்
நெருப்பிற்பிறந்ததொரு நேரிழையாள் துரோபதையை
எட்டாதவில்வளைத்து இளங்கொடியைமாலையிட்டாள்

மீசைமுறுக்கழகன் விழியிலேகறுப்பழகன்
நாவுதனில்நட்சத்திரம் நயனவிழிப்பார்வையுள்ளான்
தோளிலேதுளசிமாலை தொப்புளிலேயமூர்தகலசம்
பல்லிற்பரசவீணை பாதத்திற்செந்தாமரை
முதுகிலேமச்சரேகை முழங்காலில்மாணிக்கம்
ஸ்ரீலீலைமன்மதன்காண் இளம்பெண்கள்மணவாளன்
முன்னிலும்பின்னழகன் மோககன்னிமணவாளன்
பின்னிலும்முன்னழகன் பெண்களுக்குமணவாளன்
அருச்சுனனைப்போலே அழகுடையாராருமில்லை
திக்குநல்லபாலகரை ஜெயம்பண்ணுஞ்சேவகன்றான்
இவ்வார்த்தைதான்கேட்டா ளிளங்கொடியல்லியம்மாள்
என்னகதைசொன்னாயென்று ஏறமுகம்பார்த்தாள்காண்
மீசைகட்டும்பாவனையும் விழியழகுங்கண்டுவிட்டாள்

## அருச்சுனன்பேரில் அல்லியரசாணி கோபித்தது.

ஆரடாஆண்பிள்ளையென்று ஆயுதத்தைத்தாளெடுத்தா
காற்றாய்ப்பறந்தானே கட்டழகன் அருச்சுனனும்
கத்தியெடுக்கையிலே காதவழியோடிவிட்டான்
நிற்கத்தரியாமல் நீலவண்ணன்பக்கம்வந்தான்
அங்கேநடந்தசேதி யாண்டவர்க்குத்தானுரைத்தான்
கதைகளுஞ்சொன்னேன்யான் காலும்பிடித்தேனே
கணையாழிமோதிரத்தைக் கழற்றிவந்தேன்மாயவனே
காலும்பிடித்தேனே களைகள்தெளியவில்லை
மாலைப்பசுங்கிளியை மாலையிட்டுவையுமையா
உள்ளமுருகிறதே யுற்றசீவன்போகுதையா
ஆவியுருகிறதே ஆனசீவன்போகுதையா
ஐந்துபாணந்தைத்தலவோ அடியேன்நெஞ்சுருகிறதே
பஞ்சிலிட்ட தீப்போற் பதைத்துநெஞ்சுருகிறதே
அவளைப்போலழகுமையா அவனியில்நானறியேன்
பார்த்துமறியேனையா படத்திலேயுங்கண்டறியேன்
ஈழத்துதச்சனவ னெழுதிவரவிட்டானோ
மேல்நாட்டுதச்சனவன் விளைத்துவரவிட்டானோ
ஏதாய்சிருஷ்டித்தானோ யியலானபிரமதேவன் [என்பான்
அல்லிஎனபான்மெல் லிஎன்பானனந்தனிலேபெண்ணை
காமக்கணையாலே களைதாங்கிப்போய்விட்டான்

மூர்ச்சைபட்டுவிழுந்தானே மூடிமன்னனருச்சுனனும்
அப்போதுதாதிமாரத்தனைபேர்தோழிகளும்
பாங்கிமார்தோழியரும் பத்தினியாளருகில்வந்தார்
ஆடிதாதியரே யருகில்வந்தசெங்கமலம்
ஆரோஒருவனவ னுணைப்பிறந்தவனென்
காலும்பிடித்தானே கதைகளுரைத்தானே
ஆங்காரப்பட்டவனை யாக்கினைகள்செய்யவேண்டும்
ஆயிரந்தோழிகளை யங்ஙனமேதேடவிட்டாள்
எங்கெங்குந்தேடியே இனியவிடமாராய்ந்தார்
கள்ளன் திருடனைத்தான் காணேமென்றுவந்துரைத்தார்
பேயோபிசாசோ பின்றொடர்ந்துவந்ததம்மாள்
ஆணுருவாய்த்தோன்றிற்றே ஆச்சியரேயுந்தனுக்கு
அதனாற்பழுதுமில்லை யாச்சியரேயெழுந்திருங்கள்
ஏறினாள்புரவியின்மே லேகசனஞ்சூழ்ந்துவர
பாங்கியருந்தோழியரும் பக்கம்புடைசூழ
காடுசெடிகள்தாண்டி கரியமலைதான்கடந்து
மாளிகைவாசலென்று மண்டபம்போய்ச்சேர்ந்தாளே

கிருஷ்ணபகவான் படமெழுதி குளத்தோரம்
மரத்தில் கட்டிவிட்டு அர்ச்சுனனை
தண்ணீர் கொண்டுவரச்
சொன்னது.

அப்போதுகரியமா லாலோசனைகள்செய்து
அ லியைப்போலாக அழகுபடமெழுதி
படங்களெழுதியே பாளந்தார்தானுமங்கே
குளத்தங்கரையிலுற்ற கோங்குமாந்கன்னில்
உயர்ந்தமரமதனில் உலகளந்தார்கட்டிவைத்தார்
தண்ணீரில்நிழல்தெரிய சுவாமியங்கேகட்டிவைத்தார்
அருச்சுனனைத்தட்டியே அரிராமர்தானெழுப்பி
காண்டீபாயெந்தனுக்கு களையாய்வருகிறதே
தண்ணீருங்கொண்டுவந்து தந்தாயேயாமாகில்
மாலைப்பசுங்கிளியை மாலையிட்டுவைப்பேன்யான்
என்னசொல்லக்கேட்டு எழுந்தானருச்சுனனும்
கமண்டலத்தைத்தானெடுத்து கடுகியேயாடலுற்றான்
வனத்திற்குளந்தேடி வருகிறானேயருச்சுனனும்

தண்ணீரிலிறங்கும்போது தையலரைக்கண்டுவிட்டான்
அல்லியரைத்தான்பார்த்து அருச்சுனனுமேதுசொல்வா
தண்ணீரிற்போயிருக்கத் தையலரேகாரியமேன்
என்னிலும்புருஷனடி எங்கேகிடைப்பார்காண்
கட்டிலுண்டுமெத்தையுண்டு கால்பிடிக்கபெண்களுண்டு
ஆடவென்றுஊசலுண்டு அமர்ந்திருக்கமெத்தையுண்டு
பந்தாடிசெண்டாடி பள்ளாங்குழியாடி
அம்மானையாடியேதான் அருகில்நீவீற்றிருப்பாய்
தேனேபசுங்கிளியே சிங்காதனம்வீற்றிருப்பாய்
உன்சொல்லேமேலாக உத்தமியேவீற்றிருப்பாய்
உன்னுசைகொண்டுநான் உழன்றுதிரிகிறேனே
உன்-மாயமருந்தாலே தாயைமறந்தேனடி
அண்ணைத்தம்பிமாரை அல்லவரைநான்மறந்தேன்
காமன்கணையாலே களைதாங்கிப்போகிறண்டி
ஆசையெல்லாமுன்மேலே அலையுதடிஎன்சீவன்
வாயைத்திறவாயோ மறுவார்த்தைசொல்லாயோ
மூத்தானவாய்திறந்து விஸ்தாரஞ்சொல்லாயோ
தாளைத்திறவாயோ தனிவார்த்தைசொல்லாயோ
வாயைத்திறந்தாயானல் வச்சிரமுதிருமடி
வச்சிரமுதிர்ந்தாலே வாரியெடுக்கிறண்டி
மூத்துமுதிர்ந்தாலே மூந்தானையேந்துரண்டி
தாளைத்திறந்தாலே தங்கமுதிருமடி
தங்கமுதிர்ந்தாலே தடவியெடுப்பேண்டி
உன்-சித்திரவாய்திறந்து செப்பாயோஓர்வார்த்தை
மார்போடேமார்பணைந்தால் மகாவிடாய்தீருமடி
தோளோடுதோளணைந்தால் சுகங்கள்தெரியுமடி
எத்தனைநேரமட்டும் இதக்கங்கள்சொல்லுவேன்யான்
கல்லுங்கரையுமது கற்றாணுமிற்றுவிடும்
உன்-மனதுகரையவில்லை மாலைப்பசுங்கிளியே
தண்ணீரில்யானிறங்கி தழுவிப்பிடிப்பேண்டி
என்றுகுதித்தானே இளவிசயாராஜனவன்
மூச்சைபபிடித்தவனு மூழ்கித்தடவலுற்றுன்
ஜாமநேரமட்டாகத தண்ணீரில்தடவலுற்றுன்
தவளையும்பாம்புகளுந் தடவிவலித்தெடுத்தான்
அலுத்துச்சலித்தவனும் அருச்சுனன்வெளியில்வந்தான்
கரையின்மேல்வந்தவனுங் கனைத்துப்புலம்புகிறுன்

எந்தனைமோசஞ்செய்து எங்கேபோனளென்றறியேன்
போனவிடமறியேன் போய்ப்பதுங்குந்தாவறியேன்
தங்குமிடமறியேன் சஞ்சரிக்குந்தாவறியேன்
என்றுவிசாரமிட்டு இறங்கியவன்பார்க்கையிலே
தண்ணீர்தெளித்தல்லவோ தையலரைப்பார்த்துவிட்டார்
இந்நேரந்தடவினேனே யெங்கிருந்தாயேந்திழையே
என்னவித்தைசூஸ்திரங்க ளிளங்கொடிகற்றவள்காண்
மாயமறிந்தவளோ மந்திரங்கள்கற்றவளோ
மலையாளவித்தைகளை மந்திரத்தைகற்ருயோ
எந்திழையேயுனைப்பிடிக்க என்கையிலாகாதோ
மறுபடியுங்குதித்தானே மன்னன்றுரைராசாவும்
அவ்வளவில்மாயவனு ரங்கனமேயோடிவந்து
படத்தையவிழ்த்தவரும் பாரளந்தரர்போய்மறைந்தார்
நாலுநாழிகைமட்டும் நல்விசயாஜதுரை
குட்டிமதயானை குளங்கலக்கிவிட்டதுபோல்
மூழ்கித்தடவினுனே முடிமன்னராசனிவன்
அல்லியரைக்காணுமல் அலைந்துவிசாரமிட்டான்
வந்துவெகுநேரமாச்சு மாயவரென்சொல்வாரோ
கனத்தவிசாரமுற்று கமண்டலத்தில்நீர்முகந்து
மாயவனர்தன்னருகில் வந்தானேயருச்சுனனும்
ஏன்காணுமருச்சுனரே இந்நேரமேதுசெய்தாய்
சாமநெடுநேரமாச்சே தண்ணீர்கொண்டுநீவரப்போய்
என்னவதிசயமா யிருந்தீர்காணருச்சுனரே
ஐயாபெருமாளே அடியேனெருவார்த்தைசொல்வேன்
தண்ணீர்க்குப்போனபோது தையலரைக்கண்டேனையா
தண்ணீரிலிருந்ததுபோற் றரிசித்ததெந்தனுக்கு
குதித்துதடவினேன்யான் கொம்பனையைக்காணவில்லை
மூழுகித்தடவினேன்யான் மொய்குழலைக்காணேனே

ஸ்ரீகிருஷ்ணபகவான் நித்திரைசெய்ய அர்ச்சுனராசன் அல்லியரைத் தேடிப்போவது.

அவ்வார்த்தைதான்கேட்டு அரிராமரேதுசொல்வார்
அல்லியர்மேற்சிந்தையது அசரவில்லையருச்சுனரே
பல்லிக்கையாகிறது பார்த்திபாயெந்தனுக்கு
நித்திரைசெய்தபின்பு நேரிழையையுந்தனுக்கு
மாலைப்பசுங்கிளியை மாலையிட்டுவைப்பேனடா

வாள்விஜயன்தொடைமேலே மாயனுந்தான்படுத்தார்
கள்ளக்குறட்டைவிட்டு கரியமால் தூங்குகிறார்
அப்போதுவாள்விஜயன் அருச்சுனனேதுசெய்தான்
சிரசைநழுகவிட்டுத் தேர்விஜயன் தானெழுந்தான்
பாராங்கல்லைத் தூக்கிக்கொண்டு பார்த்திபன்வருகிறானே
எம்பெருமாள்மாயவரும் ஏண்ணுதுமென்னுகிறார்
தலைமேலேகல்லைபோட தார்விஜயன் தானினைந்தான்
என்றுகலங்கியே எண்ணமிட்டுத்தானிருந்தார்
கல்லையெடுத்துவந்து காண்டீபனருச்சுனனும்
தலைக்குயரம்வைத்தானே சுவாமியைப்படுக்கவைத்தான்
அல்லியர்மேற்சிந்தையா யருச்சுனன்போகலுற்றான்
மதுரைக்குப்போகவென்று மாதுதனைக்காணவென்று
காடுசெடிதாண்டி கடுகிவருகையிலே
அருச்சுனனேகுஞ்செய்தி அறிந்தாரேமாயவனார்
அருச்சுனராசனுக்கு யனர்த்தமவந்துநேர்ந்ததென்று

ஸ்ரீகிருஷ்ணபகவான் குறத்தியுருக்கொண்டு வருதல்.

மாயன்பெருமாளும் வடிவெடுத்தாரென்னவென்றால்
செக்கச்சிவலையாய்ச் சிறுபெண்குறத்தியானார்
அக்குமணிகொக்குமணி அழகானபவளமணி
பச்சைமணிபவளமணி பாங்காயலங்கரித்து
குறத்தியரைப்போலாகக் கூடையிடிக்கிவந்தார்
கண்டானேகுறத்தியரைக் கட்டழகனருச்சுனனும்
ஆச்சிகுறத்தியரே அடியேன்யான்தெண்டமம்மா
கைபார்த்துகுறியுரைக்கக் கட்டழகிவல்லவியோ
மனதில்நினைத்தகுறி சொல்வாயோகுறமாதே
எந்தவூருங்களது எனக்கறியச்சொல்லுமென்றார்

குறம்.

தினதெந்தினா தினதெந்தினா தினதெந்தினா தினனா
தெந்நாதி நாதினனா தினதெந்தினா தினனா

எந்தனதுதிருநாடு கேட்கிறையோதம்பி
ஏத்தமுள்ள இந்திரனு ராஜூமெங்கள்நாடு
சந்திரர்கள்சூரியர்கள் தவம்புரியும்நாடு
தவமுனிவரிஷிகளெல்லாம் வாழுமெங்கள்நாடு
கொச்சிமலைகுடகுமலை யெங்களதுநாடு

குமரேசர்வாழுவதும் எங்களதுநாடு
பச்சைமலைபவளமலை எங்களதுநாடு
பரமசிவன்வாழுவதும் எங்களநாடு
வங்காளஞ்சிங்காளம் மகதமெங்கள்நாடு
வளம்பாடிக்குறியுரைக்க வந்தேனடாதம்பி
பசிகாலமானாலே பழங்கூறிவருவோம்
பரமசிவனுமையவட்குங் கைபார்க்குங்குறத்தி
ராமக்காளட்சுமக்காள் பொம்மக்காளென்பேர்
நலமறிந்துகுறியுரைப்போம் நட்டணையாய்நாங்கள்
உண்மையாய்க்குறியுரைப்போம் உந்தனுக்குத்தம்பி
என்னாணைஉன்னாணை என்றவளுஞ்சிரித்தாள்

வேறு.

ஆனாற்கேள்கட்டுவச்சி அடியேனொருவார்த்தை
தெய்வக்குறத்தியென்றாற் செப்புங்குறியெனக்கு
உண்மைக்குறியுரைத்தால் உச்சிதங்கள்தருவேனடி
காதிலிடுங்குண்டலமுங் கையிற்பவுத்திரமும்
நான்-உடுத்துமுடைமானம் உந்தனுக்குத்தருவேனடி
கைபார்த்துகுறியையுங் கட்டழகியெந்தனுக்கு
நாமக்குறத்தியவள் வாய்திறந்துவதுசொல்வாள்
வண்மைக்குறத்தியவள் வாய்திறந்துவதுசொல்வாள்

குறத்தி அருச்சுனனுக்குக் குறிசொன்னது.

குறம்.

தினதெந்தினு தினதெந்தினு தினதெந்தினு தினனு
தெந்நாதி நாதினனு தினதெந்தினு தினனு
திங்கள்மதிபிறைசூடுஞ் சிவனுடையமகனே
திருத்தணிகைவாழ்முருகா சேவையருள்வேண்டும்
வனக்குறத்திவள்ளியம்மை வந்துதவவேண்டும்
மலையாளபகவதியே வாக்கருளவேண்டும்
அலர்மேலுமங்கையரே மலைமேலுஞ்சிந்தை
அனைவோரும்வந்துகுறி அன்புதரவேண்டும்
ஆகாயவாணிதுர்க்கை ஐயனார்பிடாரி
அம்மைவல்லியுமையவளும் அறியகுறிசொல்லும்
போங்கள்நயினருகளும் பொற்கொடியேதெய்வம்
பூவாடைக்காரியம்மை புகழ்ந்துகுறிசொல்லும்

தெய்வங்களை நினைத்தாலே சிலிர்த்துக்கொள்ளுதுடம்பு
தேகமெல்லாம்மயிர்க்கூச்சல் இடுகிறதேதம்பி
வாடைமணம்வீசுதடா மயிலவர்வந்தாப்போல்
மயக்குகின்றதென் னுடம்பைசன்னதங்கொண்டதுபோல்
கூடைகொண்டுகவியுதடா கொற்றவனேயெனக்கு
கோலவிழிதுடிக்கிறது குறிகள்சொல்வேன்கேளு
சந்திரகுலராசர்க்கள் தருமரைவர் நீங்கள்
தரணிமுழுதாளுகின்ற தருமர்தம்பி நீதான்
சிலைநுதலின்வடிவழகன் தேர்விஜயன் நீதான்
தீர்த்தயாத்திரைபோகவென்று தோழனுடன்வந்தாய்
வடிவழகிசிலைநுதலாள் தென்மதுரைவாழும்
மாதரந்தஅல்லியின்மேல் மையல்கொண்டாய் நீயும்
ஆறுயிரம்பாண்டியற்கும் அரியதுரைமகளாம்
அல்லியின்மேலாசைகொண்டு அலைகிறடாயிப்போ
பொய்யோடாயென்குறிகள் மெய்யோ நீபுகல்வாய்
புண்ணியனேதருமர்தம்பி புதுமைபுடன்சொல்வாய்
என்றவனைத்தான்பார்த்து இணைவிழியாள்மிரட்டி
இளங்குறத்திதனைப்போலே இடைதுவளநகைத்தாள்

வேறு.

மெய்தான்காணுச்சியரே விளம்பினையெந்தனுக்கு
கண்டதுகண்டாற்போல் கட்டுவச்சிசொல்லிவிட்டாய்
பார்த்ததுபார்த்தாற்போல் பட்சமாய் நீயுரைத்தாய்
தெய்வக்குறத்தி நீ தெளிவானகட்டுவச்சி
உள்ளகுறியெனக்கு உத்தமியே நீயுரைத்தாய்
அல்லியரைமாலையிட்டு அழகுமணஞ்சூட்டுவேனோ
என்-மனதிற்கிசைந்தபடி வருவாளோ அல்லியவள்
என்மீதிலிச்சைகொண்டு இசைந்துவரப்பாருமம்மாள்
பாதம்பணிந்தானே பார்த்திபன் அருச்சுனனும்
ஆனாற்கேள்தம்பியரே அல்லிவருவதற்கு
மூன்றுவிதங்குளிகையது மூடிமன்னநான்தருவேன்
அம்மருந்தைநீவாங்கி அல்லிபுரம்போய்ச்சேர்ந்து
தென்மதுரைப்பட்டணம் நீதிருக்குளம்போய்ச்சேர்ந்து
தான்-தந்தமருந்தெடுத்து தண்ணீரில் நீகரைத்தால்
அல்லியம்மாள்பேரைச்சொல்லி அம்மருந்தை நீயுரையும்
மருந்துகரையும்போது அவள்மனதுகரையுமடா

குளிகைகரையும்போது குணமூந்திரும்புமடா
அல்லிமனதுவைத்து அழகுமணஞ்செய்திடுவாள்
பொம்மக்காபேரைச்சொன்னால் திம்மக்காநேர்ந்துவிடும்
ராமக்காபேரைச்சொன்ன லட்சுமக்காள்நேர்ந்துவிடும்
பொய்யல்லயென்மருந்து புண்ணியனேநான்தருவேன்
உந்தனுடைமான முடுத்தியதைத்தாருமென்றாள்
காதிடுங்குண்டலமூங் கையிற்பவுத்திரமூம்
கச்சுகளுந்தட்டிகளுங் கழட்டிகொடுத்தானே
பக்ஷமாயிம்மருந்து பலியாமற்போனுக்கால்
தெரிந்தெங்கேஉன்னைகண்டு தேடுவேனுச்சியரே
ஆனால்கேள்தம்பியரே அற்பமேயாச்சுதானால்
நாலுமலைகளுக்கு நடுவேயடாயென்குடிசை
ஏழுகுடிசைகளில் எதிர்குடிசையெந்தனது
ராமக்காள்பொம்மக்காள் லட்சுமக்காளென்றழைத்தால்
உன்னுடமையான்தருவேன் உத்தமனேயஞ்சாதே
அருச்சுனன்தரித்திருந்த ஆபரணமுள்ளதெல்லாம்
பட்டுக்குல்லாதட்டிகச்சு பலதவுடமைகளும்
வாங்கிநடந்தாளே மலைக்குறததிதனைப்போலே
ஆனலழகுமன்னன் அருச்சுனன்வழிநடந்தான்
உள்ளங்குளிர்ந்தவனாய் உத்தமனும்போகலுற்றான்
காடுசெடிதாண்டி கடிகிவந்தான்தென்மதுரை
அல்லிப்பெருமானும் அவள்பிறந்தபொய்கையண்டை

அருச்சுனன் திருக்குளத்தில் மருந்திழைத்தது.

பவளக்கட்டுதிருக்குளத்தின் படியிலிறங்கியவன்
வண்ணமருந்தெடுத்துத் தண்ணீரிலுனரக்கலுற்றான்
அநந்தலிலேதான்கூட அல்லிஅல்லியென்பானே
மருவியணைவதற்கு வருவாயோஅல்லியென்பான்
மருந்துகரையும்போது மனமூங்கரையாதோ
குளிகைகரையையிலே குணமூந்திரும்பாதோ
சித்தமிரங்கியே தேடிவருவாளோ
எப்போமனம்வருமோ என்னருகில்வாருயோ
காமன்கணையாலே களைதாங்கிப்போகிறேனே
மன்மதபாணமது மாரைப்பிளக்குதடி
சித்தசன்தொட்டகணை சிறுமார்புறுகுதடி
உன்னுசைக்கொண்டுநான் உழன்றுதிரிகிறேனே

அனந்தவிலேதான்கூட அல்லி அல்லியென்பானே
மருவியணைவதற்கு வருவாயே அல்லியென்பான்
அல்லி அல்லியென்றுசொல்லி அலேகிருனருச்சுனனும்
வண்ணமருந்தெடுத்துத் தண்ணீரிலுறைக்கலுற்ருன்
அல்லிபெருமாள் அவளுடையதாதியர்கள்
ஆயிரந்தாதிமார்கள் ஆரணங்குதாமெழுந்து
தங்கக்குடமெடுத்துத் தண்ணீர்க்குவருகிருர்கள்
பவளக்கட்டுதிருக்குளத்தின் படியோரம்வந்தார்கள்
மருந்துரைக்கும்வண்மைகளும் பார்த்தைகள்சொல்லி
அல்லியரைவைகிறதே அவ்வார்த்தைக்கேட்டார்கள்
இடிவிழுவான்சொன்னசொல் எல்லவளுங்கேட்டார்கள்
அல்லிப்பெருமாளே அரசாளும்நாயகியை
வம்புதும்புசொல்வார்கள் மண்டலத்திலாருமில்லை
அல்லியென்றுபேருசொன்னல் அழுதபிள்ளைவாய்மூடும்
ஆகிடும்புவார்த்தைஎல்லாம் ஆச்சியற்கேசொல்லவென்று
ஓட்டம்நடையுமாக ஓடிவந்தார்தாதியர்கள்
அல்லியம்மாள்முன்னலே அடிபணிந்துதெண்டனிட்டார்
ஆர்பணியுந்தாதியரோ அறியவுரையுமென்ருள்
ஆர்பணியுமல்லநான் அடியேன்திருப்பணிதான்
தங்கக்குடமெடுத்துத் தண்ணீர்க்குப்போனேமம்மா
பவளக்கட்டுதிருக்குளத்தின் படியிலொருவனம்மா
வண்ணமருந்துகளைத் தண்ணீரிலுரைக்கிருனே
ஆகடியஞ்சொல்லுகிருன் அழும்புகளும்பேசுகிருன்
வம்புதும்பும்பேசுகிருன் வாய்ப்பழுதுசொல்லுகிருன்
காதாரக்கேட்டோமம்மா கனங்குலேந்துவந்தோமம்மா
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லிவெகுகோபமதாய்
எட்டிப்பழம்போலே இருகண்கள்தான்சிவந்து
செந்தலேநாகம்போற் சீறியவள்கோபமதாய்
ஏழுபிராயமதில் எதிர்த்துவந்தநீன்முகனை
நீன்முகனைக்கொன்றுநான் நீலிபட்டமாண்டேனே
அடிபெண்ணே அல்லியென்பார் ஆருமொருவரில்லை
பொம்மைவிருதுகட்டி பூமிநகராளுகிறேன்
பாலேக்கறந்துதான் பட்டணத்தில்வைத்தாலும்
பறக்கிறகாகமது தலேயெடுத்துப்பாராது
ஐம்பத்தாறுகாதமுமென் னுக்கினைகள்மெத்தவுண்டு
அஞ்சாமல்வந்துமிங்கே அழும்புசொன்னுராடிதான்

பாங்கியிலும்நல்லவளே பவளசேனை நீகேளும்
அவனைஎன்னதமாக அக்கினைகள் செய்திடுவோம்
என்றுமவள்கேட்க ஏதுசொல்வாள்பவளசேனை
கட்டும்விருதறுத்து கலியாணஞ்செய்வதற்கு
மண்டலத்துராசாவோ வானவரோதேவனோதான்
மணஞ்சூட்டவந்தவன்போல் மாதரசேகாண்கிறது
எண்ணுதயோசனைகள் எண்ணியவள் தன்மனதில்
அல்லிப்பெருமாள்தனக்கு ஆலோசனைஏதுசொல்வாள்
விடுவிடுநேரத்திலே வெயிலானவேளையிலே
வெம்பாமணலிலேதான் அம்பாகக்கூறுகைக்கு
ஆகிடும்பான்நன்னை ஆற்றிற்புரட்டினாலே
சென்மமுருகியவன் செத்துமடிந்திடுவான்
ஆடிதோழியரே ஆயிரம்பேர்வாருங்கள்
ஆற்றுமணல்தனிலே அவனைப்புரட்டுமென்றாள்
வெம்பாமணலிலே வீழ்த்திப்புரட்டுங்கள்
கட்டியுருட்டுங்கள் கள்ளன்திருடனைத்தான்
செத்துமடிந்தபின்பு சேதிவந்துசொல்லுமென்றாள்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆயிரந்தாதியர்கள்

## அருச்சுனனுக்கு அல்லியரசாணி முதலாவது ஆக்கினையிட்டது.

ஓட்டம்நடையுமாய் ஓடிவந்தார்தாதியர்கள்
ஆயிரந்தாதியர்கள் அருச்சுனரைத்தூக்கினார்கள்
ஆற்றுமணல்தன்னில் அருச்சுனரைப்போடவந்தார்
காண்டீபன்அருச்சுனற்கு கனமோசம்வருகுதென்று
ஆயன்பெருமாளும் அந்நேரந்தானினைத்தார்
காணலுரைக்கவேண்டாங் காண்டீபனருச்சுனற்கு
பூமிதேவிபெண்ணரசே போதமணலுஞ்சுடாமல்
அருச்சுனரைக்காருமென்று ஆயனுந்தோத்தரித்தார்
அப்போதுதோழியர்கள் ஆற்றருகில்வந்துநின்று
ஆற்றுமணலிற்போட்டு அருச்சுனனைபுரட்டினார்கள்
கொற்றவனார்அருச்சுனற்குக் குளிர்ந்தஜலம்போலிருக்கும்
ஆயிரந்தாதிகட்கும் அக்கினியாய்ப்பற்றுதங்கே
நெல்லிப்பழம்போலே நெருங்கிற்றுகொப்பளங்கள்

சங்கம்பழமதுபோற் சரீரமெங்குங்கொப்பளமாம்
அத்தண்டதோழிகளும் அலைகொலைந்துஓடுகிறார்
அப்போதருச்சுனரும் ஆணழகரேதுசொல்வார்
அல்லியரும்நானுமாய் அமர்ந்துவிளையாட
மருவிவிளையாடுதற்கு மண்டபந்தான்கிட்டாதோ
ஆற்றிலேவந்தேநீ அமர்ந்துவிளையாடிருப்பாய்
எப்போதுதான்வருவாள் என்னாசைதீர்வதற்கு
மனதுவருவதெப்போ மருவியணைவதெப்போ
சித்தம்வருவதெப்போ தேவியணைவதெப்போ
என்றுதெளியுமோ எக்காலஞ்சென்றிடுமோ
என்றுபுலம்புகிறார் இயலான அருச்சுனரும்
அப்போதுதாதிமார் ஆரணங்குஓடிவந்தார்
அல்லியற்குந்தெண்டனிட்டு ஆரணங்குமேதுரைப்பார்
வெம்பாமணல்தனிலே வேகவேபுரட்டினோம்யாம்
ஆற்றுமணலில்போட்டு அருச்சுனனைப்புரட்டும்போது
எங்கள்-சரீரங்களெல்லாஞ் சங்கப்பழம்போலாச்சு
நெல்லிப்பழம்போலே நீர்க்கொப்பளமாச்சுதம்மா
வாட்டம்வதக்கமில்லை மகாபாவியவன்றனக்கு
அல்லியல்லியென்றுசொல்லி அலைகிறான்பாவிமகன்
உன்மேலேசிந்தையாய் உருகிப்புலம்புகிறான்
அல்லிப்பெருமாளும் ஆரணங்குஏதுசொல்வாள்
வானஞ்சுழலவோதான் மருந்துண்டோபாவிகையில்
பூமிசுழல்வதற்குப் பொடியுண்டோயவன்கையில்
என்னமருநதறிவான் இடிவிழுவான்பாவியவன்
என்னவிதத்தினாலே இவனைநாம்கொல்கிறது
பாங்கிகளில்நல்லவளாம் பவளசேனையேதுசொல்வாள
தூக்குமரத்திற்போட்டு தூக்கிவிடசொல்லுமென்றாள்
செங்கமலத்தாதியரைத் தோழியரைத்தானழைத்து
ஊருக்குமேற்காக ஒருகாதவழிதனிலே
தூக்குமரஞ்சொப்பனிட்டு தோழியரேபோடுமென்றாள்

அருச்சுனனுக்கு அல்லி இரண்டாவது
ஆக்கினையிட்டது.

அவ்வார்த்தைதான்கேட்டு அருகிருந்தசெங்கமலம்
திடுக்கென்றெழுந்திருந்து தோழியருந்தானுமாக
தச்சன்மகளாரைத் தையலருங்கூட்டிவந்து

தூக்குமரஞ்சொப்பனிட்டு சோடித்துவத்தார்கள்
ஊருக்குமேற்காக ஒருகாதவழிதனிலே
கொண்டுவந்து தூக்குமரங் கொப்பெனவேதட்டார்கள்
ஏணியுஞ்சாற்றினர் இனியகயிர்போட்டார்கள்
அருச்சுனராசாவை அங்கேயழைத்துவந்தார்
சுற்றிவளைத்தார்கள் சூழ்ந்தாரே தாதியர்கள்
ஏணிமேலேறுமென்றார் இயலானமன்னவனை
கயிற்றைக்கழுத்திலே கடுகியேபோடுமென்றாள்
அப்போதருச்சுனரும் ஆணழகரேதுசொல்வார்
பார்த்துமறியேனடி பாருலகிற்கண்டதில்லை
கண்டுமறியேனடி காதாரக்கேட்டதில்லை
போட்டுமறியேன்காண் புதிதாகத்தோன்றுகுது
எனக்குத்தெரியுமவகை இன்பமாய்க்காண்பியுங்கள்
ஏணிமேலேயெடுத்து கயிர்பூட்டிக்கொள்ளும்
இந்தவிதமென்றுசொல்லி எந்தனுக்குக்காண்பியுங்கள்
அறியாதயெந்தனுக்கு அறியப்படுத்துங்கள்
தெரியாதயெந்தனுககுத் தெரியப்படுத்துங்கள்
இவ்வார்த்தைதான்கே ட்டு எழுந்தாளேசெங்கமலம்
சொரணைகெட்டபாதகனே தெரியாதோயின்னடக்கை
இதோபாருமென்றுசொல்லி ஏணிமேலேறினளே
கயிற்றையெடுத்தவளும் கழுத்திலேபூட்டிக்கொண்டாள்

ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி பெருச்சாளி ரூபங்கொண்டு
வந்து ஏணியைத் தள்ளிவிட்டது.

அதுசமயம்பார்த்தாரே அரிராமரெம்பெருமாள்
பெருச்சாளிபோலேவந்து பிரட்டிவிட்டாரேணிதன்னை
சுருக்குவலித்துக்கொண்டு தொங்கினாள்தோழியவள்
கால்கையுதறிக்கொண்டு கண்விழிபிதுங்கிக்கொண்டு
நாவையிழுத்துக்கொண்டு நல்லுயிர்தான்போச்சுதுகாண்
செத்துமடிந்தாளே செங்கமலத்தோழியவள்
காண்டீபன் அர்ச்சுனருங் கட்டழகரேதுசொல்வார்
காலையுதறுவதுங் கண்பிதுங்கிநிற்பதுவும்
நாக்கைப்பிடுங்கிக்கொண்டு நல்லூஞ்சலாடுவதும்
இவ்வளவோசூஸ்திரங்கள் எனக்குத்தெரியவரும்
இனிமேல்தெரியவரும் இறங்கிவாதோழியரே

ஐயோகோதெய்வமென்று அழுகிறார்தோழியர்கள்
ஓட்டம்நடையுமாக ஓடிவந்தாரரசியண்டை
மகுடந்துலைச்சியரே மாதாவே நீர்கேளும்
தூக்குமரந்தனிலே தோழியவள்போடப்போன
செங்கமலத்தோழியவள் தூக்கில்மடிந்தாளே
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லிமனதுநொந்து
பாங்கிலும்நல்லவளே பவளசேனை நீகேளும்
என்னவிதமாக இவனைநாம்கொன்றிடலாம்
ஆதிமந்திரியே ஆலோசனைசொல்லுமென்றாள்
அப்போஅவளசேனை ஆலோசனைசொல்லுகிறாள்

அருச்சுனனை மூன்றுந்தரம் காளிக்குப்
பலியிடச்செய்தது.

வடவாசல்செல்லியம்மன் மாகாளியம்மனுக்கு
பொங்கலையிட்டு நீங்கள் பொலிபோட்டுவாருங்கள்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆயிரந்தோழிமார்கள்
சீக்காயுமெண்ணெயுடன் தேங்காயுமிளநீரும்
புதுப்பானையரிசிகளும் புஷ்பமுஞ்சந்தனமும்
கருப்பூரஞ்சாம்பிராணி காளிக்குக்கொண்டுவந்தார்
ஆதிதாதிகளே அழைத்துவாஓச்சப்பெண்ணை
அவ்வளவில்தாதிமார் அவர்மூடுகியோடுவார்கள்
ஆயன்பெருமாளும் அவ்வார்த்தைதானறிந்து
கரீமேகவண்ணருங் காளியண்டைஓடிவந்தார்
வாருமம்மாதங்கையரே வார்த்தையொன்றுநீர்கேளும்
அல்லிப்பெருமாளை அழகுமணஞ்சூட்டவென்று
காளையந்தஅர்ச்சுனருங் கனவேஷங்கொண்டுவந்தான்
அருச்சுனராசனென்று அறியாமல்அல்லியம்மாள்
காளியம்மாளுந்தனுக்குக் காவுதரசெலவுதந்தாள்
பொங்கலிட்டுந்தனுக்குப் பொலிபோடச்செலவுதந்தாள்
ஓச்சப்பெண்போலே உத்தமியேவருவேனம்மா
பூசையானபிற்பாடு பொங்கலிட்டுத்தீர்ந்தபின்பு
என்மேலேசன்னதமாயிந்தபெலிவேண்டேனென்பேன்
என்வார்த்தைகேட்காமல் உன்வார்த்தைகேட்பார்கள்
நானுரைத்தபாவனைபோல் நாயகமேநீருரையும்
அருச்சுனராசனுக்கு அழிவுவந்ததானுக்கால்

வெற்றிமதயானை வீமனுன்னைப்பிழைக்கவிட்டான்
வஜ்ரகதையாலே மண்டியிட்டுந்தலையுடைப்பான்
தண்டாயுதமெடுத்து தலையறுப்பான்வீமாசன்
துண்டந்துண்டமாகவுன்னை துணித்திடுவான்வீமாசன்
கத்தியெடுத்துவுன்னை கழுத்தையறுத்திடுவான்
காளியென்றுப்பாராமல் கனத்தவுயிர்வாங்கிடுவான்
காளியற்குத்தாமுரைத்து காரியமால்தானடந்தார்
ஓச்சப்பெண்போலாக உலகளந்தார்வடிவெடுத்தார்
ஓரகத்திவாசலிலே உட்கார்ந்திருக்கிறுள்காண்
ஓட்டம்நடையுமாக வோடிவந்தார்தாதியாகள்
கோவிலுக்குப்போகவேண்டுங் குச்செடுத்துவாருமென்று
திறவுகோல்தாமெடுத்துத் தேன்மோழியாள்போகலுற்று
கடுகிமூடுகியே காளிகோவில்வந்தார்கள் [ள்
கோவில்கதவுதன்னைக் குச்சிட்டுத்தான்திறந்தாள்
குளத்தில்முழுகிவந்து கொம்பனையைப்பூசைசெய்தாள்
அபிஷேகஞ்சூட்டினுள் ஆங்காரக்காளியற்கு
செந்நெல்லரிசிகொண்டு தேவியற்குப்பொங்கலிட்டாள்
கோவில்திருவிளக்குக் குறைவில்லாமலேற்றினார்கள்
தேங்காயுடைத்தார்கள் தூபதீபந்தான்கொடுத்தார்
அருச்சுனரைக்கூட்டிவந்து அம்மனுக்கெதிரேவைத்து
மண்பிறக்குமுன்பிறந்த வழக்காடும்நல்லசெல்லி
யுகம்பிறக்குமுன்பிறந்த உத்தண்டபத்திரகாளி
காய்ந்தமழுவேந்துங் கர்த்தனிடதேவியரே
எரிந்தமழுவேந்தும் ஈஸ்வரனார்தேவியரே
வடவாசல்செல்லியம்மாள் மனிதபலியோர்வைகொள்ளும்
வருணிக்கும்போதையிலே வந்துவிடுஞ்சன்னதங்கள்
ஓச்சப்பெண்மேலே உதறுகுதுதெய்வம்வந்து
ஆண்காற்றடியாதே அல்லிமலர்நாயகிக்கு
அவளுடையஎல்லைகார்க்கும் ஆங்காரக்காளியல்லோ
மதுரையைக்காத்திருக்கும் மண்ணுப்பிடாரியல்லோ
அல்லியற்கு ஆகாது செல்லியாக்குஆகுமோடி
இந்தப்பலிவேண்டேன் ஏர்வையில்லையெந்தனுக்கு
பெண்பலிஈந்தாலே பூசையதுஎர்வைகொள்வேன்
ஆண்பலிஈந்தாலே அநர்த்தம்பண்ணிப்போட்டிடுவேன்
மதுரைகுடிபடையை மாளபலிகொண்டிடுவேன்
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வார்தாதியர்கள்

நீசொன்னவாக்கியங்கள் நிச்சயமுமாகாது
காளியம்மன்வாயாலே கடுகியுரைத்தாலே
ஈஸ்வரியாள்வாக்குரைத்தால் எல்லார்க்கும்நிச்சயங்காண்
என்றுபணிந்தார்கள் இயலானதாதியரும்
அப்போதுகாளியம்மன் இப்படியேவாக்குரைத்தாள்
அஞ்சிப்பயந்தார்கள் அல்லியிடமோடிவந்தார்
மகுடத்துரைச்சியற்கு வந்துதெண்டம்பண்ணினார்கள்
காளியற்குப்பூசை கனத்தபொங்கலிட்டோமம்மா
ஓச்சப்பெண்மேற்சன்னதங்க ளோங்காரமாய்வந்ததம்மா
ஆண்பலிவேண்டேனென்று ஆடினாள்சன்னதமாய்
அம்மொழிநம்பாமல் அம்மன்சொல்லவேண்டுமென்று
அப்படியேகாளியம்மன் ஆண்பலிவேண்டேனென்று
அல்லிப்பெருமாட்கு ஆண்பலியாகாது
எந்தனுக்குமாகாது என்றாளேகாளியம்மன்
ஆண்பலிதந்தாலே அனர்த்தம்பண்ணிவிடுவேனென்று
மதுரைக்குடிபடையை மகாபலிகொள்வேனென்றாள்
இவ்வார்த்தைகேட்டவுடன் ஏதுசொல்வாளல்லியம்மாள்
வானஞ்சுழல்வதற்கு மருந்துவித்தைகற்றவனே
பூமிசுழல்வதற்குப் பொடிகளறிந்தவனே
என்னமருந்தறிவான் இடிவிழுவான் நானறியேன்
எந்தவிதத்தினாலே யேந்திழையேகொல்வமடி
பாங்கியிலும்நல்ல பவளசேனையேதுசொல்வாள்
பூதக்கிடங்கிலே போட்டடையும்பாதகனை
பூதம்பிடுங்கித்தின்னும் யமலோகஞ்சேர்ந்திடுவான்

அருச்சுனனுக்கு நான்காவது தண்டனை
யிட்டது.

ஆரடிதாதிகளே அலங்காரத்தோழிகளே
பூதக்கிடங்கதனிற் போட்டடையுமென்றுசொன்னாள்
எம்பெருமாள்மேகவண்ணர் இவ்வயணந்தாமறிந்தார்
பூதங்கள்தன்னருகே பெருமாளுமோடிவந்தார்
மாயவரைக்கண்டவுடன் வணங்கிற்றேபூதமெல்லாம்
ஆடாபூதங்களே அகங்காரராட்சதரே
அருச்சுனரைக்கொண்டுவந்து அடைக்கவருவார்கள்
பார்த்திபன்அருச்சுனற்குப் பணிவிடைகளசெய்யுங்கள்
சங்கிதந்தன்னுடனே சந்தோஷமாய்வைத்திருங்கள

அருச்சுனராசனுக்கு அழிவுவந்ததானுக்கால்
வெற்றிமதயானை வீமராசன் தானறிந்தால்
வஜ்ரா..தையினாலே மண்டியிட்டுத்தலையுடைப்பான்
தண்டாயுதமெடுத்துத் தாக்குடையவீமராசன்
அஞ்சுதுண்டாக அறுத்திடுவான்வீமராசன்
பூதத்துக்குச்சொல்லியபின் பெருமாளும்போய்நடந்தா
அப்போதுதாதிமார் அர்ச்சுனரைக்கூட்டிவந்தார்
பூதக்கிடங்குதனிற் போட்டடைத்தார் அர்ச்சுனரை
ஆர்காணும்பூதங்களே அல்லியம்மாளுத்தாரம்
பொல்லாதபாதகனைப் பொலியதுகொண்டிடுங்கள்
இவனைப்பெலிகொண்டு எடுத்துப்புசித்திடுங்கள்
தளளிக்கதவடைத்துச் சங்கிலியைப்போட்டார்கள்
மூதுகிலேமச்சரேகை கண்டதேபூதமெல்லாம்
மெத்தநடுநடுங்கி வேந்தாவர் அர்ச்சுனற்கு
பஞ்சணைமெத்தைபோட்டு பார்த்திபனையிருக்கவைத்து
அத்தண்டபூதமெல்லாம் அர்ச்சுனற்குப்பணிகள்செய்யும்
வெண்சாமரைபோடுமாம் விஜயநந்த அர்ச்சுனற்கு
கைபிடிக்குஞ்சிறிதுபூதம் கால்பிடிக்குஞ்சிறிதுபூதம்
பாதம்பிடிப்பதுவும் பாட்டுகளைப்பாடுவதும்
கூத்துகளாடுவதும் கொண்டானடிப்பதுவும்
தார்விஜயன் அருச்சுனற்குச் சங்கீதம்பாடுவதும்
ஆடாதகேளிக்கையும் அரும்பவனிநாடகமும்
சங்கிதம்பார்த்துமே தார்விஜயன் தானிருக்க
கண்டார்கள்பேய்க்கூத்தை கனமானதாதியர்கள்
அல்லிப்பெருமாளின் அருகாகஓடிவந்தார்
சாஷ்டாங்கமாகவே சரணமிட்டுயேதுசொல்வார்
பூதக்கிடங்கதனிற் போட்டடைத்தோம்பாதகனை
பூதப்பிசாசனைத்தும் போதப்பணிசெய்கின்றன
பாதம்பிடிக்கிறதும் பணிவிடைகள்செய்கிறதும்
கூத்துகளாடி கொண்டானடிக்கிறதும்
பார்த்துவந்தோம் ஆச்சியென்று பாதம்பணிந்தார்கள்
அல்லிப்பெருமாளும் ஆணங்குமேதுசொல்வாள்
என்னமருந்தறிவா னிடிவிழுவானென்றறியேன்
வானஞ்சுழல்வதற்கு மருந்தறிவான்சண்டாளன்
பூமிசுழல்வதற்கு மருந்தறிவான்சண்டாளன்
என்றுவிசாரமா யிருந்தாளே அல்லியம்மாள்

மாயன்பெருமாளும் மலைராமரே துசெய்தார்
அருச்சுனராஜாவை அழைத்துவரவேண்டுமென்று
என்னவடிவெடுத்தார் எம்பெருமாள்மேகவண்ணர்

கிருஷ்ணபகவான் பெண்ரூபங்கொண்டு

அருச்சுனனை அழைப்பது.

தெய்வப்பெண்போலே ஸ்ரீராமர்வடிவெடுத்தார்
செக்கச்சிவலைபோலே கிளிபோலே
மினனுகிறகாந்தியைபபோல் வேரிற்பவளம்போல்
காய்க்கும்பிராயம்போற் கன்னிகட்டுபிராயமவள்
பூர்க்கும்பிராயமவள் பிஞ்சவிடுங்காலமதாய்
கொஞ்சவயதுகாண் கொழுந்தெல்லாம்பிஞ்சுவிடும்
பாதிப்பிராயமவள் பக்கமெல்லாம்பிஞ்சுபோலே
இருண்டெழுந்தசோலையிலே சிவந்தெழுந்தசூரியன்போ
குன்றுமேற்சந்திரன் குதித்தெழுந்தபாவனைபோல்
ஈழத்துத்தச்சனவன் எழுதிவாவிட்டதுபோல்
மேல்நாட்டுத்தச்சனவன் விளைந்துவரவிட்டதுபோல்
அஷ்டாபரணமெல்லா மலங்காரஞ்செய்தவளாய்
பட்டுபளபளென்ன பாடகக்கால்சோதிமின்ன
தெய்வப்பெண்போலே ஸ்ரீராமர்வருகிறாரே
அழகுகுலுங்கவும் ஆனந்தங்கொஞ்சவேதான்
உடல்குலுங்கமாயவனு ரோடிவருகிறாரே
காடுசெடிதாண்டி கடுகியேவந்துவிட்டார்
மதுரைத்தெருவிலே வந்தாரேயெம்பெருமான்
அக்கமாரேதங்கைமாரே ஆடிதாய்மாரே
செக்கச்சிவலையம்மா சிறுவயதுஎன்கணவன்
பித்தன்வெறியனம்மா பினத்தித்திரிவானடி
வெறிபித்தமன்னவன்காண் வீதிதிரிவானடி
அல்லிஅல்லிஎன்பான் அநந்தனிலேபெண்ணேஎன்பா
தண்ணீர்கண்டவிடத்தில் தன்கைமருந்துரைப்பான்
எட்டுநாளாசசுதம்மா என்கணவன்வீடுவிட்டு
ஆரோதெரியாது அடக்கிவசங்கொண்டார்கள
என்-கணவனைக்காணமற் கலங்கித்திரிகிறேனே
புருஷனைக்காணமற் புலம்பித்திரிகிறேனே
அறிந்தாலுரையுங்கள் அக்கமாரேயென்றழுதாள்

மாதுபுலம்புவதை மதுரையுள்ளோர்தான்கேட்டார்
தாதியர்கள்தோழியர்கள் தானறிந்துஓடிவந்தார்
அல்லிப்பெருமாட்கு அறிக்கையிட்டார்தாதியாகள்
பூதக்கிடங்கதனிற் போட்டடைத்தபாதகனை
அவன்-மாலையிட்டதேவியராம் வந்தாளொருத்தியங்கே
வானத்துரம்பையம்மாள் மயிலணையாய்த்தோற்றுகிருள்
கணவனைக்காணுமென்று கதறிப்புலம்புகிருள்
சொல்லியழுகிறது துக்கம்பெருகுதம்மா
அவ்வார்த்தைதான்கேட்டு ஆரணங்கேதுசொல்வாள்
ஆரணங்குமர்தரை நீர் அழைத்தோடிவாருமென்ருள்
ஓட்டம்தடையுமாக ஓடிவந்தார்தாதியர்கள்
ஆரடிகன்னியரே அழுதுபுலம்புவதேன்
எங்கள்-ஆச்சியுமுன்னை யழைத்துவரச்சொன்னுள்காண்
அல்லிப்பெருமாளும் அழைக்கிருள்வாருமென்ருள்
ஏதுக்கழைக்கிருள் இளங்கொடிமாதுஎன்னை
என்றுநடந்தாளே யெமபெருமாள்மாளிகைக்கு
வாசற்படியேழு வாசலுந்தான்கடந்து
அல்லியற்குமுன்னேவந்து ஆரணங்குதெண்டனிட்டாள்
தெண்டநிட்டகன்னிசரை தேன்மொழியுமேதுசொல்வா
எந்தவூருங்களுக்கு எங்கிருந்துஇங்குவந்தாய்
ஏதுக்கழுகிறீர் எனக்கறியச்சொல்லுமென்ருள்
என்னுடையஆச்சியரே யென்பாவங்கேளுமம்மா
தூரம்வடக்கேயம்மா துவாரகாபுரீதேசம்
திருமலைநாய்க்கன்பெற்ற சீரானபெண்ணிருவர்
என்பேருமெல்லியர்காண் என்தங்கையல்லியம்மா
என்னைமணஞ்சூட்டி என்தங்கைமேலிச்சைகொண்டான்
பெண்டுமேல்பெண்டுமல்லோ கொடுப்பாரோபூமியிலே
அல்லியர்மேலாசையதாய் ஆணழகன்வெறியெடுத்து
பித்தம்பிடித்தவன்போற் பினத்தித்திரிகிருனே
தண்ணீரைக்கண்டாலே தன்கைமருந்துரைப்பான்
அல்லியென்பான்மெல்லியென்பான் அலைந்துதிரிகிரு
வீடுவாசல்தங்காமல் வெளிப்பட்டுபோய்விடுவான் [னே
தேடித்திரிகிறேனே சீரானமன்மதனை
கண்டுபிடித்தவரைக் கடுகிமனைகொண்டுபோவேன்
எட்டுநாளொருவாரம் இருப்பான்மனம்பிடித்து
மாதுமேல்நினைவெடுத்தால் மாளிகையில்நிற்கறியான்

பத்தாடும்பட்டணத்தில் பாவியொருபெண்பிறந்தேன்
செல்வத்தலையிலே செப்பேடெழுதினதும்
அல்லற்படுந்துயரம் அமைத்தானேபிரமதேவன்
கதியைத்தொலைப்பேண்டி காவேரிநீந்திடுவேன்
விதியைத்துலைப்பதற்கு வெல்லவகையறியேன்
வடிவுமழகாயிருந்தார் மன்னன்துரையென்கணவன்
ஆரோதெரியாது அடக்கிவசங்கொண்டார்கள்
என்புருஷன் தன்னையம்மா இனிக்காணப்போறேனேடி
என்றதுதான்கேட்டு எதுசொல்வாளல்லியம்மாள்
அல்லியெனப்பேர்கொண்டு அவனிதன்னையாண்டேனே
என்பேரைச்சொல்லியவள் எடுத்துமருந்துரைத்தாள்
ஆகடியஞ்சொன்னதினால் அடைத்தேன்கிடங்கிலேநான்
பயித்தியக்காரனென்றாய் பழுதில்லையெந்தனுக்கு
ஆளுலனழைத்துப்போம் அனுப்பிவிடச்சொல்லுகிறேன்
ஆரடிதாதிகளே அலங்காரத்தோழிகளே
கிடங்கைதிறந்தவனை கொப்பெனவேபோகவிடும்
அவ்வார்த்தைதான்கேட்டு அலங்காரத்தோழியர்கள்
ஓட்டம்நடையுமாக வோடிவந்தாகிடங்கருகில்
கிடங்கைத்திறந்தார்கள் கொப்பெனவேவிட்டுவிட்டார
அப்போதுதெய்வகன்னி ஆளன்முகம்பார்த்து
வாடாருடிப்பாநீ மதியழிவானென்றழைத்தாள்
அல்லிமெல்லியென்றுசொல்லி ஆணழகன்தான்வருவா
எப்போவருவாளோ என்னாசைதீருமென்பான் [ன்
மன்மதபாணமது மார்புருகிப்போகுதென்பான்
சித்தசள்தொட்டகணை சிறுமார்புருகுதென்பான்
ஆறுழிகுபாணமது மார்புருகிப்போகுதென்பான்
அஞ்சுருகுபாணமது நெஞ்சுருகிப்போகுதென்பான்
ஆசசுனனைக்கூட்டியே அரிராமர்போகலுற்றார்
மதுரையைத்தாண்டியே வந்தாரேகானகத்தில்
மாயன்பெருமாளும் மாயையாய்ப்போகலுற்றார்
ஆலமரத்தடியில் அரிராமர்பள்ளிகொண்டார்
களாக்குடைவிட்டு கரியமால்தூங்குகிறார்
ஆயனருகாக அருச்சுனனார்வந்துநின்றார்
பாரளந்தார்பாதத்தைப் பார்த்திபன்பிடிக்கலுற்றான்
அலண்டுபுரண்டதுபோல் அரிராமர்கண்விழித்தார்
ஆணலழகுமன்னா அருச்சுனரேகேட்டீரோ

காணாதசொற்பனத்தைக் கண்டேன்காணருச்சுனரே
என்னைத்தனியேவிட்டு எங்கேயோபோனதுவாய்
கானக்குறத்தியுமுன் கைபார்த்துச்சொன்னதுவாய்
வண்ணமருந்துனக்கு மலைக்குறத்திதந்ததுவாய்
அம்மருந்தைநீவாங்கி அல்லிபுறம்போனதுவாய்
வண்ணமருந்தெடுத்து தண்ணீரிலுரைக்கக்கண்டேன்
அல்லியுடதாதிமார் ஆயிரம்பேரோடிவந்து
அர்ச்சுனரேயுனையெடுத்து ஆற்றிலேபோடக்கண்டேன்
தூக்குமரந்தனிலே தேர்விஜயாபோடக்கண்டேன்
காளியம்மன்கோயிலிலே காவுகொடுக்கக்கண்டேன்
பூதக்கிடங்கிலேதான் போட்டடைக்கக்கண்டேனே
ஆரோஒருதெய்வகன்னி அழைத்துவரக்கண்டேனப்பா
என்னருகேவந்திருக்கக் கண்டேன்கனவாக
என்னகாண்மைத்துரே இப்படிகனவுகண்டேன்
வாள்விஜயகோமானும் மாயனுக்குயேதுரைப்பார்
பித்தமுயர்ந்ததினாற் போதக்கனவுகண்டீர்
அல்லியர்மேற்சிந்தையது ஆசைமறக்கவில்லை
மாலையிட்டுஅல்லியரை மருவியணைவதெப்போ
கோபாலமைத்துனரே கூட்டிவைப்பதுன்பாரம்
அப்போதுமாயவரும் அருச்சுனன்முகம்பார்த்து
ஏறமுகம்பார்த்து எம்பெருமாளேதுசொல்வார்
பட்டுக்குல்லாகுண்டலம் பவுத்திரமோதிரமும்
வட்டுதட்டிஒட்டியாணம் பசும்பொன்னாற்சமுதாடும்
தாமரைப்பூசல்லடமும் சந்திரகாந்திதட்டிகளும்
உத்திரசஞ்சம்வல்லவாட்டும் உத்தமனேஎங்கேயென்றார்
அஞ்சிப்பயந்தவனாய் அருச்சுனனுமேதுசொல்வான்
ஆயர்பெருமாளேநீர் அனந்தல்நித்திரைபோகையிலே
மாதினதுபட்டணத்தை மதுரையைப்பார்ப்போமென்று
மாதுமேல்தன்னினைவாய் வழிபிடித்துப்போனேனையா
வழியிலொருகுறத்தி வந்துகுறிசொன்னாளையா
வண்ணமருந்துதந்து தண்ணீரிலுரையுமென்றாள்
மருந்துரைக்கும்போது அவள்மனதுகரையுமென்றாள்
குளிகைகரையும்போது குணமுந்திரும்புமென்றாள
மருந்தும்பலியாமல் மாயவரேபோச்சுதையா
நாலுமலைக்குத்தான் நடுவிலவளகுடிசையென்றாள
இராமக்காளபொம்மக்காள் இலட்சுமக்காளவளபேராம்

அங்கேவந்துகேட்டாலே ஆபரணந்தருவேனென்று
மருந்தைகொடுத்துவிட்டு வாங்கிபோனானுடைமைகளை
அவள்-கொடுத்தபடியேதான் குணமாச்சோ அர்ச்சுனனே
சொன்னபடியாகச் சேர்ந்தாளோ அல்லிநல்லாள்
ஒருலாபங்கண்டறியேன் உழன்றுநான்வந்தேனையா
பொம்மக்காபேரைச்சொன்னால் திம்மக்காநேர்ந்தது
உடமைபறிகொடுத்து உழன்றுயான்வந்தேன்
அவ்வார்த்தைதான்கேட்டு அரிராமரேதுசொல்வார்
குறத்தியிருப்பிடத்தை கொற்றவனேதேடியேபோம்
உன்னுடமையுள்ளதெல்லாம் உத்தமனேவாங்கிவாரும்
கடுகியேவாங்கிவாரும் கட்டழகாவென்றுரைத்தார்

அருச்சுனன் குறத்தியிடஞ்சென்று தான்

கொடுத்ததை வாங்கினது.

ஆயாதுகேட்டு அருச்சுனருந்தானடந்தார்
குறத்தியரைத்தேடியே கொப்பெனவேவருகிறார்
நாலுமலைநடுவே நல்விஜயன்தேடிவந்தான்
ராமக்காபொம்மக்கா லட்சுமக்காளென்றழைத்தார்
ஆயன்பெருமாளும் அக்குறத்திபோலேவந்தார்
ஆரடாதம்பியரே அழைத்தகருமமென்ன
நீ-கொடுத்தமருந்ததனிற் குணமில்லையாச்சியரே
தந்தமருந்ததனிற் சற்றும்பலனில்லையடி
பொம்மக்காபேரைச்சொன்னால் திம்மக்காநேர்ந்தது
உன்பேச்சைநான்கேட்டு உதைப்பட்டுவந்தேனடி
நான்-கொடுத்தவுடைமைகளை கொப்பெனதாருமென்றார்
என்வார்த்தைநீர்கேளீர் இயலானதம்பியரே
கட்டழகாவுன்னுடமை கடையிலேவிற்கப்போனேன்
காசுக்கடைதனிலே கண்டதலையாரிசேனை
கன்னமிட்டுவந்தேனென்று கட்டியடித்தார்கள்
திருடிவந்தேனென்றுசொல்லி துணியும்பறித்தார்கள்
அடியுதையும்பட்டேனே அலைச்சல்பட்டுவந்தேனே
உடமைபறிகொடுத்து உடுத்தினதுணியிழந்தேன்
எங்கிருந்துநான்கொடுப்பேன் இனியவுடமையது
அவ்வார்த்தைதான்கேட்டு அர்ச்சுனனேதுசொல்வான்

உடமைகொடுக்காமல் உன்னைவிடேன்கட்டுவச்சி
மடியைப்பிடித்திழுத்தான் மாயன்குறத்திதனை
குய்யோமுறையோவென்று கூவினளக்குறத்தி
புத்தீசல்போலவேதான் புறப்பட்டாள்சிறுகுறத்தி
சில்லுபொல்லென்றுசொல்லி சிறுவாய்க்கூடினார்கள்
ஆளுக்கொருகுத்துவைத்து அடித்தாரே அருச்சுனனை
அருச்சுனனார்தரித்திருந்த ஆபரணமுள்ளதெல்லாம்
கொண்டுவந்துதந்தாளே கொம்பனையாளக்குறத்தி [யா
அல்லியர்க்காய்ப்பட்டகளை அருச்சுனாக்குப்போதுமை
பெண்ணாலேபட்டகளை போதுமென்றார் அருச்சுனரும்
அருச்சுனமகாராசன் ஆயரிடம்வந்துவிட்டான்
வாங்கிவந்தேனென்று வணங்கியேதெண்டனிட்டான்
அப்போதுமாயவனார் அருச்சுனற்குஏதுசொல்வார்
மாளிகைக்குப்போகவே மனமுண்டோ அருச்சுனரே
தருமர்தவிப்பாரே தம்பிமார்புலம்புவாரே
காணாதேயுன்னாச்சி கலங்கித்தவிப்பாளே
வந்துநெடுநாளாச்சே வாள்விஜயாயிப்போது
பெண்ணாசைகொண்டுநீ புலம்பித்தவிக்கிறாயே
மாதர்மேலாசைகொண்டு மயங்குகிறாய்அர்ச்சுனரே
ஆணலழகுமன்னன் அருச்சுனனுமேதுசொல்வான்
எந்தவிதமானாலும் இளங்கொடியாளல்லியரை
தாலிகட்டிவையுமையா சுவாமிபெருமாளே
மாலையிட்டுவையுமையா மாயன்பெருமாளே
என்றுபணிந்தானே இயலானவாள்விஜயன்
ஆயன்பெருமாளும் அரிராமரேதுசொல்வார்
ஆணலழகுமன்னா அருச்சுனரே நீர்கேளும்
ஆண்டிவடிவாக அல்லியின்றன்வாசலிலே
மடலூர்ந்துவந்தாயாகில் மாலையிட்டுவைக்கிறண்டா
அப்படியேபோய்வருவேன் ஆயர்செலவருளும்

அருச்சுனன் ஆண்டிவேடங்கொண்டு

மடலூர்ந்தது.

ஆயன்பெருமாளும் அரிராமரப்பொழுது
ஆண்டிடைப்போலாக அருச்சுனர்க்குச்செலவுதந்தார்
என்னவடிவெடுத்தார் இளவிசயராசதுரை

தொண்ணூறும்பத்துஞ்சென்ற துவண்டகிழவனைப்போ
தும்பைப்பூபோலே துவண்டகிழவனைப்போல் [ல்
பண்ணைப்பூபோலே பழுத்தகிழவனைப்போல்
தாணற்பூபோலே நரைத்தகிழவனைப்போல்
தோலும்நரம்புகளும் தொங்கிற்றுகிழவனுக்கு
பழுத்தபழம்போலே பார்த்திபன்வடிவெடுத்தான்
காவிகாஷாயமுடன் கைதனிலேமாத்திரையும்
திருநீறுந்தாமணிந்து திரிகண்டமாலைசாற்றி
ருத்திராட்சந்தாவடமும் ருத்திராட்சமாலைகளும்
அன்றுரித்தமான்தோலும் அழகானபுலித்தோலும்
தொட்டமிதியடியும் தோளில்வைத்தகின்னரியும்
மாத்திரைக்கோல்பிரம்பு மயிற்குச்சுகமண்டலமும்
வேலாயுதஞ்சூலாயுதம் விருதுகண்டகோடாலி
கெவுரிநல்லபாத்திரமும் கேதாரக்கங்கணமும்
திருவோடுபாத்திரமும் திருநீறுகோபிகளும்
சங்குஞ்செயகண்டிகையுந் தரித்தாரேபூஷணங்கள்
சடையுமுடியுமாகத் தம்பிரானைப்போலானார்
ஆதிசிவன்போலாக அருச்சுனனார்வேஷங்கொண்டார்
கைலாசநாதனைப்போல் காண்டீபன்வடிவெடுத்தார்
வேஷங்கள்பூண்டானே வீராதிவீரனுந்தான்
அல்லியரைப்போலாக அழகுபடமெழுதி
பாங்கியிலும்நல்ல பவளசேனைநாயகியை
கூடவெழுதினாராங் கோவிந்தஎம்பெருமாள்
படத்தைமடித்தவரும் பார்த்திபன்கைகொடுத்தார்
அல்லியதுவாசலிலே அங்கேபடம்விரித்து
அவன்-உடுத்தியபாவாடையில் ஒருமுழம்பிச்சைவாங்கி
வந்தாயேயாமாகில் மாலையிட்டுவைப்பேனடா
போய்வாருமென்றுசொல்லி பெருமாளனுப்பிவைத்தார்
வண்ணப்படமெடுத்து வாள்விசயன்வழிநடந்தான்
தள்ளாடித்தள்ளாடித் தளர்ந்துமெள்ளவழிநடந்தான்
தெற்குத்தெருகடந்து தேரோடும்வீதிவிட்டு
அல்லியாண்மனையாம் ஆசாரவாசல்வந்தான்
ஆடிதாதிமாரே அரண்மனைக்குப்போகவேண்டும்
காசியிலிருந்தல்லவோ இராமேசுரம்போகவேண்டும்
பிச்சைகேட்கவந்தேனம்மா போகவழிவிடுங்கள்
பொற்கொடியாள்வாசலிலே போய்வருவேனாச்சியென்றார்

ஐயாபெரியவரே அறிவைப்படைத்தவரே
தீரப்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
ஆண்காற்றடியாது அல்லியதுகோட்டையிலே
போனூற்பழுதுவரும் போகாதேசாமியென்ருள்
ஆண்டிபரதேசி ஐயமென்றுவந்தவரை
வழியைமறிப்பார்கள் வையகத்திலாருமில்லை
தொண்ணூறுஞ்சென்றுதம்மா துவண்டகிழவனடி
தோலுநரம்புகளுந் தொங்குதேளந்தனுக்கு
என்னை-பார்த்தவர்களெல்லாரும் பணிந்திடுவார்தப்பாது
போகச்சிலவுகொடும் புண்ணியந்தப்பாது
தருமத்தினுலேயம்மா தாழ்வுஒருநாளுமில்லை
போகச்சிலவுகொடும் போய்வருவேனுச்சியரே
வாசற்றடைகாரர் வழிவிட்டார்சங்கமற்கு
அவ்வாசலது அருச்சுனனுந்தாண்டிவந்தான்
மூத்துசெம்பொற்படிவாசல் மூன்றுகட்டுந்தான்தாண்டி
ஐந்தாம்படிதளத்தில் அருச்சுனனூர்வந்துவிட்டார்
புலியாசனம்போட்டு பொற்படத்தைமுன்னேவைத்தாள்
ஆசனத்தின்மேலிருந்து அல்லிபடந்தான்விரித்தான்
மான்செவியுங்கண்ணையும் மறைத்தாரேமாயவனூர்
கண்ணிரண்டுந்தெரியாமற் காதிரண்டுங்கேளாமல்
அல்லும்பகலும் அறுபதுநாழிகையும்
அறுபதுநாழிகையும் அல்லிமெல்லியென்பானே
அல்லிமேற்சிந்தையாய் அருச்சுனன்புலம்பலுற்ருன்
மருவியணைவதற்கு வருவாளோஅல்லியென்பான்
உன்னுசைகொண்டேனடி ஊராசைபேர்மறந்தேன்
தாயாரையான்மறந்தேன் தமையனுபேர்மறந்தேன்
தம்பிதமையனைச் சகலரையும்நான்மறந்தேன்
உன்னுசைகொண்டுதானுழன்றுதிரிகிறண்டி
மன்மதபாணமது மார்பைப்பிளக்குதடி
சித்தஜன்விட்டகணை சிறுமார்புருகுதடி
காமன்கணையாலே களைதாங்கிப்போகிறண்டி
அஞ்சுருகுபாணமது நெஞ்சுருகிப்போகுதடி
ஆறுருகுபாணமது மாருருகிப்போகுதடி
மாரபோடேமார்பணைத்தான் மகாவிடாய்திருமடி
என்றுதெளியுமோ எக்காலஞ்சென்றிடுமோ
அல்லிமேற்சிந்தையதாய் அருச்சுனன்புலம்புகிருன்

அவ்வாசல்காக்கின்ற ஆயிரந்தோழியர்கள்
அவ்வார்த்தைதான்கேட்டு அதிகவிசாரங்கொண்டார்
இதுவென்னகாலகேடோ ஏதறிவோந்தோழியரே
பாங்கியிலும்நல்லவொரு பவளசேனைதன்னருகில்
ஓட்டம்நடையுமாக ஓடிவந்தார்தாதியர்கள்
பவளசேனைபாதத்திலே பணிந்தவர்களேதுசொல்வார்
யாரோஒருகிழவன் ஆண்டிபரதேசியவன்
பிச்சையென்றுவந்தானே போகவழிவிட்டோமே
அஞ்சாங்கட்டுவாசலது அரண்மனையில்வந்தார்காண்
அல்லியரைப்போலாக அழகுபடமெழுதி
உன்னைலங்கூடவே ஒருமையாய்வைத்தெழுதி
வண்ணப்படம்விரித்து வல்லமையாய்ப்படிக்கிருனே
அல்லியர்மேலாசையதாம் அலைந்துபுலம்புகிருன்
வாடியென்றும்போடியென்றும் வம்புதும்புசொல்லுகிரு
ஆகடியம்பேசுகிருன் அழும்புகளுஞ்செப்புகிருன்
செப்புகிறவார்த்தையது செவிகேட்கமுடியாது
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வாள்பவளசேனை
அல்லிப்பெருமாளை அழகுமணஞ்சூட்டவென்று
மாறுவேடங்கொண்டவனும் மாலையிடவந்தவன்காண்
ஆண்டிபரதேசியாஞல் அழும்புகளுஞ்சொல்வானே
எல்லாமறிந்திடுவோம் இப்போதுதோழிகளே
ஓரைந்துதாதிமார்கள் ஒருநிறமாயெழுந்திருங்கள்
ஒருநிறமாய்ப்பணிபூண்டு ஒருநிறமாய்ப்பட்டுடுத்தி
ஐந்துவிதக்கட்டுகளை அலங்காரமாயெடுத்து
பொன்னொருதட்டிலேயும் பூவொருதட்டிலேயும்
ஆபரணத்தட்டோடு ஆடையொருதட்டிலேயும்
ஒன்பதுரத்தினமும் ஒருதட்டில்தானெடுத்து
பண்டாரமுன்னுலே பாங்கியரேகொண்டுபோங்கள்
ஐயருக்குமுன்னேவைத் தடிபணிந்துதெண்டனிட்டார்
ஐந்துபேர்பெண்களிலே யார்வேண்டும்சொல்லுமென்று
ஆடையுமாபரணம் ஆசையானலெடுத்துக்கொள்ளும்
பெண்கள்மேலாசையென்றால் பின்னுல்வருவோமையா
ஐயனைக்கேட்பதற்கு ஆரணங்குபோங்களென்ருள்
அக்கணமேதோழியர்கள் அதிவிரைவாயோடிவந்து
ஐந்துபேர்தோழியர்க ளலங்காரம்செய்துகொண்டார்
ஐந்துவிதத்தட்டுகளில் ஆபரணப்பூஷணமும்

மூத்துகளுப்வஸ்திரமும் முன்னாலேகொண்டுவந்தார்
ஐயாதிமுன்னேவைத்து அடிபணிந்துதெண்டநிட்டார்
ஐயாபெரியவரே அடியோம்சரணமென்றார்
ஆச்சியருந்தனுக்கு அனுப்பிவைத்தாபூஷணங்கள்
ஐந்துபேருந்தனுக்கு அனுப்பிவைத்தாசங்கமரே
ஆசையுள்ளபெண்களை நீ ரழைத்தால்வருவோமையா
இவ்வளவுரத்தினத்தை யெடுத்துகொள்ளும்சங்கமரே
என்றந்தப்பெண்களுமே இரங்கியேதெண்டனிட்டார்
ஆனுலழகுமன்னன் அருச்சுனனுமேதுசொல்வான்
அல்லிமேற்சிந்தையதாய் அல்லிமெல்லியென்பானே
மருவியணைவதற்கு வருவாளோ அல்லியென்பான்
எப்போவருவாளோ என்னாசைதீர்ந்திடுமோ
மன்மதபாணமடி மார்புருகிப்போகுதடி
சித்தசன்விட்டகணை சிறுமார்புருகுயடி
காமன்கணையாலே களைதாங்கிப்போகிறண்டி
அல்லியல்லியென்றுசொல்லி அலைகிறுசங்கமனும்
கேட்டந்ததாதியருங் கிலேசங்கொண்டுதானடந்தார்
பவளசேனைதன்னருகில் பக்கத்தில்வந்தார்கள்
ஆச்சியரே நின்சொற்படி ஐந்துபெண்கள்போனேமம்மா
அலங்காரந்தன்னுடனே ஆபரணமுன்புவைத்தோம்
ஏனென்றுகேட்கவில்லை யேறமுகம்பார்க்கவில்லை
அல்லிமேற்சிந்தையதாய் அலைகிறுன்சங்கமனும்
வெகுநேரம்நின்றோமே விரும்பாதால்வந்துவிட்டோம்
இவ்வார்த்தைதான்கேட்டு இளங்கொடியாள்பவளசேனை
எண்ணுதவெண்ணமெல்லாம் எண்ணியிளங்கொடியாள்
ஐயமென்றுவந்ததொரு ஆண்டிபரதேசியல்ல
அவள்-கட்டினவிருதறுத்து கலியாணம்பண்ணவந்தான்
தேவனென்றுநாமறியோம் சிவராஜனென்றறியோம்
தன்மனதிலேயடக்கித் தானடந்தாள்பவளசேனை
அல்லிநல்லாள்பக்கம்வந்து ஆரணங்குதெண்டநிட்டாள்
ஏதுபவளசேனை இந்நேரம்வந்ததென்ன
வேற்கவிருவிருக்க வெண்துயிலுஞ்சோர்ந்துவந்தாய்
உச்சியுருமத்திலே உத்தமியேயெங்குவந்தாய்
ஆச்சியரேகேட்கிலேயோ ஆண்டிஅதிசயத்தை
நாதிசுகப்படவே நாளாச்சோ ஆச்சியரே
உனக்கும்வரும்பாக்கியங்கள் ஒருவருக்குந்தெரியாது

ஆதிசிவனைப்போலே ஆண்டியிங்கொருவர்வந்தார்
படம்படிக்கும்பண்டாரம் பரமசிவன்போலேவந்தார்
மாணிக்கச்சொக்கலிங்கம் வந்தாற்போல்காணுதம்மா
சடையுமுடியுமாகத் தம்பிரான்போற்காணுதம்மா
கண்டுமறியேனம்மா கலியுகத்தில்நானறியேன்
தோலுநரம்புகளுந் தொங்குதேகிழவனுக்கு
அஞ்சாங்கட்டுவாசலிலே ஐயர்வந்திருக்கிறார்
தரிசனைபண்ணுமாகில் தீருமம்மாதோஷம்வினை
பார்த்தால்பசிதீரும் பண்டாரமானவரை
ஆச்சியெழுந்திரம்மா ஐயரைப்போய்ப்பார்ப்போம்
என்றதுதான்கேட்டு ஏதுசொல்வாளல்லியரும்
ஆண்காற்றடியாதே அரண்மனைவாசலிலே
ஆண்டியிங்கேதான்வருக அதிகாரமாச்சுதடி
ஆண்டிபரதேசி ஐயமென்றுவந்தாலும்
கொடுத்தனுப்பலாகாதோ கொம்பனையேயென்தோழி
என்னுடன்சொல்வானேன் எழுந்திருதாதியென்றாள்
பாங்கியிலும்நல்லவளாம் பவளசேனையேதுசொல்வாள்
பிச்சைகொடுக்கிறது பெருமையென்றுபாராதே
நல்லோர்பெரியாரை நடந்துபோய்சேவித்தால்
காசிபோகவேண்டுமோ கர்மந்தொலையாதோ
பெரியவரைச்சேவித்தாற் பிழையொன்றும்வருவதில்லை
கைலாசநாதரைப்போற் காண்கிறது ஆச்சியரே
என்வார்த்தைதள்ளாதே எழுந்திருபோவோமென்றாள்
மகுடத்துரைச்சியவள் வாழ்வரசியேதுசொல்வாள்
ஆண்டியைப்பார்ப்பதற்கு அழைக்கிறாயென்தோழி
ஆணும்பழமுமில்லை அரசுங்கிழமுமில்லை
சுரக்காய்ப்பழமுமில்லை சொன்னகிழவனில்லை
என்னைக்-கண்டானேயாமாகில் காமங்கொளுத்திவிடும்
பரிகாசம்சொன்னாலே பாங்கியரேயென்னசெய்வேன்
வீரமணிவாளாலே வெட்டியெறிவேனென்றாள்
அப்படியாகுதம்மா ஆச்சியெழுந்திருங்கள்
சிங்காதனத்தைவிட்டுத் தேன்மொழிதானெழுந்தாள்
பட்டுபளபளென்ன பாடகக்காற்சோதிமின்ன
நெற்றிசுட்டிசோதிமின்ன நீலவிழிமைதுலங்க
கால்பீலிகலகலென்ன கைவளையல்கலகலென்ன
மூத்தாணிநிலம்புரள மோதிரங்கள்கலகலென்ன

தோழியரைத்தோளணிந்து தோகைநடந்தாளே
பாங்கிமார்தோழிமார் பக்கமேசூழ்ந்துவர
வாசற்படியேழு வாசலதுதான்கடந்து
ஆண்டியிருக்குமது அஞ்சாங்கட்டுவாசல்வந்தார்
அல்லிவரும்போது அருச்சுனரேதுசொல்வார்
என்காணுமல்லியரே எப்போதுமனமிரங்கும்
என்றைக்குக்காணுவேன் என்னாசைதீருமடி
மாரனவன்எய்தகணை மார்பைப்பிளக்குதடி
சித்தசன்தொட்டகணை சிறுமார்புருகுதடி
மாலையிடுவதெப்போ மருவியணைவதெப்போ
கூடியணைவதெப்போ குறையனைத்துந்தீர்வதெப்போ
அல்லியல்லியென்றுசொல்லி அருச்சுனன்புலம்புகிறான்
மருவியணைவதற்கு வருவாளோ அல்லியென்பான்
கட்டழகியல்லியம்மாள் காதாரக்கேட்டுவிட்டாள்
உருக்கியசெம்பொனது உதிரம்போற்கண்சிவந்து
பிறந்துவளர்ந்துதான் பூமிபாரம்ஆண்டவனே
நீன்முகனைக்கொன்றுநான் நீலிபட்டம்ஆண்டேனே
வாடியென்றழைத்தவர்கள் வையகத்திலாருமில்லை
அடியென்றழைத்தவர்கள் அவனியிலொருவரில்லை
ஆண்டியதுவாயாலே அலைச்சல்படநாளாச்சே
எடுத்துவாபெரியகத்தி இருதுண்டம்போடவென்றாள்
எகுபெரிசைபெரியகத்தி எடுத்துவாதாதியரே
பாங்கியிலும்நல்லவொரு பவளசேனையேதுசொல்வாள்
பாண்டியப்பெருமாளே பதறாதேஆச்சியென்றாள்
எழுதிவந்தநற்படத்தை எடுத்துவாதாதியென்றாள்
அந்தபடங்கொண்டுவந்து ஆச்சியருகேவைத்தார்
கண்ணாடியெதிரேவைத்து கண்டாள்படத்தழகை
தன்னழகும்படமழகும் சரியாகத்தோன்றிற்று
என்னழகும்பாவனையும் எங்குகண்டெழுதினாரோ
உந்திச்சுழியழகும் உரோமத்தின்போழகும்
மயிரழகும்பாவனையு மாபாவியெங்கேகண்டான்
முகத்தின்திருவழகும் மூதேவியெங்கேகண்டான்
கண்ணின்விழியழகும் கழுசிறையானெங்கேகண்டான்
பவளப்போலென்னிதழும் பல்லழகுமெங்குகண்டான்
மார்பில்ஸ்தனமழகும் மச்சமுமெங்கேகண்டான்
இடையழகுந்தொடையழகும் எனுதிகங்குகண்டான்

ஆபரணந்தன்னழகும் ஆடையும்பொழகும்
வடிவழகுமொப்பனையும் மாபாவியெங்குகண்டான்
என்னையெழுதிவந்த தல்லாமலென்தோழி
உன்னையுங்கூடவவன் உடனேயெழுதிவந்தான்
எடுத்துவாபெரியகத்தி இருதுண்டமபோடவென்ருள்
பக்கச்சதைகளெல்லாம் பதைக்கிறதேயல்லியற்கு
பாங்கிலும்நல்லதொரு பவளசேனையேதுசொல்வாள்
ஐயமார்பட்டதொரு அடைவுபோலாகுமிது
பாண்டியர்கள்பட்டதொரு படுகளம்போலாகுமிது
ஆண்டியை நீவெட்டினுல் யாரார்தலைபோமோ
அந்தக்கதையெனக்கு ஆரணங்குசொல்லுமென்ருள்

பவளசேனை பாண்டியர்களடைந்த துன்பத்தை
அல்லியரசாணிக்குக் கதையாகக் கூறினது.

வைகைபெருக்கெடுத்து மடுவெள்ளம்போகையிலே
யாராலும்வைகைதனை அடைக்கமுடியாமல்
பாண்டியராசாக்கள் புகுந்துகரைபோட்டாரே
ஆணுய்ப்பிறந்தவர்கள் அரைஞாணிடைகட்டினபேர்
பெண்ணுய்ப்பிறந்தவர்கள் புடவையுடுத்தினபேர்
அவரவர்க்குஒருபங்கு அளந்துகரைபோட்டார்கள்
அவரவர்கள்பங்குக்கு அடைத்தார்கள்வைகைதனை
அதிலேயொருபங்கதனை அன்ருடம்பிட்டுசுடும்
ஆயிரம்பிறைகண்ட ஔவைபோலோர்கிழவி
அவளுக்கொருபங்கு அளந்துகரைபோட்டார்கள்
பங்குக்காளில்லாமற் பரதவித்துத்தானழுதாள்
மண்ணுஞ்சுமக்கறியாள் மனஸ்தாபப்பட்டழுதாள்
வாணியக்கிழவியவள் மனத்துயரமாகையிலே
மாணிக்கச்சொக்கலிங்கம் மகாதேவர்தாமறிந்தார்
அட்டாளும்சொக்கலிங்கம் ஆதிசிவன்தானறித்து
ஔவையார்மனத்துயரம் ஆயாசந்தீர்க்கவென்று
ஒட்டனைப்போலாக உலகளந்தார்மைத்துனரும்
கன்னங்கருத்தவர்போற் கடுகிவடிவெடுத்தார்
தட்டுதலையில்வைத்து கெசக்கோலைக்கைபிடித்து
மண்வெட்டிதோளில்வைத்து மகாதேவர்வருகிருரே
மதுரைத்தெருவீதியிலே வந்தாரேசொக்கலிங்கம்

அப்போது சொக்கலிங்கம் ஆதிசிவன் கூறிவாரார்
மண்ணெடுத்து சுவர்வைப்பேன் வைப்பீரோ கூலியாளாய்
மண்ணெடுத்து ஆறடைப்பேன் வைப்பீரோ கூலியாளாய்
என்றது சொல்லியே ஈஸ்பரனுர் கூறிவாரார்
கூறிகூறி வந்தாரே கொப்பெனவே வீதியெல்லாம்
ஒளவையார் தன்னருகில் ஆதிசிவன் வந்துவிட்டார்
உற்றஒளவையாருமப்போ ஒட்டனுக்கேது சொல்வாள்
ஆடாஒட்டா நீ ஆணழகர் கேளுமென்ருள்
அன்ருடகம்பிட்டுசுட்டு அங்காடி விற்பேனடா
நூற்ருெருபிட்டுசுட்டால் ஒருபிட்டுதிருமடா
உதிர்ந்ததொருபிட்டுனக்கு உத்தமனே யான் தருவேன்
மண்ணெடுத்து ஆறடைத்து வருவாயோ யன்னவனே
உதிர்ந்துபோகும்பிட்டுகளை யுந்தனுக்கே நான் தருவேன்
சத்தியந்தப்பாமல் தருவேன் யான் போடாவென்ருள்
பிட்டுக்குலைகட்டுமம்மா போயடைத்து வருவேனென்ருர்
ஒளவையாருந்தானெழுந்து அடுப்பூதி மூட்டினுலே
பிட்டுக்குலைகட்டினுள் போதச்சமைக்கலுற்ருள்
இருபதுபிட்டுசுட்டு எடுத்தாளே கூன்கிழவி
ஒட்டம்நடையுமாக ஓடிவந்தா சொக்கலிங்கம்
காலாலடைத்துவந்தேன் கன்னிபசிக்குதென்ருர்
சுட்டீரோ பிட்டுகளைச் சொல்லும் உதிர்ந்ததுண்டோ
இருபதுபிட்டுசுட்டேன் எல்லாமுதிர்ந்ததடா
எனக்கென்று எங்கிருந்தாய் ஈடழிவான் ஒட்டா நீ
இந்தாருமென்றுசொல்லி ஈந்துவிட்டாள் பிட்டதனை
குறையடைத்துவருவேன் யான் கொப்பெனவே பிட்டுசுடு
புறக்கடையிற்போவாராம் புன்னைமா நிழலில் வந்தார்
கொண்டுவந்தபிட்டுகளை கொப்பெனவே உண்டுவிட்டார்
ஒருநாழிகைதரித்து ஓடிவந்தார் சொக்கலிங்கம்
அரையாறடைத்துவந்தேன் ஆச்சிபசிக்குதென்ருர்
சுட்டீரோ பிட்டுகள் தான் சொல்லும் உதிர்ந்ததுண்டோ
ஐம்பதுபிட்டுசுட்டேன் அனைத்துமுதிர்ந்ததடா
இந்தகருமப்பாவென்று எடுத்துக்கொடுத்துவிட்டாள்
வாங்கியந்தபிட்டுதனை வழிநடந்தார் சொககலிங்கம்
கொன்றைமாத்தடியிற் கொண்டுவந்து தான் புசித்தா
ஈரரைநாழிசென்று எழுந்தவருமோடிவந்தார்
மார்மேலுந்தோள்மேலும் மண்வாரிபோட்டுக்கொண்டார்

மூக்காரடைத்துவந்தேன் மெத்தப்பசிக்குதடி
சுட்டீரோபிட்டுகளுஞ் சொல்லும்உதிர்ந்ததுண்டோ
நூற்றொருபிட்டுகளுஞ் சுட்டாளே அக்கிழவி
ஒருபிட்டுத்தான்தவிர மற்றபிட்டுதிர்ந்தனவே
உதிர்ந்திருந்தபிட்டெல்லாம் உத்தமனார்கைகொடுத்தாள்
வாங்கியந்தச்சொக்கலிங்கம் வழிநடந்தார்பொட்டணவே
குருந்தமரத்தருகே கொப்பலிலேவந்தமர்ந்தார்
கொண்டுவந்தபிட்டுகளை கொப்பெனவேயுண்டுவிட்டார்
தலைக்குயரத்தட்டுவைத்து சங்கரனார்பள்ளிகொண்டார்
ஆனந்தநித்திரையும் ஆதிசிவன்போடுறாரே
ஒருபிட்டுவிற்றாளே உத்தமியாள்கூன்கிழவி
நூறுபிட்டுலாபமெல்லாம் நேருடனேகண்டுகொண்டான்
ஆறாயிரம்பாண்டியரும் ஐயமார்தான்வந்தார்
வைகைக்கரையைப்பார்த்து வருகையிலேபாண்டியர்கள்
கொஞ்சமாய்ஜலம்பெருகிக் குறையாருவருகின்றதை
கண்டந்தப்பாண்டியருங் கடிதானகோபமுடன்
ஆருகடாபங்கிதுதான் அடைக்காமற்போனதென்ன
எவருதடாபங்கிதுதான் ஏதுக்கடைக்கவில்லை
பிட்டுவிற்கும்வாணிச்சி பொற்கொடியாள்பங்கிதுதான்
அந்தக்கிழவிதன்னை யழைத்தோடிவாருமென்றார்
ஆள்பெருஞ்சேவகரும் அதிகமாயோடிவந்தார்
ஒளவையாரைதானுமங்கே யழைத்துவந்தாராசரண்டை
வந்துதெண்டம்பண்ணினாள் வாழ்மதுரைபாண்டியர்க்கு
வாடிநீஒளவையாரே வாணியக்கிழவியரே
அவரவர்பங்குகளை அடைத்தாரேவைகையிலே
உன்பங்கையடையாமற் போனதென்னவுத்தமியே
ஆரோஒட்டனையா ஆறடைப்பேனென்றுசொல்லி
நூறுபிட்டுவாங்கித்தின்று நேராயடைப்பேனென்றான்
பிட்டுதின்றபாவியைத்தான் பின்புவரக்காணேனே
ஆறடைத்தானென்றிருந்தேனந்நீதம்பண்ணிவிட்டான்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆறாயிரம்பாண்டியரும்
ஆடாசேவகரே அவனைப்பிடியுமென்றார்
தேடிப்பிடியுமென்றார் சீரானஒட்டனைத்தான்
அப்போதுசேவகர்கள் ஆராய்ந்துதேடலுற்றார்
கடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிகளும்
மதுரைத்தெருவுகளும் வனங்களுப்தோப்புகளும்

தேடிவருகிறார்கள் சீறுனஒட்டனைத்தான்
மரத்தடியிற்பள்ளிகொண்ட மன்னவனைக்கண்டார்கள்
கண்டுபிடித்தவர்கள் கடுகியேகூட்டிவந்தார்
பாண்டியராசாக்கள் பார்த்தவருங்கோபமதாய்
வாணிச்சிகிழவியைநீ வகைமோசஞ்செய்தாயடா
ஆரடைப்பேனென்றுசொல்லி பிட்டெலாந்தின்றாயடா
மண்ணெடுத்துபோட்டுநீ வைகையடையுமென்றார்
தட்டிலேமண்வாரி தலைமேலேயெடுத்துக்கொண்டு
அடிமேலடிவைத்து அஞ்சிநடைநடக்க
ஆண்டவனென்று அறியாமற்பாண்டியர்கள்
பிட்டுதின்றமயக்கத்தினாற் போகமனமில்லையடா
என்றுசொல்லிபாண்டிய நீஸ்பரரைத்தானடித்தான்
பாரப்பிரம்பாலே பாண்டியனடித்துவிட்டான்
அடிபட்டுசொக்கலிங்கம் அம்மண்ணைபோட்டுவிட்டார்
ஆறுமடைத்தவர் ஆரூபியாய்ப்போய்மறைந்தார்
அந்தஅடியலவோ அனைவருக்கும்பட்டதுகாண்
ஆறாயிரம்பாண்டியர்க்கும் அடிமுதுகிற்பட்டதுவே
ஆறுமாதம்பிண்டத்துக்கும் அந்தஅடிபட்டதுகாண்
எறும்புகடையானைமுதல் எண்பத்துநான்குலட்சம்
அத்தண்டசீவனுக்கும் அல்லவர்க்கும்பட்டதம்மாள்
அப்படிபோலாகுமிது அல்லியரேமிஞ்சாதே
கிழவனைக்கொன்றாலே கேடுவருமெல்லோர்க்கும்
ஆண்டியைக்கொன்றாலே யாரார்தலைபோமோ
பண்டாரக்கிழவனாலே பழிவந்துநேருமம்மா
உன்கையாலேகொல்லாதே கட்டழகிசங்கமனை
கொல்வாரைவிட்டுநீ கொல்லவிடுஞ்சங்கமனை

ஆண்டியை சர்ப்பங்களாற் கொல்ல நினைத்தது.

பாம்புகளைக்கொண்டுவந்து பாரவிஷமேற்றி
சர்ப்பங்களைவிட்டுநீ சங்கமரைக்கொல்லுமென்றாள்
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லிப்பெருமாளும
ஆரடிதாதிகளே அலங்காரத்தோழிகளே
பாம்புபிடாராகளைப் பறந்தோடியழையுமென்றாள்
ஓட்டம்நடையுமாக வோடியழையுமென்றாள்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆரணங்குதோழிமார்கள்

ஓட்டம்நடையுமாக ஓடிவந்தார்தாதியர்கள்
பாம்புபிடாரப்பெண்ணே பத்தினிமாரானவரே
அல்லிப்பெருமாளும் அழைத்தோடிவாருமென்றாள்
வாருங்களென்றுசொல்லி வரவழைத்தார்தாதியர்கள்
அவ்வார்த்தைதான்கேட்டு அலங்காரப்பெண்களெலாம்
மகடிக்குழலூதி மாவிருதுகட்டினார்கள்
பெட்டியைத்தோளில்வைத்துப் பெண்கள்வருகிறார்கள்
வீதியும்வீதிவிட்டு மேலத்தெருவுங்கடந்து
அல்லியம்மாள்வாசலிலே அனைவோரும்வந்தார்கள்
மகுடத்துரைச்சியற்கு வந்துதெண்டம்பண்ணினார்கள்
எங்களையழைத்தவகை யேதுக்குறையுமென்றாள்
உங்களையழைத்தது ஒன்றால்குறைவுமில்லை
காட்டுக்குப்போங்களடி கன்னிபுத்துமருந்துவைத்து
கருநாகஞ்செந்நாகங் காலக்கோட்டிவிஷங்களெல்லாம்
மண்ணுளிப்பாம்புகளும் மலைவிரியன்தாசரியும்
மட்டில்லாப்பாம்புகளை வகைவகையாய்ப்பிடித்துவந்து
ஆண்டியைக்கொல்லவே அதிவிரைவில்வாருமென்றாள்
உச்சிதங்கள்வேணமட்டும் உங்களுக்குநான்தருவேன்
பாம்புபிடாரப்பெண்கள் பாங்குடனேபோகலுற்றார்
அத்துவானக்கானகங்கள் ஆரணியம்வந்தார்கள்
புற்றுக்குமருந்துவைத்தார் பெரும்பாம்புதான்பிடிக்க
மந்திரத்தைசொல்லியே மகடிக்குழலூதினார்கள்
புத்திசற்போலாகப் புறப்பட்டபாம்புகள்தான்
கருநாகஞ்செந்நாகஞ் காலக்கோட்டிபாம்புகளும்
ஆடிவரும்பாம்புகளும் அமர்ந்ததேபெட்டியிலே
சீறிவருகிற செந்நாகமுள்ளதெல்லாம்
மட்டில்லாப்பாம்புகளும் வகையுடனேதான்பிடித்தார்
காவடியைத்தோளில்வைத்துக் கடுகியேவருகிறார்கள்
விருதுகளைக்கட்டிக்கொண்டு வெகுமகடியூதினார்கள்
காடுசெடிதாண்டி கடுகிவந்தார்தென்மதுரை
தெற்குத்தெருகடந்து தேரோடும்வீதிவிட்டு
அல்லியம்மாள்தன்னுடைய அரண்மனைக்குள்வந்தார்
வாசற்படியேழு வாசல்களுந்தான்கடந்து
பத்தினிக்குதெண்டனிட்டு பாம்புபெட்டிவைத்தார்கள்
வகைக்கொருபாம்பாக மாதேநாம்பிடித்துவந்தோம்
கொண்டுவந்தோமென்று கொம்பனைமார்தெண்டனிட

மகுடத்துரைச்சியவள் மாதருமேதுசொல்வாள்
ஆரடிதோழிகளே அலங்காரத்தாதிகளே
பாலும்பழமும் பாம்புகட்குவையுமென்ருள்
அபினிமருந்துகளும் அன்பானசாராயம்
முட்டையுடைத்துநீ முன்னலேவையுமென்ருள்
கொண்டுவந்துவைத்தார்கள் கொம்பனைமார்பாம்புகட்கு
அத்தண்டபாம்புகளும் ஆகாரமுண்கிறது
கண்கள்சிவந்ததே காந்தாளமாயினதே
அவ்வலரிக்கண்களெல்லாஞ் செவ்வலரிபூத்ததுவே
பாம்புகளைப்பார்த்துப் பத்தினியாளேதுசொல்வாள்
அங்கயற்கண்ணம்மை அருளாலேயான்பிறந்தேன்
பட்டமுஞ்செங்கோலும் பாதிநாடாளுகிறேன்
வாடியென்றும்போடியென்றும் வம்புசொன்னாருமில்லை
ஆண்டியுடவாயாலே அலேச்சல்படுகிறேனே
சாதிகெட்டஆண்டியிவன் தாறுமாறுல்பேசுகிருன்
என்-அங்கமுறுகிறதே ஆவிதணலாகிறதே
செல்வங்குறைகிறது சிந்தைதணலாகுதம்மாள்
ஆண்டியைக்கடித்து அரைநொடியிற்கொல்லுமென்ருள்
கும்பிட்டுதெண்டனிட்டாள் கோலவிழியாச்சி
அல்லியுரைகேட்டு அத்தண்டபாம்புகளும்
செந்நாகமுள்ளதெல்லாஞ் சீறியெழுந்தனவே
கருநாகமுள்ளதெல்லாங் கதறியெழுந்தனவே
இருதலைப்பாம்புகளும் எழும்பிவருகின்றனவே
மூன்றுதலைநாகம் முடிகிவருகிறதே
ஐந்துதலைநாகம் அதிர்ந்துவருகிறதே
சீறிவரும்நாகமெல்லாம் தேர்விசயனைப்பார்த்து
ஆடிவரும்பாம்பனைத்தும் அருச்சுனரைக்கண்டனவே
ஆணலழகுமன்னன் அருச்சுனவீரியற்கு
முனனழகும்பின்னழகும் முதுகிலேமட்சரேகை
பல்லில்பாசவீணை பாதத்தில்செந்தாமரை
மீசைமுறுக்கழகும் விழிநல்லபார்வைகளும்
அவரழகைக்கண்டு அருச்சுனரென்றறிந்து
நாககன்னிமாலையிட்ட நல்விசையராசனல்லோ
தருமாதுதம்பியாந் தனஞ்சயனுமருச்சுனர்காண்
வெற்றிமதயானை வீமருக்குத்தம்பியாச்சே
மாயனதுமைத்துனராம் வாள்விசயனிவர்காணும்

அல்லியரைக்கன்னமிட ஆண்டிகோலமானரே
மாலையிடவேண்டுமென்று வடிவுகொண்டுவந்தார்காண்
மாப்பிள்ளையைக்கொல்லவென்று மருந்திட்டாளல்லியரு
ம்,கணவனைக்கொல்லவென்று கட்டழகிமருந்திட்டாள்,
அல்லியின்சொர்க்கேட்டு அர்ச்சுனரைக்கொன்றுவிட்டா
ல்,பொற்கொடியாள்நாககன்னி போதச்சிறையாவாளே
கைமோசம்வந்துவிடும் கன்னிசெய்தகாரியங்கள்
செல்வமருமகற்குச் செங்கானல்வீசுதென்று
வெய்யிலுரைக்குதென்று வெண்கானல்வீசுதென்று
ஐந்துதலைநாகம்வந்து அருச்சுனற்குக்குடைபிடிக்கும்
மூன்றுதலைநாகம்வந்து மூடிமேற்குடைகவியும்
தோள்மேலேயேறுவதும் தும்பிபறப்பதுவும்
கீதங்கள்பாடுவதும் கொண்டானடிப்பதுவும்
அரும்பவனிகூத்துகளும் ஆடும்சிறுநாகம்
மகுடத்துரைச்சியவள் மாதரும்பார்த்துவிட்டாள்
பாம்புமயங்கவேதான் பாவியவன்மருந்துவைத்தான்
வானஞ்சுழல்வதற்கு மருந்துண்டோயிவன்கையிலே
பூமிசுழல்வதற்குப் பொடியுண்டோயிவன்கையில்
மாதரைமயக்கவொரு மருந்தறியமாட்டானோ
ஆரடிதாதிகளே அலங்காரத்தோழிகளே
வெள்ளிப்பிரம்பாலே வீசுங்களபாம்பையென்றாள்
பாரப்பிரம்பாலே பாம்பையடியுமென்றாள்
தாதிமாரோடிவந்து சவுக்கெடுத்துவீசலுற்றாள்
மாறியடிக்கலுற்றார் வன்னவன்னப்பாம்புகளை
அப்போதுசர்ப்பமெல்லாம் அல்லியரைப்பார்த்துரைக்கு
மாப்பிள்ளையும்நீயுமாக மணமுகூர்த்தஞ்செய்தபின்பு
அன்னலூசல்போடுகைக்கு அழைத்தால்வருவோமோ
என்றந்தபாம்புகளதான் எகிறிப்பறந்ததுவே
பாங்கியிலும்நல்லதொரு பவளசேனை நீகேளும்
எந்தவிதத்தினாலே என்தோழிகொல்வோமடி
ஆண்டியைகொல்வதற்கா லோசனைசொல்லுமென்றாள
ஆனாற்கேளாச்சியரே ஆலோசனைசொல்லுகிறேன்
நீபிறக்கதவசுபண்ண நீதியுள்ளகாட்டானை
யானையையழைத்துவந்து ஆனந்தமேற்றியபின்
கொல்லவிடலாமே கொம்பனையேசங்கமனை
அவ்வார்த்தைகேட்டு அல்லியருமனமகிழ்ந்து

## யானையினால் ஆண்டியைக்கொல்ல வகைதேடினது.

ஆடிதாதிகளே அலங்காரத்தோழிகளே
காட்டானைதன்னையிப்போ கடுகியழைத்துவாரும்
ஆச்சியரே நீர்கேளும் அடியோமொருவார்த்தை
நீபிறக்கதவசுபண்ண நீதியுள்ளயானையது
வெறித்துத்திரிகிறதே வெங்கானகந்தனிலே
தன்னிழலையேபார்த்துத் தான்மதம்பொழிகிறது
கொம்பினாலேமலையைக் குத்திக்கிளப்பிவிடும்
மலைகள்பருவதங்கள் மண்ணோடேபேர்த்தெரியும்
மனிதரைக்கண்டாலல்லோ வாரியறைந்துவிடும்
மதப்பட்டுதிரியுதம்மா மாதாவே அந்தயானை
எம்மையுங்கண்டதானால் எடுத்துஅறைந்துவிடும்
செத்துமடிந்திடுவோம் செலவழிந்துபோய்விடுவோம்
போனோமேயாமாகிற் பின்னைபிழைப்பதில்லை
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வாளல்லியம்மாள்
கணையாழிமோதிரத்தைக் கழற்றிக்கொடுத்தாளே
மூத்திரைமோதிரத்தை மெய்குழலேகொண்டுபோய்
யானையின்முன்வைத்து அடிபணிந்துதெண்டனிட்டு
நீ-பெற்றமக்ளல்லியம்மாள் புலம்பியழுகிறாளே
உன்னைப்-பார்க்கமனதாகப் பத்தினியாளிருக்கிறாளே
அழைத்தோடிவாருமென்று சொன்னாளேயானைதன்னை
கணையாழிகண்டவுடன் கடுகிவரும்யானையென்றாள்
ஓட்டம்நடையுமாக ஓடுங்கள்தாதியென்றாள்
மத்தகஜத்தான்பிடிக்கு மாவெட்டிப்பெண்களவா
கணையாழிவாங்கியே கடுகிநடந்தார்கள்
தங்களரண்மனையிற் சடுதியிற்போய் நுழைந்து
புத்திரரானவர்க்குப் புத்திமிகவுரைத்து
யானையுந்தான்பிடிக்க அதிகவனம்போகிறோமே
சாவோம்பிழைப்போமோ சாமிசெயலெப்படியோ
பிழைத்துவந்தோமாகில் பிள்ளைமுகம்பார்க்கிறோம்
இல்லாமற்போச்சுதானால் ஈசன்பதஞ்சேருகிறோம்
பிள்ளையைகூட்டிவந்து பெரியோர்கையிலொப்பிவித்து
வாய்க்கரிசிதானெடுத்து மடியிலேகட்டினார்கள்

மதுராபுரிகடந்து மலைகாணிற்போகலுற்ருர்
காடுசெடிகளெல்லாங் கடுகியேதேடலுற்ருர்
இருண்டவனங்களெல்லாம் எங்கெங்குந்தேடலுற்ருர்
மலையோடும்படுத்திருந்த மதயானைக் ண்டதுவே
யானையதுவீரிட்டு அகங்காரமாயெழுந்து
தன்னிலைழலைப்பார்த்துத்தான் தரையில்நடக்குமது
கொம்பினுலேமலையைக் குத்திக்கிளப்பிற்று
கண்டுபயந்தார்கள் கட்டழகியப்பெண்களவர்
யானையைக்கண்டு அடிபணிந்துதெண்டனிட்டார்
கணையாழிமுன்போட்டு கன்னியர்களேதுசொல்வார்
அல்லிப்பெருமாளும் ஆரணங்குநாயகியாள்
நீ-தவசுபண்ணிபெற்றதொரு தையநல்லாளல்லியரும்
உன்னைக்-காணவிருப்பமாகிக் கலங்கித்தவிக்கிருளே
பாாக்கமனதாகிப் பதைத்துப்புலம்புகிருள்
போசனமுமுண்ணுமற் புலம்பித்தவிக்கிருள்காண்
உண்ணுளுடுக்காள் ஒருபோதும்நீராடாள்
படுக்கைபொருந்தாளே பத்தினியாளல்லியருந்
அழுதகண் ணுஞ்த்ந்தையாயழைத்தோடிவாருமென்ருள்
நீ-வாராமற்போனுல் மாண்டுமடிவேனென்ருள்
செத்துமடிந்து செலவழிந்துபோவேனென்ருள்
கடுடுவருகவென்று கட்டழகிதெண்டனிட்டாள்
கேட்டந்தமதயானை கொர்ச்சித்துத்தான்வருமாம்
யானைவரும்போது ஆரணங்குமாதர்களும்
தெற்குத்தெருகடந்து தேரோடும்வீதிவிட்டு
அல்லியம்மாள்தன்னருகே ஆரணங்குமோடிவந்தார்
யானைவருகுதென்று அடிபணிந்துதெண்டனிட்டார்
மகுடத்துரைச்சியவள் மாதுகன்னிதான்கேட்டு
கரும்புச்சுமைகளை கட்டுகட்டாய்வையுமென்ருள்
தென்னம்பட்டைவாழைபட்டை சீராகவையுமென்ருள்
பச்சரிசிதேங்காயும் பாங்கிகளேவையுமென்ருள்
ஐங்கலச்சாராயமும் அறுகலமெட்டிகொட்டை
ஏழுகலச்சாராயமும் எண்கலமெட்டிகொட்டை
கஞ்சாஅபினிகளுங் கடுகக்கொண்டுவாருமென்ருள்
இடிமருந்துபாஷாணம் இளங்கொடியேவையுமென்ருள்
கொண்டுவந்துவைத்தார்கள் கொம்பனையாள்முன்னுலே
வாழ்மதுரைப்பட்டணத்தில் மதயானைவருகிறதாம்

யானைவருகுதென்று அம்மதுரைபட்டணத்தார்
மதுரைக்குடிபடைகள் மாளிகையிற்போய் நுழைந்தார்
ஓடியொளிப்பார்கள் உத்தமர்களெல்லோரும்
அப்போதுமதயானை அகங்காரமெத்தகெஜம்
தெற்குத்தெருகடந்து தேரோடும்வீதிவிட்டு
கடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிவிட்டு
அல்லியம்மாள்தன்னுடைய அரண்மனையில்வந்ததுவே
யானையைக்காணவே அல்லியவளெழுந்திருந்து
மதயானைமுன்னேவந்து வணங்கியேதெண்டனிட்டாள்
யானைக்குமுன்பாக ஆகாரம்வைத்தார்கள்
வயிறுரவுண்டதுவே மயக்கம்பெரிதாச்சு
கண்கள்சிவந்தனவே கண்மயக்கங்கொண்டதுவே
அல்லிப்பெருமாளும் அடிவணங்கியேதுசொல்வாள்
நான்பிறக்கவேண்டுமென்று நல்லதவஞ்செய்தீரோ
நீ தவசுபண்ணிபெற்றமகள் தடுமாறிநிற்கிறேனே
அன்று ஏழுபிராயத்தில் எதிர்த்துவந்தநீன்முகனை
வெட்டித்தலையெறிந்து வீரபட்டங்கட்டிவந்தேன்
நீன்முகனைக்கொள்றயான் நீலிபட்டமாளுகிறேன்
வாடிபெண்ணேயென்பவர்கள் வையகத்திலாருமில்லை
அடியென்றழைத்தவர்கள் அவனிதனில்யாருமில்லை
ஆண்டியுடவாயாலே அலைச்சல்படுகிறேன்யாள்
சாதிகெட்டபண்டாரம் தாறுமாறாய்சொல்லுகிறான்
செப்பாதுஞ்செப்புகிறான் சென்மமூருருகுதம்மாள்
பொறுக்கமுடியவில்லை பெரும்பாவிசொன்னதெல்லாம்
கேட்டுமுடியவில்லை கெடுகாலன்சொன்னதெல்லாம்
செல்வங்குலைந்துதம்மா சீரழிந்துநின்றுவிட்டேன்
ஆண்டிதனைக்கொல்வதற்கு அழைப்பித்தேனுச்சியரே
அல்லியதுவார்த்தைகேட்க அகமிகுந்தகோபமதாய்
கண்சிவந்துகாட்டானை காளையரைக்கொல்வதற்கு
தும்பிக்கையைத்தூக்கியே சுழட்டியறையவரும்
முதுகில்மச்சரேகைகளும் முன்னழகுங்கண்டதுதான்
மச்சவடிவுகொண்டு மயங்கிற்றுயானையது
அருச்சுனனொருவனல்லால் அவனியிலேயாருமில்லை
மச்சரேகைபடைத்தவர்கள் மண்டலத்தில்யார்காணும்
வார்விஜயனல்லாமல் மண்டலத்தில்யாருமில்லை
தேவேந்திரன்மகன்காண் திருமாலின்மைத்துனர்காண்

திரௌபதையைமாலையிட்ட தோவிஜயனிவர்காணும்
அல்லியரைக்கன்னமிட ஆண்டிக்கோலமாகிவந்தார்
தையலரைமாலையிட சங்கமனைப்போலவந்தார்
மாதுகன்னி அல்லியற்கு வாய்த்தமணவாளனல்லோ
அல்லியற்குவத்ததொரு அழகுபுருஷனிவன்
மாப்பிள்ளையைக்கொல்லவோ மருந்திட்டாள்மாபாவி
கணவனைக்கொல்வதற்கு கடுகிமருந்திட்டாளே
அல்லிமொழிகேட்டு அருச்சுனரைக்கொன்றுவிட்டால்
ஆயன்பெருமாளும் அறிந்தாற்பழுதுவரும்
வீமனறிந்தாலே வெகுமோசம்நேர்ந்துவிடும்
அல்லியற்குவத்ததொரு ஆசைகணவனல்லோ
மகளாரைமாலையிட வையகத்தில்யாருமில்லை
செல்வமருமகன்றன் சேழியக்காரணமேன்
அருமைமருமகன்றன் அலைச்சல்படுவானேன்
தும்பிக்கையாலேதான் சுழற்றியெடுத்துக்கொண்டு
கும்பஸ்தனத்தில்வைத்து கூத்தாடும்யானையது
கண்டாளே அல்லியம்மாள் கடுகியேகோபமதாய்
மதயானைத்தான்மயங்க மருந்தறிந்தான்பாவியிவன்
காட்டானைத்தான்மயங்க கனமருந்தறிந்தவண்டி
என்னைமயக்கவகை யிவனறியமாட்டானோ
ஆாடிதாதியரே அடியுங்கள்யானைதன்னை
மாறியடியுமென்றாள் மதயானைதன்னையவள்
அப்போதுமத்தகஜம் அல்லியரைப்பார்த்துரைக்கும்
மாப்பிள்ளையும்நீயுமாக மணக்கோலம்வரும்போது
என்னையழைத்தாலும் வருவேனோவந்திழையே
வேண்டியழைத்தாலும் வருவேனோமெல்லியரே
என்றுநடந்தது இருண்டவனங்களுக்கு
மதயானைபோனபின்பு மாயவரேதுசெய்தார்
மான்செவியுங்கண்ணையும் மாயன்தெரியவைத்தார்
கண்ணுந்தெரிகிறதே காதிரண்டுங்கேட்கிறதே
அல்லிப்பெருமாளும் ஆரணங்குமேதுசொல்வாள்
பாங்கியிலும்நல்லவளே பவளசேனைநாயகியே
இந்தக்கிழவனைநான் என்செய்வேன்ஆச்சியென்றாள்
செல்வங்குறையுதடி சேடியரேஎன்செய்வேன்
பாங்கியிலும்நல்லவளாம் பவளசேனையேதுசொல்வாள்
பாண்டிப்பெருமானே பதறுதேசற்றேநில்லு

அறிந்துநான்வந்து ஆச்சியரேசொல்லுகிறேன்
தெரிந்துதான்வந்து செப்புகிறேனுங்களுக்கு
திடுக்கென்றெழுந்தேபவள சேனையும்வருகிறானே
சங்கமனருகில்வந்து தையலருமேதுசொல்வாள்
ஐயாபெரியவரே அறிவைப்படைத்தவரே
திரப்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
புதிதாய்த்தபசுபண்ணி புத்திமிகக்கற்றவரே
எங்கிருந்துவந்தீர்காண் இங்கேபுலம்புகிறீர்
எதுவகையாக இங்குவந்தீர்சொல்லுமையா
ஆர்காணும்ஆச்சியரே அருகில்வந்துகேட்கிறது
மல்லிகார்ச்சுனமிருந்து வந்தேனிதுவழியாய்
துங்கபத்ரிகோதாவரி துய்யகிருஷ்ணநதியுடனே
கங்கைசரஸ்வதியுங் காசிதீர்த்தமாடிவந்தேன்
பாராதஸ்தலங்களில்லை பணியாதகோவிலில்லை
முழுகாததீர்த்தமில்லை மிதியாதவனங்களில்லை
புண்ணியதீர்த்தமாடி போரேனம்மாராமேசுரம்
மதுரைநகரம்வந்து வைகைதீர்த்தமாடினேன்யான்
பிட்டுக்குமண்சுமந்த பித்தரையுந்தரிசித்தேன்
நூறுபதஞ்சென்றதம்மா நோக்குவாயென்வயது
தோலும்நரம்புகளுந் தொங்குதுபாரெந்தனுக்கு
இப்போதோபின்னேயோ இன்னமரைநாழிகையோ
எப்போதோஎன்சடலம் இறப்பதுயானறியேன்
அல்லிப்பெருமாளும் அரசாண்டநாயகியாள்
கன்னிகையென்றாகள் கட்டழகிமாதரைத்தான்
பத்தினியாளென்றிவளை பலபேர்சொன்னார்கள்
ஆகையினாலேதான் ஆரணங்கைத்தேடிவந்தேன்
எங்கள் மூப்பாட்டன்நாளையிலே தைந்தபழஞ்சோளி
அட்சரபாத்திரந்தான் அடிபீறலாச்சுதம்மா
சோளிக்குப்பழஞ்சேலை கேட்கவந்தேன்சுந்தரியே
உடுத்திக்கிழிந்திருக்கும் உள்ளாடையொருமுழந்தான்
எனக்கு தையலர்கையாலே தந்தாலேபோறேனம்மா
அவ்வார்த்தைதான்கேட்டு ஆரணங்குவந்துவிட்டாள்
அல்லியற்குத்தெண்டனிட்டு ஆரணங்குவதுசொல்வாள்
மகுடத்துரைச்சியற்கு மனக்கோபங்கொண்டதுதான்
ஐயாபெரியவர்மே லாயாசப்பட்டீரே
அவர் மூப்பாட்டன்நாளையில் தைத்தபழஞ்சோளியாம்

அக்ஷயபாத்திரந்தான் அடிபீரலாச்சுது
சோளிகைக்குப்பழஞ்சேலை கேட்கிறார்சுந்தரியே
பிச்சைகொடுத்தனுப்பும் போய்விடுவார்சுவாமியென்றாள்
அவ்வார்த்தைதான்கேட்டு அரசுதுரை நாயகியாள்
அறுபதுமுழப்புடவை அழகானபச்சைவடம்
எடுத்துக்கொடுங்களடி இடிவிழுவான்பாவியற்கு
நச்சுநச்சுஎன்கிறது நரைக்கிழவன்போராட்டம்
எப்போதான் தொலையும் எடுத்துப்போய்கைகொடென்றாள்
ஓட்டமும்நடையுமாக ஓடிவந்தார்தாதியர்கள்
பச்சைவடங்கொண்டுபோய் பண்டாரம்முன்புவைத்தார்
ஐயாபெரியவரே அறிவைப்படைத்தவரே
சோளிக்குப்பழஞ்சேலை சுந்தரியைக்கேட்டீரே
மூப்பதுமுழப்புடவை முன்னாலேவைத்தோமே
ஆரடியாச்சியரே ஆரணங்குநீகேளும்
இப்படிக்குவேண்டுமாகில் எனக்குக்கிடையாதோ
நாட்டிலே நான்குலக்ஷம் நமக்குக்கொடுப்பார்கள்
பத்தினியாள்கட்டினதோர் பாவாடைஉள்ளாடை
உள்ளாடைச்சேலையிலே ஒருமுழம்வேண்டுமென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லியருங்கோபமதாய்
இப்படிக்குபிச்சைகேட்டா ரிவ்வுலகந்தன்னிலுண்டோ
பாங்கியிலும்நல்லவொரு பவளசேனைவதுசொல்வாள்
ஆச்சியரேயுந்தனுக்கு அதனாற்பழுதுமில்லை
கொடுப்பதினாலேயம்மா குறைவொன்றும்வருவதில்லை
அழுக்கில்நசுங்கின ஆடைதந்தால்சேதமில்லை
கொடுக்காமற்போனாலவன் கொஞ்சத்திற்போவதில்லை
சனியன் தொலையவேண்டுஞ் சற்றேகொடுத்துவிடும்
அப்படிக்குநான்கொடுத்தால் ஆண்டியவன்போவானோ
கேட்டுவாதாதியரே கொப்பெனவே ஆண்டிதன்னை
பாங்கியிலும்நல்லவளாம் பவளசேனையோடிவந்தாள்
ஐயாபெரியவரே அறிவைப்படைத்தவரே
தீரப்படித்தவரே தெளிவறிந்தசங்கமரே
உள்ளாடைசீலையது ஒருமுழந்தந்தாக்கால்
போகிறீரோபெரியவரே புண்ணியரேசங்கமரே
ஆனாற்கேள் ஆச்சியரே அதிலுமொருவயுணம்
ஏந்திழைபிச்சைதந்தா லிருகையால்வாங்கிக்கொள்வேன்
தேன்மொழியாள்கைத்தலத்தை தீண்டியேநான்பிடித்து

அள்ளியேநீரிடுவேன் ஆனந்தவாழ்மாரியற்கு
இருகையினல்வாங்கி யேந்திழையாள்தரிக்கவேண்டும்
உவகத்திலுள்ளபடி உத்தமியேதப்பாது
அவ்வார்த்தைதான்கேட்டு ஆரனங்குதாதியரும்
மகுடத்துரைச்சியற்கு வந்தவளுந்தெண்டனிட்டாள்
ஆச்சியரேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
ஐயருக்குப்பிச்சையது ஆரணங்குதந்தபின்பு
உன்-கைத்தலத்தைத்தான்பிடித்து கடுகியேநீரிடுவார்
வாங்கித்தரித்துக்கொண்டால் வாழ்த்தியவர்போயிடுவார்
உலகத்திலுள்ளபடி உனக்குக்குறைவுமில்லை
தலையிலெழுத்திதுவோ தையலரேயென்தோழி
உடுத்தியசேலையது உள்ளாடைத்தான்கிழித்தாள்
இந்தாருஞ்சாமியென்று ஈந்தாளே அல்லியம்மாள்
வாங்கியந்தசங்கமனும் வாழ்வரசிமுகம்பார்த்து
அள்ளியேநீருமிட்டார் ஆரணங்குகைத்தலத்தில்
பத்தினியைவாழ்த்தியேதான் பல்லொளியைக்காட்டினர்
அடிவானமின்னலைப்போல் அல்லியற்குத்தோன்றிற்று
கண்டுமயங்கினள் கட்டழகிசோபமானள்
கட்டழகனர்சுனனுங் காற்ருய்ப்பறந்தானே
தெற்குத்தெருகடந்து சீரானகாட்டில்வந்தான்
மாயன்பெருமாளிடம் வந்துவிட்டானர்ச்சுனனும்
அல்லியதுவாசலிலே அதிசயங்களுள்ளதெல்லாம்
மாயனுடன்சொல்லியே மனஸ்தாபப்பட்டதுதான்
மாலைதரிப்பதெப்போ மனக்குறையைதீர்ப்பதெப்போ
கூடியணைவதெப்போ குறைகளெல்லாந்தீர்வதெப்போ
மன்மதபாணமது மார்புருகிப்போகுதென்ருன்
அப்போது அல்லியரும் அவள்சோபந்தீர்ந்தெழுந்து
ஆரடிதோழிகளே ஆயிரம்பேர்வாருமடி
ஆண்டியைத்தான்பிடித்து அதிவிரைவில்வாருங்கடி
ஆண்டியைக்கொண்டுவாரும் ஆக்கினைசெய்யவேண்டும்
பாங்கியிலும்நல்லவொரு பவளசேனையேதுசொல்வாள்
சந்திரனேசூரியனே சதுர்முகப்பிர்மாவோ
ஆதிபரமேஸ்வரர்தான் ஆண்டியைப்போல்வந்தாரே
எங்கேயென்றுதேடுவோம் இயலானசங்கமனை
போனலும்போகிருன் போவோமாண்மனைமில்

அல்லியரசைக்கூட்டியே அரண்மனையிற்போனார்கள்
மாளிகைவாசலது மண்டபம்போய்ச்சேர்ந்தார்

ஸ்ரீகிருஷ்ணபகவான் பாம்புப்பிடாரனைப்போலவும்
அருச்சுனன் பாம்பாகவும் வடிவங்
கொண்டு வந்தது.

அப்போதுபெருமாளும் ஆயரென்னவடிவுகொண்டார்
பாம்புப்பிடாரனைப்போற் பாரளந்தார்வடிவெடுத்தார்
தொண்ணூறும்பத்துஞ்சென்றதுவண்டகிழவனைப்போல்
பண்ணைப்பூப்போலே பழுத்தகிழவனவர்
பத்துவிதப்பாம்புகளைப் பாரளந்தாருண்டுபண்ணார்
வாள்விஜயனருச்சுனனை மாணிக்கப்பாம்பாக்கி
போர்விஜயராசாவைப் பொட்டியிலேதானடக்கி
மூப்பதுவிருதுகட்டி மூன்மகடிக்குழலெடுத்து
பாம்புபெட்டிக்காவடியைப் பாரளந்தார்தோளில்வைத்து
மகடிக்குழலூதி வருகிறாரெம்பெருமாள்
அல்லியவள்பிறந்த அழகானபொய்கையிடம்
ஆலமரத்தடியில் அரிராமாவந்தமர்ந்தார்
நடுகாட்டிடைச்சியர்கள் நானூறுகன்னியர்கள்
பாற்குடங்கள்தாமெடுத்துப் பத்தினிக்குக்கொண்டுவந்து
காரும்பசுபாலுங் கப்பணங்கட்டிவைத்தார்
ஆலமரனிழலிலே அல்லவரும்வந்தமர்ந்தார்
பெண்ணரசிமாதரெல்லாம் பிடாரனைக்கண்டார்கள்
ஐயாபெரியவரே அழகானபிடாரனே நீர்
எந்தவூரெந்தனாடு எங்கிருந்துவந்தீரையா
ஊரேதுபேரேது உத்தமரேசொல்லுமென்றார்
கொங்குமலையாளம் கொச்சிதேசமெங்களது
பாம்புபிடிக்கிறது பவனியாடிவைப்போமென்றார்
ஆனாற்கேளையர்வே அடியோமொருவார்த்தை
என்னென்னபாம்புவித மெடுத்துமெள்ள ஆட்டுமென்றார்
பசியாயிருக்குதம்மா பாமபாடமாட்டாது
ஐந்துநாளாச்சுதம்மா ஆகாரந்தான்புசித்து
போஜனங்களில்லாமல் புயங்களுமாடாதய்மா
பாலுங்குடித்தாலே பசியதுதீர்ந்தாலே
அப்போதுவிளையாடும் அழகானபாமபிதுதான்

பாற்குடங்களனைத்திலுமுள்ள பாலையெல்லாம்
பாம்புண்டது.

அவ்வார்த்தைதான்கேட்டு ஆரணங்குமாதரெல்லாம்
கொஞ்சம்பால்வார்க்கிறேம் குடிப்பியுமையாவென்ருள்
கண்பார்க்கக்குடியாது கட்டழகியிப்பாம்பு
சக்கத்திரைவளைந்து பாற்குடத்தைமுன்னேவைத்தால்
உண்டுபசியாறும் உத்தமியேயிப்பாம்பு
அத்தண்டபெண்களெல்லாம் அவ்வார்த்தைதான்கேட்டு
பாற்குடமுள்ளதெல்லாம் பால்திறந்துவைத்தார்கள்
சுற்றிலுந்திரைபோட்டு சீரானபாம்பைவிட்டார்
பக்கந்திரைபிடித்து பாம்புகளையுள்ளேவிட்டார்
ஆணலழகுமன்னன் அருச்சுனவீரியனும்
பாலைக்குடித்துவிட்டுப் பாலையுருட்டிவிட்டான்
திரையெடுத்தேபாத்துதிகிலடைந்தார் பெண்களெல்லா
ஐயோகோதெய்வமென் அடித்துகொண்டாரடிவயிற்றில்
பாவிகெடுத்தாயே பாலெல்லாம்போச்சுதடா
இத்தனைபாலையது என்னமாய்குடித்ததடா
அல்லியரிந்தாலெம்மை ஆக்கினைகள்செய்வாளே
தாமணிபோட்டல்லவோ தலையைத்தறிப்பாளே
கொல்லநினைப்பாளே குடிகேடுவந்திடுமே
ஆரடாபாதகனே அரிவுகெட்டபிடாரா நீ
கொஞ்சம்பால்குடிக்குமென்று குடமெல்லாம்வைத்தாயே
நரைத்தலையை நாய்பிடுங்க கிழத்தலைக்குகேடுவர
எம்மைக்கெடுத்தாயே எம்பாவங்கொண்டாயே
என்றுபுலம்பியே இளங்கொடிமாதரெல்லாம்
அழுதகண்ணுஞ்சிந்தையுமாய் ஆரணங்குபோகலுற்ருர்
அல்லியம்மாள்தன்வாசல் அரண்மனைபோய்ச்சேர்ந்தார்
அல்லியற்குமுன்வந்து அடிபணிந்துதெண்டனிட்டார்
ஆச்சியரேஎன்தாயே அதிசயத்தைநீர்கேளும்
மதுராபுரியருகே வைகைக்கரையோரம்
ஆலமரத்தடியில் அங்கேயொருகிழவன்
பாம்புப்பிடாரனவன் பாருலகில்யானறியேன்
பத்துவிதப்பாம்புகளிற் பஞ்சாத்தினப்பாம்பிதுதான்
சந்திரனைப்போலே தளும்புதேயென்னுச்சி

சூரியனைப்போலாக துலங்குதேயென்னுச்சி
வேற்றிபவளமது மின்னுகிறகாந்தியைப்போல்
மின்னற்கொடிபோலே விளங்குகிறதப்பாம்பு
பசியாயிருக்குது பால்வார்த்துப்போங்களென்றான்
பாற்குடத்தைகீழிறக்கிப் பாலதுவார்க்கவந்தேரும்
கண்ணாலேபார்த்தாக்கால் காண்டிப்பால்கிடியாதென்றான்
திரைபோட்டுவைத்தாலே சீராய்ப்பொசியுமென்றான்
பக்கதிரைப்போட்டு பாற்குடத்தைவைத்தோமம்மா
அத்தனைப்பாலேயுந்தான் அப்பாம்புவுண்டதம்மா
பாலைக்குடித்துவிட்டு பானையையுருட்டிற்றம்மா
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வாளல்லியம்மாள்
இந்தவதிசயத்தை யெங்குமறியேனடி

அல்லியரசானி பாம்புப்பிடாரனை வரவழைக்கச்

சொன்னது.

அரவமதைப்பார்ப்போம் அழையுங்கள்பிடாரனையும்
அந்தக்கிழவனையும் அழைத்தோடிவாருமென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டு அலங்காரத்தாதிகளும்
ஓட்டம்நடையுமாக ஓடிவந்தார்தாதிகளும்
ஐயாகிழவனாரே ஆச்சியழைக்கிறாள்காண்
பாம்புதனையாட்டிவைத்தாற் பாக்கியங்கள்தந்திடுவாள்
வேண்டுமென்றதிரவியங்கள்மெல்லியுந்தான்கொடுப்பாள்
வாருமையாவென்றுசொல்லி வருந்தினார்தாதியர்கள்
அப்போதுபிடாரனவன் அரீராமர்தானெழுந்து
காவடியைதோளில்வைத்துக் கடுகிவழிநடந்தான்
மகடிக்குழலூதி வந்துவிட்டார்தென்மதுரை
கடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிவிட்டு
அங்காடிவீதிகளும் அரண்மனைத்தெருகடந்து
அல்லியின்தன்கோட்டை அரண்மனைப்போய்புகுந்தான்
வாசலும்வாசற் படியேழுந்தான்கடந்து
சிங்காதனத்துக்கு முன்பாகவந்து நின்றான்
உத்தமியைக்கண்டவனுமொதுங்கியேதெண்டனிட்டான்
வத்துபணிந்தவனும் வணங்கியே நிற்கலுற்றான்
ஐயாபிடாரனே நீ அப்பாம்பையாட்டுமென்றாள்
வண்ணவிதப்பாம்பெடுத்துவகைவகையாயாட்டலுற்றான்

ஆடாதகூத்துகளை ஆட்டிவைத்தான்பிடாரனவன்
ஐயாகிழவனாரே அன்பானபிடாரனே நீர்
வேரீற்பவளம்போல் மின்னுகிறபெட்டியிலே
சந்திரபிரகாசம்போலே தளும்புகிறபெட்டியிலே
சூரியப்பிரகாசம்போல் துலங்குகிறபெட்டியிலே
என்னபாம்பிருக்கிறது எடுத்துநீயாட்டுமென்றாள்
ஆச்சியரே நீர்கேளும அடியேனொருவார்த்தை
என்னோடேதான்பிறந்த எனக்கிளையதங்கையவள்
தங்கைவளர்க்கிறது தயவானபாம்பிதுகாண்
எந்தபாம்பெடுத்தாலும் அந்தபாம்பெடுக்கமாட்டேன்
பெண்களைக்கண்டாளேபிரியமுடனோடிவரும்
மார்மேலும்தோள்மேலும் மடிமேலும்புரண்டாடும்
தோளின்மீதேறுமது தும்பிபறக்குமது
மார்பின்மேலேறுமது மடியிலிருக்குமது
முகத்தோடேமுகமணைத்து முத்தங்கொடுக்குமது
மார்பின்மேலேறியது மருவிவிளையாடுமது
கீதங்கள்பாடுமது கொண்டாடிக்குமது
ஆடாதகூத்துகளும் அரும்பவனியாடுமது
வெட்டும்பிளவெடுத்து மெத்தெனவேவாயிலிடும்
வெற்றிலைச்சுருளெடுத்து மெத்தெனவேதான்கொடுக்கும்
பஞ்சரத்னப்பாம்பிதுதான்பத்தினியேநானெடுக்கேன்
உன்னையேகண்டாலே ஓடிவந்துமடியிலேறும்
இந்தபாம்புநானெடுக்கேன் என்றானேபிடாரனவன்
ஆனாற்கேளையாவே அன்பானபிடாரா நீ
அப்பெரியபாம்பினது அதிசயத்தைப்பார்க்கவேண்டும்
சற்றேயெடுத்துவிடுஞ் சந்தேகப்படவேண்டாம்
உத்தமனேவேண்டுமென்ற வுச்சிதங்கள்யான்தருவேன்
மெத்தவருந்தினாள் மெல்லி நல்லாளல்லியரும்
அப்போதுபிடாரனவன் அப்பாம்பைதானெடுத்தான்
பெட்டிதிறக்கையிலே போனவாள்விஜயன்

அருச்சுனன் பாம்புருக்கொண்டு அல்லியரசாணி
யை மருவினது.

அல்லிமடிமேலே அருச்சுனனேறினனும்
மார்மேலுந்தோளின்மேலும் மருவிவிளையாடுகிறான்

முகத்தோடேமுகம்வைத்து முத்தம்கொடுக்கிருனே
போதும்பெருமாளே போய்வாருமென்றுசொன்னுன்
மாயனைக்கண்காட்டி வழிபிடித்துப்போங்களென்ருன்
தும்பிபறக்கிறதுஞ் சோர்ந்துவிளையாடுவதும்
கொண்டாணடிக்கிறதுங் கூத்துகளாடுவதும்
வெற்றிலைபாக்கெடுத்து மெல்லக்கொடுப்பதுவும்
பார்த்துமகிழ்ந்தாளே பத்தினியாளல்லியம்மாள்
கண்டுமகிழ்ந்தாளே கட்டழகியல்லியம்மாள்
ஐயாபிடாரனே அன்பாணமன்னவனே
இன்றிரவுஎந்தனிடம் இருக்கட்டுமிந்தபாம்பு
நாளைக்குவந்து நீ வாங்கிப்போபாம்பையென்ருள்
அவ்வார்த்தைகேட்டவனும் அன்புடனேதுசொல்வான்
என்னுடையதங்கையவள் இன்பமுள்ளநாயகியாள்
பஞ்சணைமெத்தையிலே படுத்திருக்கும்போதையிலே
கூடப்படுத்துக்கொண்டு குலாவுகிறபாம்பிதுகாண்
பக்கம்பிரிந்ததில்லை பத்தினியாள்தங்கையவள்
காணுமற்போனுல் கலங்கித்தவிப்பாலே
பாராமற்போனுல் படுக்கைப்பொருந்தாளே
உண்ணுள்குளியாள் உறக்கங்கள்வாராது
அல்லவென்றுன்னிடத்தில் ஆச்சிநான்விட்டுபோனுல்
பாம்புகரைந்துபோகும் பத்தினியேயென்னசெய்வேன்
அரைப்பலங்குறைந்திடுமே ஆச்சியரேயிப்பாம்பு
கரைந்துஉருகினுலும் கனகத்தருவேனடா
தராசுநிறையாக நிறுத்துப்போம்பாம்பையென்ருள்
அப்படியேசம்மதித்தான் ஆயன்பிடாரனவன்
எடுத்துதராசில்வைத்து இடைகண்டுதான்கொடுத்தான்
பாலும்பழங்களும் பசியாமல்வைபுமென்ருர்
நாளைவருகிறேன் நாயகமேபோகிறேன்யான்
பாஷையினுலேயவன் பார்த்திபனேதுசொல்வான்
எட்டுநாள்போனபின்பு இங்கேவாமைத்துனரே
இந்தவிசுவாசம் எனக்குத்தெரியுமென்ருன்
போங்காணுமென்று போர்விஜயன்தெண்டனிட்டான்
பாம்பைகொடுத்துவிட்டுப் பாரளந்தார்போய்மறைந்தார்
பாலும்பழங்களும் பாம்புக்குவைத்தார்கள்
பார்த்திபனருச்சுனனும் பசியாறித்தானிருந்தான்
அந்திகாலமாச்சுது ஆதித்தன்போய்மறைந்தான்

ஆதித்தன்போய்மறைய அல்லியம்மாளேதுசெய்தாள்
அந்தியனுஷ்டானம் அனைத்துங்கடன்கழித்து
செபதபங்களெல்லாஞ்செய்து கொண்டு அல்லியம்மாள்
சொக்கரைபூசைசெய்து செவியிலேபூச்சொருகி
பொஜனசாலையிலே போய்புகுந்தாளல்லியம்மாள்
சக்கரைப்போற்போஜனமும் சகலவிதக்கறியும்
உண்டுபசியாறி உத்தமியாள்கைகழுவி
பஞ்சணைமெத்தையது படுக்கையறைசோடியென்றாள்
தொழிமாரனைவோருந் திடுக்கென்றெழுந்திருந்து
கண்மூன்றுடையதொரு கனவயிரக்கட்டிலிட்டு
மெத்தைமடித்திட்டு மேலேயணைகோலி
காம்பரிந்தஜலங்கலப்பூ கட்டிலின்மேல்பரப்பி
தங்கத்தலையணையும் சாருமணையும்போட்டார்
ஒருகுதலையணையும் ஒய்யாரத்திண்டுவைத்தார்
அருகுதலையணையும் அலங்காரம்பண்ணினார்கள்
அத்தர்புனுகுகளும் அள்ளித்தெளித்தார்கள்
கதம்பமும்கஸ்தூரி கரைத்துத்தெளித்தார்கள்
சந்தனமும்பன்னீரும் சவ்வாதுந்தான்தெளித்தார்
சத்தனத்தூளோடு சாம்பிராணிப்புகைகொடுத்தார்
குத்துவிளக்குதனைக் கொழுந்துபடவேற்றினார்கள்
மாடங்கள்தோறுமங்கே மணிவிளக்கையேற்றினார்கள்
சன்னலிலேபனிநீரைச் சாடினாரெத்திசையும்
பஞ்சணைமெத்தையண்டை தம்பலவட்டில்வைத்தார்
மூத்துச்சுட்டசுண்ணும்பு மோராங்கிவெற்றிலையும்
ஆரங்கிபாக்குகளும் அழகுமஞ்சள்வெற்றிலையும்
காச்சா களிப்பாக்குங் கம்மாறுவெற்றிலையும்
வாகாச்சுருள்மடித்து மாணிக்கத்தட்டில்வைத்தார்
கிண்ணியிற்பாலும் கெண்டிகையிற்தீர்த்தம்வைத்தார்
சோடித்தோமாச்சியென்று தோழியருந்தெண்டனிட்டா
பாம்பெடுத்துமடியில்வைத்து பத்தினியாள்தானடந்தாள்
பஞ்சணைமெத்தையிலே படுக்கைதனிற்போயிருந்தாள்
மாணிக்கக்கதவடைத்து வயிரத்தாள்பூட்டினாளே
அத்தண்டதாதிகளும் அங்கங்கேபள்ளிகொண்டார்
பஞ்சரத்னபாம்பையும்பக்கத்தில்வைத்துக்கொண்டாள்
போஜனங்களுண்டுமவள்பள்ளிகொண்டாள்மலரணையில்
அப்போது அருச்சுனரும் ஆயனைத்தானினைந்து

மாயன்பெருமாளை மனதிலேதானினைந்து
என்-சோபந்தெளியவேண்டும் ஸ்ரீராமாதயவுசெய்யும்
காமவிகாரமதுகளை தீரவேண்டுமென்றான்

கிருஷ்ண பகவான் மூதேவியை அழைத்து அல்லியின்மேல் பிரவேசிக்கச்செய்தது.

அருச்சுனன்தன் துயரம் அறிந்தாரேஎம்பெருமாள்
சீதேவிமுன்பிறந்த திருவினையால்மூதேவி
மூதேவிநாயகியை முகிலவவண்ணர்தானழைத்து
மகுடத்துரைச்சியற்கு மாருதநித்திரையாய்
விடிந்துமொருசாமம் மெல்லிநித்திரைதெளியாமல்
அநந்தல்நித்திரைகொள்ளுமென்று அனுப்பினார்மாயவ
வந்துநிறைந்தாளே வளம்பெரியமூதேவி
ஆனந்தந்தெளியாமல் அசந்துநிததிரைபோகலுற்றான்
பாம்புவடிவுவிட்டு பார்த்திபனருச்சுனனும் [னும்
எப்போதும்போலாக யிளவிஜயன்ரூபமாகி
பரமனும்பார்வதியும் மருவியபாவனைபோல்
சிவனுடனேபார்வதியாள் சேர்ந்திருந்தபாவனைபோல்
தென்னரிராமருக்கு சீதைவந்துவாய்த்ததுபோல்
கந்தருடன்வள்ளியம்மை கலந்திருந்தபாவனைபோல்
சாரையுஞ்சர்ப்பமும் சருவிமயலானதுபோல்
மானுங்கலையும் மருவியணைந்ததுபோல்
கூடிமருவினான் குங்குமப்பூமெத்தையிலே
கண்ணாடிமேலேதான் கடுகுருண்டநாழியது
மல்லிகைப்பூமேலே வண்டுறைந்தார்போலாக
மருவியணைந்தானே மகாவிடாய்தீர்ந்தானே
ஆறாதசோபமெல்லாம் ஆற்றினானருச்சுனனும
தீராதசோபமெல்லாம் தீர்த்தானருச்சுனனும்
மங்கையரைப்புனலியே மருவினானருச்சுனனும்
வெள்ளிமுளைக்கும்போது விடிகோட்டான்கூவும்போது
பாம்புவடிவெடுத்துப் பக்கம்படுத்திருந்தான்
எப்போதுஞ்சர்ப்பம்போல்எழில்விசயன்வீற்றிருந்தான்
பொழுதுவிடிந்தது பொற்கொடிமார்கண்விழித்தார்
தோழிமார்தாதிமார் திடுக்கிட்டெழுந்திருந்தார்
அல்லிப்பெருமாளும் அசந்துநித்திரைபோகிறாள்

கொம்பனையைத்தோழிமார் கூவியெழுப்பினார்கள்
தட்டியெழுப்பினார்கள் தாமக்குழலாளை
பொட்டெனக்கண்விழித்து பொற்கொடித்தானெழுந்தா
அலைகுலையத்தலைகுலைய ஆடைகலைந்திருக்க
கதவைத்திறந்தாள் கட்டழகியல்லியம்மாள்
பாங்கியர்கள்சூழவே பவளசேனைவந்துவிட்டாள்
அல்லிப்பெருமாளை ஆரணங்கைத்தான்பார்த்தாள்
உற்றுற்றுப்பார்த்தவளும் உத்தமியைக்கேட்கலுற்றாள்
ஒருநாளுமில்லாத உச்சிதங்கள்காணுதம்மா
வாரிமுடித்ததலை மயிருங்கலைவதென்ன
கோதிமுடித்ததலை கூந்தற்கலைவதென்ன
மஞ்சளழிந்ததென்ன மார்பழிந்துபோனதென்ன
பொட்டுகலைந்ததென்ன பூவழிந்துபோனதென்ன
கண்ணிலிட்டமைகளெல்லாங்கரையவந்தகாரணமேன்
கோவைப்பழம்போலே குமறியசெவ்வுதடும்
குமரியசெவ்வுதடுங் கோதிருப்பானேன்
படுக்கைக்கலைவானேன் பஞ்சணைகலைவானேன்
காம்பரிந்தஐங்கலப்பூ கசங்கிநசுங்குவதேன்
மங்கையரேயுந்தனுக்கு வாட்டம்வந்தவாரேது
அல்லிப்பெருமாளும் ஆரணங்குமேதுசொல்வாள்
பிடாரனவன்சொன்னவார்த்தை பொய்யல்லதாதியரே
மனிதருடன்கூடவே மருவினபாம்பிதுகாண்
பஞ்சனைமெத்தையிலே பக்கத்தில்வைத்திருந்தேன்
ஏதாய்விளையாடிற்றோ இளங்கொடியேநானறியேன்
என்று-மந்தினமிதியடியைத் தொட்டுநடந்தசைந்தாள்
பூங்காவனத்திற்போய் புனல்கங்கைநீராடி
பாளைகொண்டுபல்விளக்கி ஓலைகொண்டுநாவழித்து
கன்னியிளங்கொடியாள் கமலமுகஞ்சுத்திசெய்து
வாயோடும்பல்லும் மதிமுகமுஞ்சுத்திசெய்து
சிவனுக்கருளென்று திருநீற்றுக்காப்பணிந்து
சிங்காரமெத்தையின்மேல்தேன்மொழியும்வந்தமர்ந்தாள்
ஆடிதாதிகளே அலங்காரத்தோழிகளே
பாம்புதனக்குப்பாலும் பழங்களும்வையுமென்றாள்
கொண்டுவந்துவைத்தார்கள் குடம்நிறைந்தபாலதுவை
மஞ்சாத்னபாம்பதுதான் பாலைக்குடித்ததுவே
அப்போதுபெருமாளும் ஆமாவர்தாமெழுந்து

பிடாரனைப்போகப் பெருமாளும்வந்துவிட்டார்
வாசலும்வாசலது படியேழுந்தான்கடந்து
அல்லிமுன்பாகவந்து அடிபணிந்துதெண்டனிட்டார்
ஆச்சியரே நீர்கேளும் அடியேனொருவார்த்தை
இப்பாம்புயில்லாமல் என்னுடையதங்கையவள்
அழுதகண்ணுஞ்சிந்தையுமாய் அமுதுண்ணமாட்டாதே
கண்ணீரைவிட்டவளுங் கலங்கியழுதாளே
கேளாதவார்த்தையெல்லாம் கேட்டேனேஉன்னாலே
உன்னாலேபட்டகளை உத்தமியேபோதுமம்மா
என்னுடையபாம்பிதுதான் எத்தனைகறைந்துபோச்சோ
எவ்வளவுநேர்ந்துதோ எடுத்தவா நிறுப்போமென்றார்
கொண்டுவந்து நிறுத்தார்கள் கொம்பனத்தாசதனில்
பாரங்குறைந்ததே பாம்புதட்வடமும்பிற்றே
அரைவாசிகரைந்ததம்மா அழகானபாம்பிதுதான்
இன்னம்ரெண்டுநாளிருந்தால் இங்கேதான்சாகுமம்மா
அறியாமல்விட்டுப்போனேன் அநர்த்தங்களாச்சுதம்மா
கொஞ்சமிடைக்குத்தான் கொண்டுவாரும்ரத்தினத்தை
வச்சிரமும்மாணிக்கமும் வைத்துஇடைகட்டினான்
பாம்பெடுத்துப்பெட்டியிலே பாளந்தான்வைத்தபின்பு

ஸ்ரீகிருஷ்ணபகவான் அருச்சுனனாகிய பாம்பை
யெடுத்துப் போனது.

பொகிறேனாச்சியென்று யோய்நடந்தான்பிடாரனவன்
கோட்டைகடந்தவரும் கொத்தளமுந்தான் தாண்டி
தெற்குதெருகடந்து தேரோடும்வீதிவிட்டு
ஆரணியந்தனிலே அரிராமர்வந்துவிட்டார்
ஆணலழகுமன்னன் அருச்சுனனேதுசொல்வான்
வாழ்வரசியல்லியரை மாலையிடுவதெப்போ
தாலிதரிப்பதெப்போ சாமிபெருமாளே
கட்டினவிருதருத்துக் கலியாணம் செய்வதெப்போ
என்றுதெளியுமோ எக்காலஞ்சென்றிடுமோ
அல்லிமேற்சிந்தையதாய் அலைகிறான் அர்ச்சுனனும்

## ஸ்ரீகிருஷ்ணபகவான் மறுபடியும் மிருகங்களை உண்டுபண்ணினது.

அன்றுபோய்மற்றொருநாள் அரிராமரேதுசெய்தார்
மாயமிருகங்களை வனத்திலேயுண்டுபண்ணார்
காட்டானைசிங்கங்களும் காடிபுலியாளிகளும்
ஏனங்கடம்பைகளும் இயலானமிருகங்களும்
புள்ளிமான்முள்ளம்பன்றி புனுகுபூனைமுயல்களுடன்
மயிலுங்குயிலினமும் வண்ணவண்ணப்பட்சிகளும்
அனந்தமானமிருகமெல்லாம் அரிராமருண்டுபண்ணார்
மதுரைக்குடிபடைகள் வனத்தில்வா அஞ்சுகிறார்
கண்டவரையெதிர்க்கிறது காட்டானைசிங்கங்களும்
ஓடிப்பதுங்கியே ஒளிப்பார்கள்சனங்களெல்லாம்
அழுதுபுலம்பியே அல்லியண்டைஓடிவந்தார்
அழுதகண்ணுஞ்சிந்தையுமாய் அனந்தம்பேர்புலம்புகிறார்
இத்தனை நாள்பிழைத்தோம் இடுக்கமில்லாதிருந்தோம்
என்னகுறைசெய்தோமோ எங்கள்மிருகமது
நண்ணித்துரத்துதம்மா நாடனைத்தும்காடிபுலி
எந்தவிதம்பிழைத்து இடுக்கமில்லாதிருப்போம்
மிகுந்தபன்றிமானினமும் விம்மித்துரத்துதம்மா
வேறொருதேசத்திலே வேலைசெய்துய்வோமென்றார்
மிகுந்தமிருகங்களால் வேதனைகளாகுதம்மா
மற்றொருதேசம்போய் மறைந்துபிழைப்போமென்றார்
அவ்வார்த்தைதான்கேட்டு அலங்காரத்தாதியர்கள்
அல்லியம்மாள்தங்களுக்கு அறிக்கையிட்டாரோடிவந்து
மகுடத்துரைச்சியவள் வார்த்தையதுகேட்டு
வேட்டைக்காரபெண்களை விரைந்தழைத்துவாருங்கள்
குறவர்மறவர்களைக் கூட்டிவாருந்தாதியென்றாள்
வில்லியப்பெண்களை நீர் வேட்டைக்கழையுமென்றான்
இனிமொழியாள்தன்வார்த்தை கேட்டந்தத்தாதியர்கள்
ஓட்டம்நடையுமாக ஓடியேதேடிவாரார்
கடையுங்கடைத்தெருவுங் கடந்தந்தத்தோழியர்கள்
வேட்டைக்காரப்பெண்களை விரைந்து அழைத்தார்கள்
வேட்டைக்குவருவோமென்று மெல்லியர்வருகிறார்கள்

காற்செருப்புந்தோற்குல்லாவும் கையில்சில்லாக்கோலும்
இரட்டைகுண்டுதுப்பாக்கி இருதோளும்வைத்தார்கள்
பன்றிகுத்தும்பல்லயங்கள் பாங்குகளுந்தானெடுத்தார்
கத்தியுங்கேடயமுங் கையிலெடுத்தார்கள்
பல்லயங்கள்மான்வலையும் பாங்குகளுந்தானெடுத்தார்
சிறுஉண்டைசுண்டுவில்லும் சிங்காணிவில்லெடுத்தார்
வேடப்பெண்களுள்ளவர்கள் விருதுகட்டிவருகிறார்கள்
வெள்ளித்தமுக்கடித்து வெண்கலக்கொம்பூதிவந்தார்
பொன்னின்தமுக்கடித்து புறப்பட்டார்வேடப்பெண்கள்
வேட்டைநாயுஞ்சங்கிலியும் விருதுகட்டிவருகிறார்கள்
கருநாயுஞ்சங்கிலியும் கழுத்திற்பூட்டிவருகிறார்கள்
அல்லியம்மாள்வீதியிலே அல்லோரும்வந்துநின்றார்

அல்லியம்மாள் மறுபடியும் இரண்டாந்தடவை

வேட்டைக்குப்போகிறது.

ஐயாயிரந்தோழியர்கள் அடங்கலும்பயணமென்றாள்
பல்லக்கைசோடியென்றாள் பத்தினியாளல்லியரும்
கனகதண்டிசோடித்து கன்னியர்முன்னேவைத்தார்
பாண்டியப்பெருமாளும் பல்லக்கிலேறினாள்
ஏறினாள்கனகதண்டி எடுத்தார்கொடிவிருது
ஆயிரம்பெண்கள் அஸ்வத்திலேறினார்கள்
பாராசாரிபுரவியது பஞ்சக்கலியாணியது
தேசியென்னும்புரவி சீவரத்னக்குதிரையொன்று
விடுகுதிரைசோடித்து மெல்லியர்கள்கொண்டுவந்தார்
யானைமேற்பேரிகைதான் அடிபடுதேகுமுகுமென்று
வெண்கலப்பேரிகைகள் விருதுமுழங்கிறதே
முழங்கிறதேமேளங்கள் மும்மண்டலமசைய
மதுரைத்தெருக்களெல்லாம் மண்தூளெழும்பிற்றே
மதுரைத்தெருக்கடந்து வனகாட்டில்வருகிறார்கள்
காடுசெடிபுகுந்து கனவேட்டையாடுகிறார்
கனகதண்டிவிட்டிரங்கி கட்டழகியல்லியம்மாள்
ஏறினாள்பிரவியின்மேல் எடுத்தாளேயம்புவில்லு
தட்டினாள்புரவிதன்னைச் சாரவிட்டாள்கானகத்தில்
வளைத்தாளேவில்லதனை வாங்கிவிட்டாள் அஸ்திரங்கள்
இழுத்துவிட்டாள்பாணந்தன்னை இயமகிரிநடுங்க

தொட்டாளேவில்லதனைச் சொரிந்தாளேபாணங்களை
காட்டானைசிங்கங்களை கண்டுதுரத்தலுற்ருள்
புலிகள்காடிகளைப் போடுகிருள்பாணங்களால்
கலைமானும்பன்றிகளைக் கண்டகண்டமிருகங்களை
மட்டில்லாமிருகங்களை வதைசெய்துபோட்டிடுவாள்
புள்ளிமான்தன்னைக்கண்டு போட்டாளிரண்டுதுண்டாய்
மதயானைமிருகங்களை மண்டிபோட்டுக்கொல்லுகிருள்
அநேகமிருகங்களை அதமாக்கிப்போடுகிருள்
மாயன்பெருமாளும் மலைசோகியேதுசெய்தார்
அந்தவனந்தனிலே அதிகசலமில்லாமல்
தண்ணீர்கிடையாமல் சாமியவருண்டுபண்ணுர்
அல்லிப்பெருமாட்கு அதிகதாகமுண்டுபண்ணா
தண்ணீர்களையல்லவோ தாகவிடாயாகிறது
நெஞ்சுலர்ந்துபோகிறதே நினைவுதப்பிப்போகிறதே
உண்ணுக்குத்தொண்டையது உலர்ந்துலர்ந்துபோகிறது
காதையடைக்கிறதே களையாய்வருகிறதே
தண்ணீர்களையாலே தான்விழுந்தாள்பூமியிலே

அருச்சுனன் காசிப்பிராமணனுய்வந்து அல்லியற்கு

காசிதீர்த்தம் வார்த்தது.

காண்டீபனருச்சுனன்தான் காசிப்பிராமணன்போல்
காசிப்பிராமணன்போல் கடுகிவடிவெடுத்தான்
தொண்ணூறும்பத்துசென்ற துவண்டகிழவனைப்போல்
நாணற்பூப்போலே நரைத்தகிழவனுக
காசிநல்லதீர்த்தமது காவடியைத்தோளில்வைத்து
மூர்ச்சைபோல்விழுந்தாளே மொய்குழலாலல்லியம்மாள்
அந்தவழியாக அர்ச்சுனனுந்தான்வந்தான்
பிராமணனைக்கண்டார்கள் பொற்கொடிமார்தோழியர்கள்
ஐயாபெரியவரே அழகானவேதியரே
மெத்தப்பெரியவரே மேல்நாட்டுவேதியரே
பாருலகையாளுமொரு பத்தினியாளல்லியம்மாள்
தண்ணீர்களையாகிச் சாய்ந்துவிழுந்தாளே
தாகவிடாய்ப்பிடித்து தண்ணீர்சோபமானுளே
காதையடைத்தவளும் களைத்துவிழுந்தாளே
காசிதீர்த்தம்வாருமையா களைகள்தெளியவென்ருள்

புண்ணியமாய்ப்போகுதையா பிராமணரே தீர்த்தம்விடும்
என்றதுகேட்டுமவன் இறக்கினான்காவடியை
இறந்தானேகாவடியைத் தீர்த்தகுப்பிதானெடுத்தான்
மாதுகளைதெளிய வார்க்கலுற்றான் தீர்த்தமதை
தாகந்தெளிவதற்குத் தண்ணீருந்தான்கொடுத்தான்
களைகள்தெளிந்தாளே கட்டழகியல்லியம்மா
கடுகியந்த அர்ச்சுனனும் காவடியைததோளில்வைத்து
காற்றாய்ப்பறந்தானே கரியமாலருகில்வந்தான்
மாயன்பெருமாளே வார்த்தையொன்றுநீர்கேளும்
களைபட்டிருந்தாளே கன்னிநல்லாளல்லியரும்
தண்ணீரையான்கொடுத்து தாகவிடாய்தீர்த்துவந்தேன்
மாலைதரிப்பதெப்போ மணமுகூர்த்தஞ்செய்வதெப்போ
தாலிதரிப்பதெப்போ சாமிபெருமாளே
என்றுதெளியுமோ எக்காலஞ்சென்றிடுமோ
அல்லிமேற்சிந்தையா யலைகிறானருச்சுனனும்
மாதுமேற்சிந்தையாய் மயங்குகிறானர்ச்சுனனும்
மாயன்பெருமாளும் மலைராமரென்னசெய்தார்

கிருஷ்ணபகவானும் அருச்சுனனும் மாது

வேடங்கொண்டு தண்ணீர்ப்

பந்தல் வைத்தது.

அத்துவாலகானகத்தில் ஆரணியந்தன்னிலேதான்
தண்ணீர்ப்பந்தல்போடுகிறார் சாமிபெருமாளும்
முன்னாலேவெந்நீரும் மோருகளும்வைத்தாராம்
கொள்ளுதண்ணீர்வைத்தாராம் குளிர்ந்தசலம்வைத்தார்
தண்ணீர்பந்தல்வைத்தபின்பு சாமியென்னவடிவெடுத்தா
தெய்வப்பிராமணத்தி சிறுபெண்வடிவெடுத்தார்
காய்க்கும்பிராயமவள் கன்னிகட்டுங்காலமவள்
பூக்கும்பிராயமவள் பிஞ்சுவிடுங்காலமவள்
கொஞ்சம்வயதுகாண் கொழுந்தெல்லாம்பிஞ்சுகண்டாய்
சாலையிலேசந்திரனைச் சாய்த்தடியடித்ததுபோல்
சோலையிலேசந்திரனைச் சுற்றிப்பிடித்ததுபோல்
ஏழத்துத்தச்சனவன் எழுதிவாவிட்டதுபோல்
மேல்நாட்டுத்தச்சனவன் வளைந்துவரவிட்டதுபோல்

வேரிற்பவளமது மின்னுகிறகாந்தியைப்போல்
மின்னற்கொடிபோலே மேகவண்ணர்வடிவெடுத்தார்
அழகுகுலுங்கிறது ஆனந்தங்கொஞ்சுறது
வடிவுகுலுங்கிறது மாணிக்கம்கொஞ்சுறது
இந்தவிதமாக எம்பெருமாள்வடிவெடுத்தார்
அருச்சுனராசதுரை அவனென்னவடிவானன்
தொண்ணூறும்பத்துஞ்சென்ற துவண்டகிழவனானன்
பண்ணைப்பூபோலே பழுத்தக்கிழவனானன்
நாணப்பூபோலே நரைத்தகிழவனானன்
தோலும்நரம்புகளுந் தொங்கிற்றுகிழவனுக்கு
ஒருகண்ணு நொள்ளைக்கண்ணு ஒருபக்கங்கோணல்வாயும்
ஒருகாலுநொண்டிகாலாம் ஒருகையுங்கோணக்கையாம்
இந்தவிதமாக இளவிஜயன்வடிவெடுத்தான்
தண்ணீர்பந்தலுள்ளாகத் தாமிருந்தான்வேதியன்போல்
பிடிசெம்புகைப்பிடித்து பிராமணத்திமுன்னிருந்தாள்
அல்லிப்பெருமாளும் அனந்தமானசேனைகளும்
அத்துவானகானகத்தில் அந்தவழிவருகிறார்கள்
மிருகவேட்டையாடியே வெளிப்பட்டுவருகிறார்கள்
தண்ணீர்ப்பந்தல்வழியாகத் தையலருமுன்னேவந்தாள்
கண்டார்கள்தண்ணீர்ப்பந்தல் கன்னியுள்ளேவந்தாளாம்
வந்துஇறங்கினார்கள் மகாசேனையுள்ளதெல்லாம்
அத்தண்டசெனங்களுந்தான் அல்லவருந்தாகமுண்டார்
தண்ணீர்களைகளுமே தாகந்தெளிந்தார்கள்
அல்லிபெருமாட்கு ஆசனமும்போட்டார்கள்
ஆசனத்தின்மேலாக அமர்ந்தாளேயல்லிநல்லாள்
பிராமணக்கன்னியரைப் பெண்ணரசைத்தான்பார்த்து
யார்காணும்மாதரசே யலங்காரப்பெண்ணரசே
எந்தவூரெந்ததேசம் எங்கிருந்துவந்தீர்காண்
அத்துவானகானகத்தில் யார்வைத்தார்தண்ணீர்ப்பந்தல்
இந்தவனத்திலே எவர்வைத்தார்தண்ணீர்ப்பத்தல்
பிராமணப்பாவை பெண்ணரசியேதுசொல்வாள்
என்-பாவம்பெரிதுகண்டீர் பத்தினியேஎன்னசெய்வேன்
தெய்வலோகம்வாழுகின்ற தெய்வப்பிராமணத்தி
தான்வாழும்பெருமைகளும் மகிழ்ச்சிகளுமெத்தவுண்டு
ஆண்டிபாதேசி அமுதுக்குவந்தார்கள்
அள்ளிப்பதையிட்டு அநியாயம்பண்ணதோஷம்

சாணிதிரட்டிவந்து சாணங்கள்போட்டதோஷம்
ஆதிசிவன்சந்நிதிமுன் அழகாய்வளர்ந்ததுகாண்
மகாதேவர்சந்நிதிமுன் மலையாய்வளர்ந்ததுகாண
சாணிமலையதுதான் சமர்த்தாய்வளர்ந்ததுகாண்
பிட்டுத்திருநாளுக்குப் புறப்பட்டார்மகாதேவர்
முப்பத்துமுக்கோடி முனிவர்களுந்தேவர்களும்
வானவருமிந்திரும் மகாதேவர்தான்முதலாய்
கைலாயஞ்சுற்றியே கடவுள்வருகின்றபோது
சாணிமலையைத்தான் சங்கரனார்கண்டுவிட்டார்
என்னாலேவந்ததொரு இடறதனைத்தாமறிந்தார்
பொல்லாதசாபமிட்டுப் பூமியிலேபோங்களென்றார்
சாபந்தொலைவதற்குத் தண்ணீர்பந்தல்வைத்தேனம்மா
அண்ணனில்லைதம்பியில்லை அரியமனிதரில்லை
தாய்வீட்டுசனங்களில்லை தாபரிக்கமனிதரில்லை
மாமிவீட்டுசெனங்களில்லை மற்றும்மனிதரில்லை
தாங்கிநுழைவதற்கு தாழ்வாரமில்லையம்மாள்
எட்டிநுழைவதற்கு எரவாணமில்லையம்மாள்
வாவென்றழைப்பதற்கு மனிதரொருவரில்லை
தோலும்நரம்புகளும் தொங்குகிறகிழவனுக்கு
மாளுங்கிழவனுக்கு மாலையிட்டேனென்னாச்சி
இந்தக்கிழவனும் இறந்துமடியவில்லை
பாவந்தொலையவில்லை பத்தினியேயென்னசெய்வேன்
ஏவல்பணிகள்செய்து எங்கேயாகிலும்பிழைப்பேன்
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லியம்மாளேதுசொல்வா
எந்தனுக்குத்தோழியாய் என்னருகில்நீயிருந்தால்
சகலமானபாக்கியமுஞ் சம்பத்துந்தருவேனென்றாள்
கூடவருவாயோ கொம்பனையேயென்றழைத்தாள்
எப்படிவருவேனம்மா இளமயிலேயுன்பிறகு
லட்சுமிநோன்பதுதான் நாளைக்குவருகுதம்மா
விரதநோம்புதான்முடிய வேண்டுமெந்தன்தாயாரே
என்றைக்குமுன்னடிமை யாகவிருக்கிறேன்யான்
மருடத்துரைச்சியவள் மாதருமேதுசொல்வாள்
எந்தனரண்மனையில் உந்தனதுநோன்புதனை
குறையாமற்செய்துவைப்பேன் கொம்பனையேயென்னாச்சி
வேண்டுமென்றசாமான்கள் மெல்லியரேநான்தருவேன்
வாருமம்மாவென்றுசொல்லி வருந்தியழைத்தாளே

இந்தமுடத்தையும்நானெங்கேபோட்டுவருவேனம்மா
டோலியிலேபோட்டு தூக்கிவரச்சொல்லுமென்ருள்
பல்லக்கின்மீது பத்தினியாளேறிஞளாம்
கிழவனைத்தூக்கிவந்து டோலியிலேபோட்டார்கள்
தோழிமார்தாதிமார் தூக்கியெடுத்தார்கள்
காடுசெடிகள்தாண்டி கடுகிவருகிருர்கள்
ஆறுசுனைகள்தாண்டி அதிகவனங்கடந்து
மதுராபுரிபட்டணத்தில் மகிழ்ச்சியுடன்வந்தார்கள்
தெற்குத்தெருகடந்து தேரோடும்வீதிவிட்டு
மாளிகைவாசலிலே வந்தாளேயல்லியம்மாள்
கனகதண்டிவிட்டிறங்கி கன்னியரும்போகலுற்ருள்
இந்தக்கிழவனை இவ்வாசல்வையுமென்ருள்
ஐந்துகட்டுவாசலிலே ஆரியனைவையுமென்ருள்
அப்போதுபிராமணத்தி அரிராமரேதுசொல்வார்
தனியேவிட்டுப்போகவே தரிக்குமோவென்மனது
முடவனைவிட்டுவிட முறையல்லவெந்தனுக்கு
அவராலேஎன்னகுற்றம் ஆச்சிவாட்டுமென்ருள்
அல்லிப்பெருமாளும் அரண்மனையிற்போய்புகுந்தாள்
முத்துசெம்பொன்வாசலது மூன்றுகட்டுந்தான்கடந்து
ஆசாரவாசலது அரண்மனையிற்போய்ச்சேர்ந்தாள்
அந்தியனுஷ்டானம் அனைத்துங்கடன்கழித்தாள்
போசனசாலையிலே புகுந்தாளேமாதுகன்னி
பிராமணக்கன்னியற்கும் பின்னவள்புருஷனுக்கும்
அமுதுபடிகாய்கறியும் அவர்க்குகொடுங்களென்ருள்
அந்திகாலமாச்சுது ஆதித்தன்போய்மறைந்தான்
போசனங்களுண்டு பூவைமார்பள்ளிகொண்டார்
மற்ருநாட்காலமே வானிரவிவந்துதித்தான்
திங்கட்கிழமையது தசமிபுநர்பூசம்
அன்றையதினத்திலே அரிராமரேதுசொல்வார்
அல்லிப்பெருமாளே அரசுதுரைநாயகமே
என்விரதம்முடியவேண்டும் இன்றுநோன்புதீரவேண்டும்
சாலுங்காகமும் தையலரேவேண்டுமம்மா
பெரியமுள்ளசாமானை பிராமணத்திவாங்கிக்கொண்டாள்

## அருச்சுனன் அல்லியம்மாளைச் சூதாகத்தாலிகட்டி விருதறுத்துப்போனது.

பந்தற்கால்நாட்டியே பந்தலலங்கரித்தார்
பச்சோலைப்பந்தலது பாங்காய்யலங்கரித்தார்
நிலத்தைமெழுகியே நிலக்கோலமிட்டார்கள்
சாலுங்கரகமுஞ் சதுராய்நிறுத்தினார்கள்
பாலிகைகளைவைத்தார்கள் பாங்காய்முளைதெளித்தார்
அரசாணிக்கால்நாட்டி அம்மிகுழவிவைத்தார்
அந்திகாலமாச்சுது ஆதித்தன்போய்மறைந்தான்
ஆயிரம்பெருவிளக்கு அங்஗னமேயேற்றிவைத்தார்
குத்துவிளக்குங் குடவிளக்குமேற்றிவைத்தார்
மாடவிளக்கும் மணிவிளக்குமேற்றிவைத்தார்
மாயன்பெருமாளும் மலைராமரேதுசெய்தார்
அத்தண்டதோழிகட்கும் அல்லிப்பெருமாட்கும்
மயக்கத்தை யுண்டுபண்ணூர் மாயன்பெருமாளும்
மூதேவிதனையழைத்து முகத்தில்நிறையுமென்றார்
வந்துநிறைந்தாளே வாடையிட்டாள்மூதேவி
சுற்றிநிறைந்தாளே சூழ்ந்தாளேமூதேவி
சொரணைதப்பித்தோழியர்கள் சோர்ந்துபடுத்தார்கள்
அப்போதுபெருமாளும் அருச்சுனனைத்தானழைத்து
ஓமம்வளர்த்துமென்றார் உலகளந்தபெருமாளும்
வேதங்கள்தப்பாமல் வேள்விவளர்த்தினனே
ஆயன்பெருமாளும் அருளாளரேதுசொல்வார்
தேவேந்திரபகவானைச் சிந்தையிலேதானினைத்தார்
அருச்சுனராசனிவன் அல்லியைமணம்பொருத
மணமுகூர்த்தஞ்செய்வதற்கு மங்கிலியம்வேண்டுமையா
யானைத்தலைபோலே அழகானமங்கிலியம்
தும்பிக்கைபோல திருமங்கிலியச்சரடும்
மாயத்திருநீறும் வரவனுப்பவேண்டுமென்றார்
இந்திரனுமப்போது இருதயத்திற்றானந்து
உள்ளமகிழ்ந்தவராய் உம்பர்பிரானிந்திரனும்
யானைத்தலைபோலே அழகாந்திருமங்கிலியம்
தும்பிக்கைபோலதிரு மங்கிலியசசரடும்
மாயத்திருநீறும் மகிழ்ச்சியுடன்தானெடுத்து

தூதன்கையிற்கொடுத்து சுவாமியின்கைகொடென்றார்
வாங்கிவந்து தூதனவன் மாயவனார்கைகொடுத்தான்
ஆயரவர்வாங்கி அருச்சுனன்கைகொடுத்தார்
லக்கினந்தப்பாமல் நல்விசயன்கைகொடுத்தார்
தாராபலன்பார்த்துத் தரியுமென்றுமங்கிலியம்
மாயனதுதன்பாதம் வணங்கியந்த அருச்சுனனும்
ஈஸ்பரரைப்பார்வதியை இருதயத்தில்தானினைந்து
பிட்டுக்குமண்சுமந்த பெம்மானைத்தானினைந்து
தேவேந்திரனையுஞ் சிந்தையிலேதானினைந்து
அல்லிப்பெருமாளாம் ஆரணங்குதன்கழுத்தில்
சிவசிவாவென்றுசொல்லி தேர்விசயன்கட்டலுற்றான்
ஆகாகாவென்றுசொல்லி அழுத்தினான்மங்கிலியம்
பிரமமுடிமூன்றுமுடி போட்டானேயருச்சுனனும்
ஈஸ்பரனார்வெண்ணீற்றை இட்டானேநெற்றியிலே
மாயன்பெருமாளும் வாவென்னகொடுத்தாராம்
இந்த-மங்கிலியந்தன்னையவள் வாள்கொண்டறுத்தாலும்
கோடாலியாலேயிவள் கொத்திப்பிளந்தாலும்
ரம்பத்தைப்பூட்டியவள் கொத்திப்பிளந்தாலும்
கத்திகொண்டறுத்தாலுங் கட்டழகிமங்கிலியம்
அருமலிருக்கவென்று அட்சயவரங்கொடுத்தார்
மாயத்திருநீறும் மந்திரித்துப்போட்டுவிட்டார்
அருச்சுனரைக்கூட்டிக்கொண்டு அரிராமர்தானடந்தார்
பத்துசுற்றுகோட்டைகளும் பார்த்திபன்தாண்டிவந்தான்
மஞ்சட்கொடிகளும் மகுடநல்லதோரணமும்
பொம்மைத்தலைகளும் பூதநல்லவிருதுகளும்
அல்லிக்கொடிவிருதை அருத்தெரிந்தானருச்சுனனும்
முச்சுகொட்டாகொடிவிருதை முனைவீரனறுத்தெரிந்தார்

கிருஷ்ணபவானும் அருச்சுனனும் தருமாபுரம் வந்துசேர்ந்தது.

வீராதிவீரன்தம்பி விசயன்வெளியானான்
மாயனுந்தானுமாக வழிநடந்துபோனார்கள்
மதுராபுரிகடந்து வனமாய்வனங்கடந்து
காடுசெடிகள்தாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தாண்டி

பொல்லாதவனந்தாண்டி போய்ச்சேர்ந்தாரிருவருமாய்
மாளிகைவாசலிலே வந்துசேர்ந்தாரிருவருமாய்
பொற்கோழிகூவியல்லோ பொழுதுவிடிந்ததுகாண்
சுக்கலாதேவிபுத்திரன் சூரியனும்வந்துதித்தான்
அருணனுடன்தேரேறி ஆதித்தன்வந்துதித்தான்
தோழியருந்தாதியரும் தூக்கம்விழித்தார்கள்
அத்தண்டதோழியரும் அனைவோருங்கண்விழித்தார்
பாங்கியிலும்நல்லதொரு பவளசேனைகண்விழித்தாள்
அல்லிப்பெருமாளின் அருகாகவந்தார்கள்
தட்டியெழுப்பினர் தாமக்குழலாளை
பொட்டெனக்கண்விழித்தாள் பொற்கொடியல்லியரும்

அல்லியரசாணி மங்கிலியத்தைக் கண்டு
பாதவிக்கிறது.

கழுத்திலேமங்கிலியம் கண்டாளேயல்லியம்மாள்
அத்தண்டதோழிகளும் அனைவோரும்பார்த்தார்கள்
மூடாப்போலேதாலியது மூன்மார்பில்தொங்கிறதே
கடுகஇடிவிழுந்தாள் கட்டழகியல்லியம்மாள்
பார்த்துப்பதங்குலைந்தாள் பத்தினியாளல்லியம்மாள்
இங்கிருந்தபார்ப்பாத்தி எங்கேபோனாள்பாருமென்றாள்
தேடிப்பிடித்துநீங்கள் சீக்கிரமாய்வாருமென்றாள்
எங்கெங்குந்தேடினார் இனியவிடமாராய்ந்தார்
தேடியலைந்தார்கள் திசையெட்டுங்கண்டதில்லை
வாடியலைந்தார்கள் வந்துசொன்னார்தாதியர்கள்
தேடியலைந்தோமென்றார் திசையெட்டுங்காணோமென்று
ர், வாடியலைந்தோமென்று வந்துசொன்னாரல்லியண்டை
எண்ணாதவெண்ணமெண்ணியிடிவிழுந்தாளல்லியம்மாள்
கத்தியெடுத்தாடி கடுகஅறுக்கவென்றாள்
கத்திகொண்டறுத்தாளே காரிழையாளல்லியம்மாள்
கத்திகொண்டறுத்தாலும் கத்திமடியுதங்கே
ரம்பங்கொண்டறுத்தாலும் நாலுதுண்டாயாகுதங்கே
வாள்கொண்டறுத்தாலும் வாளுமொடியுதங்கே
மெத்தவிசாரமிட்டு மெல்லிபுலம்பலுற்றாள்
கட்டினவிருதறுத்துக் கழுத்தில்தாலிகட்டினதார்
யாரென்றறிவேன் ஆரணங்கேபவளசேனை

எவரென்றுயானறிவேன் ஏலப்பசுங்கிளியே
ஆறுயிரம்பாண்டியரை அழைத்தோடிவாருமென்றாள்
பொன்னின்மலைநாடாளும் பேரெடுத்த அண்ணரையும்
அழைத்தோடிவாருமென்று அனுப்பினாள் தாதியரை
ஓட்டம்பெருநடையாய் ஓடினார் தாதியர்கள்
ஆறுயிரம்பாண்டிய ரனைவருக்குஞ்செய்திசொன்னார்
மாதுகன்னியல்லியற்கு மங்கிலியந்தரித்தார்கள்
கட்டினவிருதுகளைக் கடுகியறுத்தார்கள்
அல்லிப்பெருமாளும் அழைத்தோடிவாருமென்றாள்
வாருங்களையாவென்று வருந்தியழைத்தார்கள்
அவ்வார்த்தைதான்கேட்டு ஆறுயிரம்பாண்டியர்கள்
மனதுதுயரமதாய் வந்தார்கள்பாண்டியர்கள்
அலைகுலையத்தலைகுலைய அரைப்புடவைநழுகுவிட
அல்லியம்மாள்வாசலுக்கு அனைவோரும்வந்தார்கள்
மகளாரைத்தான்பார்த்து வயிறெரிந்துதானழுதார்
ஐயோமகளேயுன்னை அந்நீதம்பண்ணவனார்
யானைத்தலைபோலே அழகானமங்கிலியம்
மூடாப்போலேதாலியைதான் மூன்மார்பில்கட்டினதார்
இதுஎன்னகாரணமோ வென்றழுதார்பாண்டியர்கள்
கண்ணீரைவிட்டார்கள் கதறிப்புலம்புகிறார்
மகுடத்துரைச்சியவள் வாய்திறந்தேதுசொ வாள்
வயிற்றிற்பிறந்ததில்லை வன்கொடுமைசெய்ததில்லை
குடலிற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை
அங்கயற்கண்கிருபையால் அல்லியிலேபெண்பிறந்தேன்
சொக்கர்கிருபையாலே தாமரையிற்பெ பிறந்தேன்
ஏழுபிராயத்திலே எதிர்த்துவந்தநீன்முகனை
வெட்டித்துணித்துநான் வீரபட்டங்கட்டிக்கொண்டேன்
பன்னிரண்டுபிராயமட்டும் பாருலகையாண்டேனே
கொள்ளவருவார்க்குக் குறடாகொடுப்பேனென்றேன்
ஆளவருஞ்சம்மந்தியையடிப்பேனென்றேன்செருபந்தா
கலியாணமென்றவரைக் கண்ணைப்பிடுங்கிடுவேன் [ல்
என்றுவிருதுகட்டி எல்லையாசாண்டேனே
பொம்மைவிருதுகளும் பூததலைகட்டினேனே
பூச்சுகொட்டாதெருவிற்கட்டி முடிசூட்டியாண்டேனே
காணவருவாரும் கைகட்டிநிற்பாரும்
எதிரிகளில்லாமல் எல்லியரசாண்டேனே

அடியென்றழைத்தவர்கள் அவனியிலொருவரில்லை
வாடிபெண்ணேயென்றவர்கள் வையகத்திலாருமில்லை
மதிக்கும்படியாக மண்டலத்தையாண்டேனே
கட்டினவிருதருத்துக் கழுத்தில்தாலிகட்டினவன்
ஆரோதெரியாது அந்நீதம்பண்ணிஞரே
அந்தரலோகத்துக் கந்தருவரென்றறியேன்
மண்டலத்துராசாக்கள் மந்திரீகளென்றறியேன்
திக்கெட்டையாண்ட துரைகளென்றுயானறியேன்
பானையைப்போல்தாலிகட்டி பறையன்மகன்போஞனே
மூடாவைப்போல்தாலிதொங்க மூடிசூட்டியாள்வேஞே
கண்டார்சிரிப்பாரே கலியுகத்தாரேசுவாரே
பார்த்தார்நகைப்பாரே பரிகாசம்பண்ணுவாரே
சற்றுமதியாரே தாணிதனிலுள்ளவர்கள்
நான்-செத்துமடிகிறேன் செல்வழிந்துபோய்விடுவேன்
மாண்டுமடிந்திடுவேன் மண்ணிலிருப்பதில்லை
வல்லபிராணனைத்தான் கல்லோடேமோதிடுவேன்
சாவேன்கெடுவேன் சமுத்திரத்திற்போய்விழுவேன்
மூட்டிஞள் தாஞேடே முகத்திலறைந்துகொண்டாள்
மார்பிலறைந்துகொண்டு மண்மேற்புரண்டாளே

பாண்டியர்கள் அல்லியரசாணிக்கு மனந்தேறுதல்

சொல்லுகிறது.

ஆருயிரவரும் ஐயன்மாரேதுசொல்வார்
அஞ்சாதெபென்மகளே ஆலோசனைசொல்லுகிருேம்
கட்டினதாலியைநீ கடுகஅறுத்தெறிந்து
விருதெடுத்துகட்டியே வெற்றியுடனுளுமென்ருர்
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லியம்மாளேதுசொல்வா
கத்திகொண்டறுத்தாலும் கத்திமடிகிறதே
வாள்கொண்டுவெட்டிஞலும் வாளுமொடிந்திடுதெ
ரம்பங்கொண்டறுத்தாலும் ரம்பமொடிந்திடுதே
பட்டிமாடுபோலாகப் பறையன்மகன்கட்டிஞனே
கழுத்துமிகநோகுதையா கட்டினதோர்தாலியிஞல்
எடுக்கமுடியவில்லை என்னசெய்வேன்ஐயாவே
யாரென்றுயானறியேன் ஐயாவேசொல்லுமென்ருள்
கண்டுபிடிப்பதற்கு கருத்தெனக்குச்சொல்லுமென்ருள்

அறிந்தேனேயாமானல்ஐந்துதுண்டாய்போட்டிடுவேன்
தெரிந்தேனேயாமானல் சீவன்வதைசெய்திடுவேன்
வந்தவரலாற்றை மகளே நீசொல்லுமென்ருர்
இங்கேநடந்ததொரு இயற்கையதைச்சொல்லுமென்ருர்
ஆனுற்கேளையாவே அதிசயத்தைச்சொல்லுகிறேன்
பாரிவேட்டைபோனேனையா பாரவனந்தனிலே
யாரோவொருவனவன் அம்புபொறுக்கித்தந்தான்
பார்த்தேனேயாகிற் பாணத்தார்போட்டிடுவேன்
அறிந்தேனேயாகில் அம்புக்கிரைகொடுப்பேன்
காலும்பிடித்தானே கதையெனக்குச்சொன்னனே
அவன்முகத்தையான்பார்த்து ஆயுதமெடுத்தேனே
ஓட்டம்பிடித்தானே ஓடிவிட்டான்பாவிமகன்
மற்ருருநாளையிலே மதுரையிலேயொருவனவன்
பயித்தியகாரனைப்போற் பவளகட்டுதிருகுளத்தில்
வண்ணமருந்தெடுத்துத் தண்ணீரிலுரைத்தானே
வம்புதும்புஞ்சொல்லியே மருந்தையவனுரைத்தான்
அவனைப்பிடித்துவந்து ஆக்கினைகள்செய்வதற்கு
ஆற்றுமணலதனில் அவனைப்புரட்டுமென்றேன்
அதனுலுஞ்சாகவில்லை அரும்பாவியானவன்ருன்
தூக்குமாத்திலே துஷ்டனைப்போடுமென்றேன்
போடப்போனதாதிகள் பலியானுள்செங்கமலம்
காளியம்மன்கோவிலிலே கடுகிபலிபோடுமென்றேன்
அக்காளிசெல்லியம்மன் ஆண்பலிவேண்டேனென்ருள்
பூதக்கிடங்கிலேபோட்டவனைக் கொல்லவைத்தேன்
பூதங்களுள்ளதெல்லாம் போதப்பணிசெய்ததையா
அதனுலுஞ்சாகவில்லை அரும்பாவியானவன்தான்
எவளோசிறுகன்னி இந்திராம்பைபோலேவந்தாள்
தன்கணவனென்றுசொல்லித் தனித்துப்புலம்பிவந்தாள்
அவனைதுரத்திவிட்டே னழைத்துப்போனளிந்திரபுரம்
ஆண்டியைப்போலொருவன் அழகானபடமெழுதி
என்னைப்போல்படமெழுதி இங்கேமடலூர்ந்தான்
சொல்லாதவார்த்தைசொல்லி சோளிக்குச்சேலைகேட்டான்
கொடுத்தாலேயல்லாது கொடும்பாவிபோகேனென்ருன்
பாம்புகளைவிட்டேனே பாவியைகொல்லுகைக்கு
யானைமதமேற்றி ஆண்டியைக்கொல்லவிட்டேன்
எதனுலும்சாகாமல் இருந்தான்மகாபாவி

மற்றொருநாள்பிடாரனவன் வகைவகையாய்ப்பாம்பெடுத்
காவடியைத்தோளில்வைத்துக் கடுகிஇங்கேவந்தானே
கூத்துகளாட்டிக் கொண்டானடிக்கவைத்தான்
தும்பிபறக்கவைத்தான் தோள்மீதிலேற்றிவைத்தான்
பாடாதபாம்புகளை பாடவைத்தான்வாசலிலே
ஆடாதபாம்புகளை ஆட்டிவைத்தான்வாசலிலே
மற்றொருநாளையிலே வனத்திற்குவேட்டைபோனேன்
தண்ணீர்களையாலே தாகவிடாய்ப்பட்டுவிட்டேன்
காசிப்பிராமணன்போல் கனதீர்த்தம்வார்த்ததுண்டு
வனவேட்டையாடியபின் மாளிகைக்குவரும்போது
தண்ணீர்ப்பந்தல்போட்டிருந்தாள் சதுரானபிராமணத்தி
பாதேசிஎன்றழுதாள் பரிதாபப்பட்டேனே
மாளிகைவாசலுக்கு மயிலணையைக்கூட்டிவந்தேன்
லட்சுமிநோன்பென்று நடத்தினாள்பாவியவள்
கலியாணச்சடங்குபோலே கலசம்நிறுத்தினாள்
வேள்விவளர்த்தினாள் வேதங்களோதினாள்
பார்த்துமிருந்தேனே பண்ணினநோன்புகளை
கண்டுமிருந்தேனே கண்ணுறங்கித்தூங்கிவிட்டேன்
பார்ப்பானைப்போலிருந்த பாவியவன்கட்டிவிட்டான்
கழுத்திலேயுந்தாலிகட்டி கனவிருதுமறுத்துவிட்டான்
யாரென்றறிவேன்யான் ஐயாவேசொல்லுமென்றாள்
ஆருயிரவர்களும் ஆலோசனையேதுசொல்வார்
தேவனேஎன்றாலே ஜெயிக்கமுடிகூடாது
மண்டலத்துராஜாவென்றால் மாதேயறிந்திடலாம்
சீமைசீமைராஜருக்குத் திருமுகமெழுதிவிடும்
ஆதிசிவன்தன்னுடைய அழகானகோவிலிலே
அங்கயற்கணம்மை அவள்வாழுங்கோவிலிலே
மாணிக்கச்சொக்கலிங்கம் மகாதேவர்சந்நிதிமுன்
கோவிற்கெதிராகக் கொப்பரையில்நெய்காச்சி
சத்தியம்பண்ணச்சொன்னால் சற்றுமறிந்திடலாம்
மண்டலத்துக்கணக்கெழுதும் மதியுள்ளமந்திரியை
ராயசச்சமர்த்தெழுதும் தன்மையுள்ளமந்திரியை
ஊர்கணக்கப்பிள்ளைகளை உத்தமரைத்தானழைத்து

## இராஜாக்களுக்குத் திருமுகமெழுதி அனுப்புகிறது.

சீமைசீமைராசருக்குத் திருமுகமெழுதுமென்றா
என்னென்றுலை யெழுதுவதுயென்றாரே
அங்கமவந்தி அருணந்தருமர்புரி
வங்கங்கலிங்கம் வங்காளம்வீமாபுரி
இராடங்குருநாடு கேரளம்விஜயபுரி
மாராடம்விகற்பபுரி மச்சமயோத்திபுரி
புலிந்தந்துவாரபுரி கோசலங்கர்னுபுரி
குலிந்தங்காஸ்மீரம் போடமீளங்காந்தாரம்
சிந்துஇலாடங்காசம் திராவிடம்காம்போஜம்
குந்தளம்நேபாளம் கூரச்சரம்பாஞ்சாலம்
தெங்கணஞ்சவ்வீரம் சிங்களம்கன்னடம்
கொங்கணஞ்சூரசேனம் குருகுசகஞ்சோழம்
அச்சியழகாபுரி யவனம்நிடதபுரி
சோனகம்யாழ்ப்பாணந் துளுவயாந்திரங்கருசம்
ஆனைகுந்தியத்திபுரம் ஆரியமும்மாளவமும்
பல்லவமும்சாலவமும் பப்பாமுங்கேகயமும்
எல்லாதேசத்தார்க்கும் எழுதுங்களோலையிப்போ
தேசதேசாராஜருக்குத் திருமுகமெழுதுமென்றார்
மதுராபுரியாண்ட வாழ்வரசியல்லியம்மாள்
சொக்கருளாலே சுந்தரியாள்பிறந்தாள்
அங்கயற்கண்ணருளாலே அல்லியருந்தான்பிறந்தாள்
ஏழுபிராயத்திலே எதிர்த்துவந்தநீன்முகனை
வெட்டித்தலைதுணிந்து வீரபட்டங்கட்டினவள்
பன்னிரண்டுபிராயமட்டும் பாருலகையாண்டகன்னி
விருதுகொடிகட்டி மேதினியையாண்டவள்காண்
ஆறுயிரம்பாண்டியற்கு அரியதுரைமகள்காண்
அல்லியவள்கழுத்தில் ஆரோதெரியாது
தேன்மொழியாள்தன்கழுத்தில் திருட்டுதாலிகட்டினனே
கழுத்திலேதாலிகட்டி கட்டினவிருதறுத்தான்
இன்னவனென்றுசொல்லி யெனக்குத்தெரியாது
சீமையிலுள்ளதொரு துரைகள்மேலெந்தனுக்கு

சந்தேகந்தோன்றுவதால் சகலதேசமன்னர்களும்
சீமைசீமைராசாக்கள் சீக்கிரம்வரவேண்டும்
எல்லையராசாளும் இராசாக்களிங்கேவந்து
கழுத்திலேதாலியது கட்டவில்லையென்றுசொல்லி
நல்லதுரைமக்கள் நம்பிக்கைசெய்யவேண்டும்
வந்தஓலையைக்கண்டு மன்னர்கள்வாராதிருந்தால்
கோட்டையைநானிடித்து கொட்டமுத்தைவிதைப்பேன்
அரண்மனையையானிடித்து ஆமணக்குமேவிதைப்பேன்
ஆண்பெண்சிறையும் அடங்கலும்நான்பிடிப்பேன்
வெட்டிதலைபிளப்பேன் வீரசொர்க்கஞ்சேர்த்திடுவேன்
ஓலைகண்டநாழிகைக்கு ஒருகணத்தில்வாருமென்று
எழுதுமென்றாள்ஓலையது யிளங்கொடியாளல்லியம்மாள்
அவ்வார்த்தைதான்கேட்டு அன்பானமந்திரியும்
சேமக்குருத்தோலை சீக்கிரமாய்தானெடுத்தார்
ஈழப்பனையோலை இருபக்கங்காம்பரிந்து
தாளிப்பனையோலை தலைப்பக்கங்காம்பரிந்து
வாரியஓலையிலே வக்கணைகள்தானெழுதி
செத்திரிகம்போட்டு சீல்முத்திரையும்வைத்து
அல்லிமுன்பாக அடிபணிந்துதெண்டனிட்டார்
ஆடாசெட்டிமல்லர் ஆயிரம்பேரெழுந்திருங்கள்
சீமையில்ராசருக்குச் சுருளோலைகொண்டுபோங்கள்
மல்லரெழுந்திருந்து வாங்கினரோலைதன்னை
காலால்நடவாமல் காற்றாய்ப்பறந்தார்கள்
மதுரைக்கடந்தார்கள் வனங்கள்புகுந்தாரே
காடுசெடிகள்தாண்டி கிரியமலைதான்கடந்து
சீமைசீமைராசருக்குத் திருமுகந்தந்தார்கள்
ஓலைச்சுருள்விரித்து உத்தமர்கள்தான்படித்தார்
அதிலிருந்தமர்மமெல்லாம் அனைத்துமறிந்தார்கள்
நாமும்வருவோங்காண் ராசாத்திசொற்படிக்கே
நம்பிக்கைதான்கொடுத்து நலமுடனேவருவோமென்றார்
தருமாபுரமாளுந் தருமருக்குஓலைதந்தார்
சந்தனவடிவழகர் தருமாவரேதுசொல்வார்
சீர்கணக்கரையழைத்துச் சுருளோலைபடியுமென்றார்
அப்போதுகணக்கப்பிள்ளை அன்பாய்ச்சுருள்விரித்து
படித்தார்களோலைதன்னைப் பார்வேந்தர்கேட்டுவிட்டார்
சந்தனவடிவழகர் தருமாதுகேட்டுவிட்டார்

நாமும்வருகிறோம் ராசாத்திகொலுவுக்கென்றார்
மாயன்பெருமாட்கு வந்ததேஓலையது
ஓலையதுபடித்து உலகளந்தயெம்பெருமாள்
நாமும்வருகிறோம் நடவுங்கள் தூதரென்றார்
சீமைசீமைராசருக்குச் செப்பிவந்தார் தூதரவர்
காடுசெடிதாண்டி கடுகிவந்தார் தூதரவர்
அல்லியின்முன்னேவந்து அடிபணிந்துதெண்டனிட்டா
சீமைசீமைராசருக்குச் செப்பிவந்தோம் ஆச்சியென்றார்
மண்டலத்துராசாக்கள் மகிழ்ச்சியுடன்வருகிறார்கள்
திக்கெட்டையாண்டதொரு துரைகளெல்லாம்வருகிறார்
சந்தனவடிவழகர் தருமரவரேதுசொன்னார்
ஆரடாதூதுவரே அகங்காரமல்லர்களே
மாயன்பெருமானை வரவழைத்துவாருமென்றார்
ஓட்டம்நடையுமாக வோடிவந்தார் தூதுவர்கள்
மாயன்பெருமாட்கு வந்துதெண்டம்பண்ணினார்கள்
சந்தனவடிவழகர் தருமரும்மையழைக்கச்சொன்னார்
கூட்டிவரச்சொன்னார்காண் கோபாலசுவாமியென்றார்
அப்போதுபெருமாளும் அன்புடனேதானெழுந்தார்
தாரகனையெச்சரித்து சாமிரதம்வேண்டுமென்றார்
கொண்டுவந்தான் தாரகனுங் கொப்பனவேசித்ரரதம்
ஏறினார்தேர்மேலே எம்பெருமாளாண்டவரும்
காடுசெடிதாண்டி கடுகிவந்தார்தருமாபுரம்
கோபுரவாசலண்டை கோபாலர்தேரிறங்கி
மாயன்பெருமாளும் மாளிகையில்வந்துவிட்டார்
தாணியளந்தமாயன் தருமருக்குதெண்டனிட்டார்
சிங்காதனம்போட்டு ஸ்ரீராமர்வீற்றிறென்றார்
இட்டசிங்காதனத்தில் எம்பெருமாள்வீற்றிருந்தார்
என்னையழைத்தது ஏதுகருமமென்றார்
தருமாபுரமாளும் தருமரவரேதுசொல்வார்
மதுராபுரியாளுகின்ற வாழ்வரசியல்லியவள்
காணாதேமங்கிலியம் கட்டியேபோனாரும்
திக்கெட்டையாண்டதொரு தேசதேசராசருக்கும்
சுருளோலையெழுதியே தூதர்வசம் அனுப்பினாள்
நம்பிக்கைசெய்துபோக நமக்கோலைவந்ததையா
அருச்சுனனும்நீருமாய் ஆரணியம்போனீரே
காசியாத்ரைபோனபோது களவுசெய்துவந்ததுண்டோ

தருதலைப்பொட்டிமகன் தாழ்வுசெய்துவந்ததுண்டோ
குற்றங்களுண்டானால் கோபாலாசொல்லுமென்றார்
அருச்சுனன் தன்னாலே அழும்புண்டோசொல்லுமென்
நான்-ஒக்கநடந்தேனே ஒன்றுமறியேனே [றார்
கூடநடந்தேனே கொலைகளவுஒன்றறியேன்
அழும்புகளுண்டானால் அருமைந்தாசெய்வேன்காண்
எந்தனுக்குமோலைதான் யெழுதிவரவிட்டாள்காண்
நானுமிதோபோகிறேன் நன்மதுரைபட்டணத்தே
வீட்டுக்கொருவருந்தான் வேல்வேந்தேபோகவேணும்
ஐவர்களிலொருவர் யாராகிலும்வாருமென்றார்
யாரையழைத்துப்போறீர் அரிராமாசொல்லுமென்றார்
வெற்றிமதயானை வீமனைக்கொண்டுபோறேன்
நம்பிக்கைதந்துவிட்டு நாம்வருவோம்ராசமன்னா
போய்வாருமென்று புண்ணியனார்செலவுதந்தார்

கிருஷ்ணபகவானும் வீமராசனும் மதுரைக்குப்

போகுதல்.

வெற்றிமதயானை வீமனெழுந்திருந்து
சந்திரகாந்திதட்டிகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
அம்புவில்லுங்கைப்பிடித்து அம்புறாத்தூணிமுதுகணிந்
தேறின்மேலேறினான் திக்குசெயங்கொண்டவீமன்
மாயன்பெருமாளும் மச்சுரதமீதேறி
இருவருமாகவேதான் ரதமேறிவருகிறார்
தரும்ம்புரங்கடந்து வீமாபுரந்தாண்டி
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தான்தாண்டி
வனமாய்வனந்தாண்டி வந்துவிட்டார்தென்மதுரை
மண்டலத்துராசரெல்லாம் வந்தார்மணிபுரத்தில்
முடியோடேமுடிநெருங்க முடிமன்னர்வந்துவிட்டார்
வச்சிரகிரீடங்கள் மகுடமுடிநெருங்குதங்கே
எல்லையுள்ளராசரெல்லாம் யாவர்களும்வந்தமர்ந்தார்
ஆறாயிரவருடன் அல்லியருந்தானறிந்தார்
மகுடத்துரைச்சியவள் மயிலணையாளேதுசொல்வாள்
மாணிக்கச்சொக்கலிங்கம் மகாதேவர்கோவிலண்டை

கோபுரவாசலண்டை கொப்பரைவையுமென்ருள்
ஆயிரக்கலநெய்வார்த்து அக்கினியைமூட்டிஞர்கள்
பாதாளகுறிபறிந்துப் பாங்கானபள்ளம்வெட்டி
இரும்புநல்லகொப்பரையை எடுத்துவந்துவைத்தார்கள்
ஆயிரக்கலநெய்வார்த்து அக்கினியைமூட்டிஞர்கள்
நெய்யைக்கொதிக்கவைத்து நேரிழைக்குசேதிசொன்ஞர்
பதின்கலநெல்லெடுத்துப் பாங்கியரேவையுமென்ருள்
அம்பாரம்போடுமென்ருள் ஆண்டவஞர்சந்நிதிமுன்
சம்பாநெல்லுகாறுநெல்லும் அப்பாரம்போட்டார்கள்
மகுடத்துரைச்சியற்கு மணியாசனம்போட்டார்
ஆருயிரவரும் அல்லியருந்தானெழுந்தார்
ஆலயந்தன்னருகே வந்தாரேயாவர்களும்
கோபுரவாசலண்டை கொப்பெனவேவந்தார்கள்
மகுடத்துரைச்சியவள் வந்தமர்ந்தாளாசனத்தில்
வந்தவந்தாரசாக்கள் மற்றபக்கமிருந்தார்கள்
அல்லிப்பெருமாளும் ஆரணங்கு மதுசொல்வாள்
கேளுங்கள்ராசர்களே கீர்த்திபெற்றுமன்னர்களே
ஆளவாய்ச்சொக்கலிங்கம் ஐயன்கிருபையிஞல்
அங்கயற்கண்ணம்மை அவளுடையசெயலாலே
அல்லியிலையின்மேல் ஆரணங்கும்பெண்பிறந்தேன்
வயிற்றிற்பிறந்ததில்லே வன்கொடுமைசெய்ததில்லே
குடலிற்பிறந்ததில்லே குலக்கொடுமைசெய்ததல்லே
ஓடுகிறதண்ணீரிலே உள்ளேமணற்சேறுமுண்டு
அடிக்கிறகாற்றதனில் ஆலகாற்றிற்றும்புமுண்டு
காலகாலகண்டருக்குக் கண்டத்திற்கறுப்புமுண்டு
சந்திரற்குமச்சமுண்டு சற்றேகருப்புமுண்டு
குண்டுமணிக்காணுலுக் கொஞ்சங்கருப்புமுண்டு
மயிரேகறுப்பொழிய மற்றைக்கறுப்புமில்லே
புருவங்கறுப்பொழிய பின்னேக்கறுப்புமில்லே
மாசிலாப்பெண்பிறந்தேன் மீஞட்சிகிருபையிஞல்
ஏழுபிராயத்திலே எதிர்த்துவந்தநீன்முகனே
வெட்டத்தலேதுணித்து வீரபட்டங்கட்டிக்கொண்டேன்
பன்னிரண்டுபிராயமட்டும் பாருளகையாண்டிருந்தேன்
அடியென்றழைத்தவர்கள் அவனிதனில்யாருமில்லே
வாடியென்றழைத்தவர்கள் வையகத்திலாருமில்லே
வம்புதும்புசொன்னவர்கள் மண்டலத்தில்யாருமில்லே

ஆரோதெரியாது அநியாயம்பண்ணினுர்கள்
காணுமல்மங்கிலியங் கட்டினெென்கழுத்தில்
இன்னுனினியானென் றெனக்குத்தெரியாது
ஆகையினுலேதவன் அழைப்பித்தேனுங்களைத்தான்
தானறியேனென்றுசொல்லி நம்பிக்கைதந்திடுங்கள்
கொதிக்கிறநெய்தனிலே காப்பெனவேணைகநோய்த்து
அம்பாரநெல்லிலே அள்ளிநிமிட்டுங்கள்
அல்லாதேபோனுக்கால் அவனைவிடுவதில்லை
கைகளதுகொப்பளிக்கக் கண்டதேயுண்டானுல்
வெட்டித்தலைபிளப்பேன் வீரசொர்க்கஞ்சேர்த்திடுவேன்
நரகலோகம்போனுலும் நானவனைவிடுவதில்லை
ஆகாயம்போனுலும் அம்பாற்பிடித்திடுவேன்
வானத்திற்போனுலும் வலைகட்டிநான்பிடிப்பேன்
பாதாளம்போனுலும் பாணத்தாற்கொன்றிடுவேன்
விட்டுவிடுவேனென்று சற்றேமனமெண்ணவேண்டாம்
சத்தியத்தைசெய்துநீங்கள் தயவுடனேபோய்விடுங்கள்
அவ்வார்த்தைதான்கேட்டு அனந்தமானராசரெல்லாம்
சுற்றிருக்கும்ராசாக்கள் துரையாந்துரைகளெல்லாம்
எழுந்தார்கள்சபையில் ஏதுசொல்வார்மன்னவர்கள்
அன்னநடைமாதே ஆரணங்குநாயகமே
பாருலகையாண்டவளே பாண்டியன்தன்மகளே
செங்கோல்முடிசூட்டி துரைத்தனம்செய்பவளே
உன்னூரறியோம்பேரறியோம் ஒருசெய்திநாமறியோம்
மங்கிலியந்தொட்டு தரித்தவகைநாமறியோம்
அறிந்தோமேயாமாகில் அழும்புவருமெங்களுக்கு
அக்கினிக்குளதிராக அனைவோரும்வந்துநின்ருர்
மகுடமுடிராசாக்கள வந்தார்கள்தாமெழுந்து
அக்கினிக்குமுன்னுலே அந்நெய்கிடாமுன்னே
இருகையைக்கூட்டியவர் ஏதுசொல்வார்ராசர்களும்
ஐயன்பிடாரிகளே ஆகாயத்துர்க்கிகளே
அந்தரதேவதையே சந்திரசூரியரே
இந்திரபிர்ம்மாவே கந்தருவர்இருடிகளே
ஆலவாய்ச்சொக்கலிங்கம் அங்கயற்கண்ணுயகியே
மாணிக்கச்சொக்கலிங்கம் மகாதேவர்ஆண்டவரே
ஏதுமறியோமோ எப்பாவமொன்றறியோம்
தையலர்க்குமங்கிலியந் தரித்தவகைநாமறியோம்

ஏதுமறியோமென்று இருகையைத்தானெடுத்து
காய்கிறநெய்தனிலே கையைத்துவைத்தார்கள்
அம்பார்நெல்லிலே அள்ளிநிமிட்டினார்கள்
ஒவ்வொருராசாவாய்ச் சோதனைதந்தார்கள்
அம்பாரநெல்லையெல்லாம் அடங்கலும்நிமிட்டிவிட்டா
மாயன்பெருமாளும் வந்துசத்யம்பண்ணிரு ரோ
வெற்றிமதயானை வீமராசன்தானெழுந்தார்
நெய்க்கிடாரம்தன்னருகே நிகாய்வருகையிலே
அக்கினியாய்வீசுகுது அருகில்வாவொண்ணமல்
செந்தணலாய்ப்பற்றுதே சேரவாவொண்ணமல்
வெந்துகருகிறதே வீமராசன்தேகமெல்லாம்
முன்னிட்டகாலையவன் பின்னிட்டுவாங்கிக்கொண்டான்
மாயன்பெருமாளே மைத்துனரேதி ட்டுகிருஷ்ணு
என்னபாவம்தானறியேன் ஏதுவினையென்றறியேன்
சேரவாவொண்ணமல் செந்தணலாய்வீசுதுகாண்
அருகில்வரவொண்ணுது அக்கினியாய்வீசுதுகாண்
என்னபெருமையிது யெம்பெருமாளென்றுகேட்டான்
ஆயன்பெருமாளும் யாரை நினைக்கலுற்ருர்
அக்கினிபகவானை ஆயனர்தான்தொழுதார்
ஒருநளும்செய்தவரை உள்ளத்தில்வைக்கவேண்டும்
அக்கினிபகவானே அருச்சுனனுருந்தனுக்கு
எத்தனைசகாயஞ்செய்தார் எல்லாமறந்தீரோ
மாளுகின்றவுன்னையவர் வாள்விஜன்காத்தாரே
அந்தசகாயமது அர்ச்சுனர்மேல்வைக்கவேண்டும்
கெண்டுடையராசனவன் பெண்ணரசைமாலையிட்டான்
உந்தனுக்குகோபமென்ன உறுத்துவானேன்செந்தணலை
கோபத்தைவையாதே குளிர்ந்ததண்ணீர்போலிருங்காண்
என்றுதொழுதாரே எம்பெருமாள் அக்கினியை
ஆயாதுசொற்கேட்டு அக்கினிதேவரவர்
குளிர்ந்தசலம்போலாகக் கொப்பெனவேநின்றுவிட்டார்
வாராய்மதவீமா வார்த்தையொன்றுநீர்கேளாய்
மாதினுக்குமங்கிலியம் மதவீமாதரிந்ததுண்டோ
செய்ததேயுண்டானல் சேரவாவொண்ணுது
கலகங்களுண்டானல் கட்டழகாதூரநில்லும்
மனதிற்படுகளும் வஞ்சனைகளில்லையென்ருல்
ராசாக்கள்போலேநீ நம்பிக்கைசெய்யுமென்ருர்

## வீமராசன் நெய்யைகுடித்துவிட்டு கொப்பரையை உருட்டிவிட்டது.

மறுபடியும்வீமராஜன் மன்னவனுந்தான்வந்து
கொதிக்கிறநெய்யருகே கொப்பெனவேவந்துநின்றான்
மணக்கிறநெய்யதனை மதவீமன்பார்த்துவிட்டான்
தூக்கினன்கொப்பரையை துரிதமாய்நெய்யையெல்லாம்
குடித்தானரைக்கணத்தில் கொப்பரையையுருட்டிவிட்டு
வெற்றிமதயானை வீமனவன்வந்துவிட்டான்
மாயனுடனேக வழிபிடித்துத்தானடந்தான்
மதுரைத்தெருக்கடந்து வனமாய்வனங்கடந்து
காடுசெடிகள்தாண்டி கரியமலைதான்கடந்து
ஆறுகள்சுனைதாண்டி அதிகவனங்கடந்து
தருமாபுரிபட்டணத்தில் தார்வேந்தர்வந்துவிட்டார்
அல்லிப்பெருமாளும் ஆரணங்குமேதுசொல்வாள்
இத்தனைபேரிலே யெவனோதிருடனென்பாள்
அனந்தங்கோடிராசரிலே யாரைத்திருடனென்போம்
சத்தியஞ்செய்தாரே தாணியுள்ளராசாக்கள்
நெய்யிலேகைதோய்த்து நெல்லைநிமிட்டிவிட்டார்
சோதனைகாட்டியே துரைகளெல்லாம்போகலையோ
ஆனைவோரைபோலாக அவனுக்கைத்தோய்க்கவேணு
கொதிக்கிறநெய்யதனைக் குடிக்கவிதிமுறையோ
திருடனுக்குதெய்வமுண்டோ சூதனுக்குநேசமுண்டோ
வானஞ்சுழலவோ மருந்துண்டோ அவன்கையிலே
பூமிசுழல்வதற்குப் பொடியுண்டோவன்கையிலே
வண்ணமருந்தெடுத்துத் தண்ணீரிலுறைத்தானே
வம்புதும்புபேசியவன் வாய்பழுதுஞ்சொல்லலியோ
ஆற்றிலேதான்புரட்டி ஆவனையும்கொல்லுமென்றே
அவனுடையமந்திரத்தால் ஆற்றைதடைகட்டலியோ
தூக்கிலேபோட்டவனை தோழியரைகொல்லுமென்றேன்
தாதியைக்கொன்றுவிட்டான் தந்திரவித்தையினல்
காளியம்மைகோயிலிலே காவுகொடுங்களென்றேன்
வடவாசல்செல்வியரை வாயைத்தடைகட்டிவிட்டான்
பண்டாரம்போலேவந்து படம்படித்தான்வாமலிலே
வம்புந்தும்பாக வாய்பழுதுஞ் சொன்னனே

அரவத்தைவிட்டுநான் ஆண்டியைக்கொல்லுமென்றேன்
பாம்பைத்தடைகட்டினான் பாதகனானவனும்
யானையைமதமேற்றி ஆண்டியைக்கொல்லுமென்றேன்
யானையைத்தடைகட்டினான் அரும்பாவியானவனும்
வேதியனைப்போலேவந்து வேள்விவளர்த்தினானே
மறையவனைப்போலேவந்து மங்கிலியந்தரித்தானே
நெய்யைக்குடிக்கவகை நினைவறியமாட்டானே
மலையளாவித்தைகளும் மந்திரமுங்கற்றபாவி
எந்தவூராசாவோ யெனக்கறியச்சொல்லுமென்றாள்
தருமாபுரமாளுந் தருமர்தம்பியென்றுசொன்னார்
நெய்யைக்குடித்தவதான் நீதியுள்ளவீமாசர்
வெற்றிமதமுடைய வீமசேனனென்றுசொன்னார்

அல்லியரசாணி பஞ்சபாண்டவர் பேரில்

சண்டைக்கு வருகிறது.

அவ்வார்த்தைதான்கேட்டு அல்லிப்பெருமாளும்
எட்டிப்பழம்போலே இருகண்ணுந்தான்சிவந்து
உருக்கியசெம்பொன் உதிரம்போல்கண்சிவந்து
தருமாபுரமுள்ளதெல்லாந் தவிடுபொடியாயிடித்து
தங்கமதிற்கோபுரத்தைத் தரையோடேசாத்திடுவேன்
ஆமணக்கும்பருத்தியுமாய் அடறவிதைத்திடுவேன்
ஆண்பெண்சிறையும் அடங்கலும்யான்பிடிப்பேன்
தண்டுபயணமென்று தனிபேரிபோடுமென்றாள்
வெட்டியானைத்தானழைத்து விருமுறசறையுமென்றாள்
ஆருயிரம்பாண்டியர்கள் அடங்கலும்பயணமென்றாள்
இன்றுவெளிக்கூடாரம் இயலுடனேபோடுமென்றாள்
சண்டாவைநாட்டுமென்றாள் தமுரையடியுமென்றாள்
அப்போதுசாம்புவனும் யானையின்மீதேறி
அடித்தான்பறையோசை அம்மதுரைதானதிர
மதுரைப்படைகளெல்லாம் வாருங்களென்றுசொல்லி
ஆயுதங்கள்கட்டியே அனைவோரும்வாருமென்று
அடித்தான்பறையோசை அம்மதுரைதானதிர
மதுரைப்படைகளும் மகாசனங்களுள்ளவரும்
எண்ணான்குஆயுதத்தையெடுத்தரையிற்கட்டிக்கொண்டா
அமரதருஞ்சமரதரும் அர்த்தாதத்தானவரும்

கலிங்கர்தெலுங்கர்களும் கன்னடியரானவரும்
ஈழத்துவங்கணரும் இளநாட்டுச்சோனகரும்
ஆரியரும்வீரியம் ஆனமலைதுளுவர்களும்
உடையவருஞ்சூதகரும் ஒட்டியரும்பப்பரும்
குறவர்மறவருங் குச்சிலியரானவரும்
வன்னியர்துலுக்கர்களும் மராட்டியரானவரும்
வேடர்களும்வில்லியரும் வேணசனமுள்ளவரும்
ஆயுதங்கள்கட்டியே அனேகசனம்பயணமானர்
பட்டயஞ்சூரிகளும் பாரியவில்சமுகாடு
நிமிசாபெரியவகு தோிசமாம்பெரியகத்தி
கூலிசமுஞ்சூலிசமுங் குண்டுதுப்பாக்கிகளும்
மண்வெட்டிகோடாலி வல்லயம்இருப்புலக்கை
வாளுகளும்வேலுகளும் வளைதடியுஞ்சக்கரமும்
கண்டகோடாலிகளும் கவுண்டுக்கல்உண்டைகளும்
சிங்காணிபூச்சுவில்லும் சேனைவிதஆயுதமும்
ரம்பமும்பாசங்களும் நாலெட்டுஆயுதமும்
எண்ணான்குஆயுதத்தை யெடுத்தரையிற்கட்டினர்கள்
சட்டைதமான்வச்ரகபாய் தரித்தார்களெல்லவரும்
சண்டைக்குமுஸ்தீபாய்ச் சமர்த்தரெல்லாம்வருகிறார்கள்
வந்துநிறைந்தார்கள் வளம்பெரியசேனையெல்லாம்
யானைகளோஆறுலட்சம் அசுவங்களேழுலட்சம்
ஒட்டகங்கள்பத்துலட்சம் ஒன்றாய்க்கூட்டினர்கள்
கார்மேகம்போலாகக் கறுத்தானைக்கூட்டம்வரும்
வானத்துமேகம்போல் மதயானைக்கூட்டம்வரும்
செவ்வானம்போலாகச் சிவந்தபுரவிவரும்
வந்துநிறைந்தாகள் வளம்பெரிய அல்லியண்டை
பொன்னின்மலைநாடாளும் புகழ்பெரிய அண்ணர்களை
அண்ணரைத்தானழைத்து அம்மதுரையாளுமென்றாள்
வென்றுசெயித்து விருதுகட்டிவருவளவும்
செயித்துவருமளவுந் தென்மதுரையாளுமென்றாள்
முத்துப்படுத்துறையும் மூப்பிமார்பட்டுடையும்
யானைப்படுத்துறையும் யாவும்பதனமென்றாள்
பவளம்படுத்துறையும் பட்டணமும்பத்திரங்காண்
கப்பற்படுத்துறையும் கடற்சோங்குபத்திரங்காண்
செயித்துவருமளவுஞ் சீர்மதுரையாளுமென்றாள்
பயணம்பயணமென்றார் பயணபேரியடியுமென்றார்

அம்பெடுத்துவில்லெடுத்து அம்புறுத்தூணிமுதுகணிந்
எல்லாரும்பயணமென்று ஏறினார்தேர்மேலே
வானத்துமீன்போலே மணிரதங்கள்வருகிறதே
ஆறுயிரந்தேரும் அணியணியாய்ப்போகிறதே
சொக்கலிங்கந்துணையென்று தேரைநடத்தினளே
அச்சுகிறுகிறென்னும் யானைநெடுந்தேரசையும்
வண்டில்கிறிச்சியிடும் மதயானைகோஷ்டமிடும்
குதிரையனுமானிகளுங் கோடிமன்னர்சப்தமிட
வெயிலுக்கெடுத்தார்கள் வெள்ளைநல்லகூடாரம்
கானலுக்கெடுத்தார்கள் கறுப்புநல்லகூடாரம்
பனிகளுக்கெடுத்தார்கள் பட்டுநல்லகூடாரம்
கறுப்புநிசான்சிவப்புநிசான் கலந்துபறக்கிறதே
அல்லிக்கொடிவிருது அசைகிறதுதேர்மேலே
மஞ்சட்கொடிமேலே மகாதோரணமசைய
வருகிறதேமூலபலம் மண்ணிடங்கொள்ளாதே
ஆற்றுமணல்போலே அடுக்கிட்டுச்சேனைவரும்
மீனின்புலாலைப்போல் வேண்டுசனங்கள்வரும்
காட்டுக்களாம்பூவும் காளான்முளைத்ததுபோல்
சுற்றிக்குடைபிடித்தார் சூரியனைத்தோற்றுதே
பக்கங்குடைபிடித்தார் பகவானைக்காணுதல்
செந்தூளெழும்பினதே சூரியனைக்கப்பிற்றே
கருந்தூளெழும்பினதே கதிரோனைக்கப்பிற்றே
அடிபடுதேபேரிகைதான் அந்தகருந்தானதிர
யானைமேல்பேரிகையாம் குதிரைமேல்டங்காவாம்
ஒட்டகமேல்தகபத்து ஓசையெழும்பினதே
வெண்கலபேரிகைகள் விருதுமுழங்கிறதே
பாஞ்சசன்யப்தேவதத்தம் பலவிருதுந்தான்முழங்க
சச்சிரிகைவீணைகளுந் தாக்கிமுரசறைய
ஒற்றைவாசல்சங்கதுதான் ஊதிற்றேயுலகதிர
வருகிறதேமூலபலம் மண்ணுவிண்ணுந்தானதிர
மதுராபுரியைவிட்டு வன்காட்டிற்போகலுற்றான்
காடுசெடிதாண்டி கரியமலைதான்கடந்து
ஆறுசுனைதாண்டி அதிகவனங்கடந்து
வேங்கையடர்த்தவனம் வெண்களாப்பூத்தவனம்
கோங்குபறந்தவனம் கொன்றைகளாப்பூத்தவனம்
அண்டாகண்டறியாத தண்டவனங்கடந்து

அல்லியம்மாள் தருமாபுரீ அடுத்தாள் தனத்துடனே
பட்டணத்தைச்சுற்றி பாளையங்கள்சூழ்ந்ததுவே
பஞ்சவர்னக்கூடாரம் பலதிசையும்போட்டார்கள்
மூத்திரிக்கைபோட்டாளே மூடிமன்னராசாத்தி
சண்டாவைநட்டார்கள் தமுக்கடித்தார்பாளையத்தில்
சண்டையின்பேரிகையைந் தானடித்தார்பாளையத்தில்
அடிபடுதோரயபேரி அடிவானத்திடிபோலே
கோடைகாலத்திடிபோலே குமுறுதோரயபேரி
செவ்வானத்திடிபோலே சோமுழங்கிறதே
சத்தத்தொனிகளை தருமராசர்கேட்டுவிட்டார்
ஊரிலுள்ளசனங்களெல்லாம் ஓடிவந்துபுலம்புகிருர்
சந்தனவடிவழகன் தருமலிங்கமகாராசன்
வெற்றிமதயானை வீமனைத்தானழைத்தார்
ஆணலழகுமன்னன் அருச்சுனரைத்தானழைத்தார்
நகுலசகாதேவரென்னும் ராசர்களைத்தானழைத்தார்
மாயன்பெருமாளை மனதிலேதானினைத்தார்
அடியளந்தமாயவரே ஆதிமூலம்வாருமென்ருர்
எல்லையளந்தசுவாமி எமபெருமாள்வாருமென்ருர்
வாருவென்றபோதையிலே வந்தாரேஎமபெருமாள்
சந்தனவடிவழகன் தருமருக்குசரணஞ்செய்தார்
கூடசரணஞ்செய்தார் கோபாலமாயனுக்கு
என்னையழைத்தது யேதுகருமமென்ருர்
பட்டணத்தைச்சுற்றியே பாரதளம்வந்ததே
கோட்டையைச்சுற்றியே போட்டார்கள்மூத்திரிக்கை
சண்டைக்குவாருமென்று தமுறும் அடிக்கிருர்கள்
எந்தவூர்காவலரோ ஏதுமறியேனே
ஆளோடேவிட்டுபீங்க ளறிந்துவாச்சொல்லுமென்ருர்
அருக்காரொருவரை அனுப்பினுர்மந்திரியை
வந்தவராரென்று வார்த்தையறியுமென்ருர்
எற்ருளொருவனவன் ஓடினுன்மந்திரியும்
பாண்டியர்களெதிர்வந்து பாங்காய்நமஸ்கரித்து
எந்தவீராசரையா எதற்காகவந்தீர்கள்
வந்தீர்கள்சண்டைக்கு வயணமென்னராசர்களே
சொல்லுங்களையாவென தூதுவனுந்தெண்டனிட்டான்
மந்திரியுங்கேட்கையிலே மகாராசாயேதுசொல்வார்
மதுராபுரியாளும் வாழ்வரசியல்லியற்கு

காணாமல்மங்கிலியம் கட்டினாரவள்கழுத்தில்
பொய்சசத்தியம்பண்ணியே புகழ்வீமன்வந்துவிட்டான்
ஆகையினார்சண்டைசெய்ய அநேகதளங்கூட்டிவந்தார்
சண்டைபண்ணிஜெலிக்க சொல்லும்சாமர்த்யராசாவை
வந்தாலேயாச்சுது வாராமலிருந்தாக்கால்
(நாளை) கோட்டையிடித்து கொத்தளமுந்தானிடிப்போம்
தங்கமதிற்கோபுரத்தைத் தரையோடேசாய்த்திடுவோம்
ஆமணக்கும்பருத்திகளும் அடறவிதைத்திடுவோம்
ஆண்பெண்சிறையும் அடங்கலும்பிடித்திடுவோம்
கடுகிவரச்சொல்லும் கட்டழகராசர்களை
அவ்வார்த்தைதான்கேட்டு அலங்காரதூதுவனும்
சந்தனவடிவழகர் தருமாண்டைவந்துவிட்டான்
வணங்கிநமஸ்கரித்து மந்திரியுமேதுசொ லான்
மதுராபுரியாளும் வாழ்வரசியல்லியற்கு
காணாமல்மங்கிலியம் கட்டினாரவள்கழுத்தில்
பொய்ச்சத்தியம்பண்ணிவிட்டு புகழ்வீமர்வந்தாராம்
ஆகையினாலேதான் அல்லதளம்கூட்டிவந்தாள்
சண்டைக்குவந்தாலே அல்லாதுதார்வேந்தே
கோட்டையிடித்துக் கொம்மைபறிப்பேனென்றாள்
சண்டைக்குவரச்சொன்னான் தருமலிங்கராசாவே
என்றுசரணமிட்டான் இயலானமந்திரியும்
தக்கப்புகளுடைய தருமாவர்தான்கேட்டு
மாயன்பெருமாளின் மதிமுகத்தைத்தான்பார்த்து
தையலிங்கொடிக்குச் சத்தியஞ்செய்யவென்று
தென்மதுரைபோனீரே சேதியென்னசொல்லுமென்றார்
அங்கேநடந்ததொரு அதிசயத்தைச்சொல்லுமென்றார்
மறலிமைந்தர்தருமருக்கு மாயவனாரேதுசொல்வார்
மண்டலத்துராஜாக்கள் வந்துசத்தியம்பண்ணினார்கள்
வெற்றிமதயானை வீமராஜனேதுசொல்வான்
கொதிக்கிறநெய்தனிலே கொப்பெனவேகைதுவைத்து
சத்தியஞ்செய்யாமல் தாமந்தவாழ்மார்பன்
கொதிக்கிறநெய்யின் கொப்பரையைத்தானெடுத்து
நெய்யைக்குடித்துவிட்டி நிமிஷமுருட்டிவிட்டான்
மதபட்டவீமன்செய்த வண்மையினாலிப்போது
சண்டைக்கிவந்தாளே சாமார்த்தியமுள்ளகன்னி
சண்டைக்குவந்தவளைச் சற்றுவிடலாகாது

சண்டைகளைச்செய்து சமர்த்தறியவேணுமென்றார்
வந்தசண்டைவிடலாமோ வளம்பெரியதருமரேசொல்
பின்னுக்கிடைந்தாலே பெண்ணரசிவிடுவாளோ
வென்றுசெயிக்கவேண்டும் வீரபட்டஞ்சூட்டவேண்டும்
இவ்வார்த்தைகேட்டு இயன்மைந்தரேதுசொல்வார்
யாரையனுப்புவோம் அமராதுசெய்வதற்கு
எவரையனுப்புவோம் எம்பெருமாள்சொல்லுமென்றார்
நகுலசகாதேவா ராசாக்கள்தங்களையும்
வெற்றிமதயானை வீமனையனுப்புமென்றார்
கூடவெகுசனத்தைக் கூட்டியனுப்புமென்றார்
நானுங்கூடப்போகிறேன்காண் ராசாவேஅஞ்சாதே
வென்றுசெயித்துநான் வெளிப்பட்டுவருவேனென்றார்
மனதிற்கிசைந்தபடி மாயனேசெய்யுமென்றார்

பாண்டவர் அல்லியரசாணியோடு சண்டை

செய்யவந்தது.

தருமாதுசேனைகளை சகலசெனம்வாருமென்றார்
இன்றுவெளிக்கூடாரம் இயலுடனேபோடுமென்றார்
சண்டைபேரியடியுமென்றார் சண்டாவைநாட்டுமென்றார்
பாளையங்களுள்ளதெல்லாம் பயணபேரியடியுமென்றார்
ஆரடாதேர்ப்பாகா அலங்கரிநதேரையென்றார்
தேர்ப்பாகன்தானும்வந்து தேரையலங்கரித்தான்
ஆறுவண்டி நூறுசட்டம் அழகானகுத்துலக்கால்
குத்துலக்கால்சொப்பநிட்டு கொடுங்கைதிரைவளைத்து
கும்பகலசமது கொடுங்கையலங்கரித்து
தேரையலங்கரித்துத் தேர்ப்பாகன்கொண்டுவந்தான்
அலங்காரச்சேலையினுர் அலங்காரம்பண்ணினனே
நாலுபக்கஞ்சாலர்களும் நவரத்தினதோரமும்
கண்ணுடிசல்விகட்டிக் கவரிமான்சுங்குவிட்டு
ஐந்துகொத்து ஆலாட்சி அநந்தமணிகட்டினனே
நவகண்டவீரமணி நான்குபக்கம்கட்டினனே
மாவிலைத்தோரணமும் வாழமரங்கட்டினர்கள்
நான்குபுரவிகளை நன்றாய்க்குளிப்பாட்டி
நான்குகால்வண்டயமாம் நடுக்கழுத்திற்கொலுசுகளாம்
மூன்னாலேசுட்டிகளும் பின்னாலேகுச்சுகளும்

மாணிக்கக்கடிவாளம் வாயிற்கொடுத்தானே
நான்குகுதிரைதன்னை நன்றாயலங்கரித்தான்
தேரின்மேல்கட்டினனே சீரானபுரவிதன்னை
சாய்ந்திருந்துசண்டைசெய்ய கூடவேமேடையிட்டான்
குனிந்திருந்துசண்டைசெய்ய கூடவேமேடையிட்டான்
ஒஞ்சரித்துசண்டைசெய்ய ஒருதலையணைகளிட்டான்
சந்தனப்பொட்டுமிட்டு சாம்ராணித்தூபமிட்டான்
தேரையலங்கரித்துத் தேர்ப்பாகனேட்டிவந்தான்
ஆலங்கரித்தேனென்று அடியணிந்துதெண்டனிட்டார்
வெற்றிமதயானை வீமராசன்தானெழுந்தான்
நகுலசகாதேவ ராசரெழுந்திருந்தார்
ஆயாபெருமாளும் அரிராமர்தானெழுந்தார்
வாகுவலயந்தோளில் மகுடமணிமுடியில்
வாளுகளும்கத்திகளும் வலதுகையிற்றானணிந்தார்
அம்புவில்லுந்தானெடுத் தம்புறாத்தூணிமுதுகணிந்து
சட்டைதமான்வசாகபாய் தாமணிந்தார்ராசர்களும்
சிறுஉண்டைசுண்டுவில்லும் சிங்காணிப்பூச்சுவில்லும்
கண்டகோடாலிகளும் கவுண்டுக்கல்சக்கரமும்
வச்சிரகெதையணிந்தான் மதவீமராசனவன்
தண்டாயுதமெடுத்தார் கத்திவேல்தானெடுத்தார்
சண்டைக்குழுவஸ்திபமாய் சமர்த்தாவெளியானார்கள்
அருச்சுனனதுவறிந்து ஆயாண்டையோடிவந்தான்
மாயன்பெருமாளே மலரடியில்யான்சரணம்
அல்லியவளண்டோ அமருக்குப்போகிறீரோ
அவள்மேலேயம்புபட்டால் ஆவியுருகிவிடும்
சீவனிழந்திடுவேன் செலவழிந்துபோவேனென்றான்
மாண்டுமடிந்திடுவேன் மாதருக்குப்பாணம்பட்டால்
எந்தவிதமானாலும் இட்டுவரவேண்டுமையா
பொற்கொடிமாதரை பிடித்துவந்துசேருமையா
நல்லது அருச்சுனரே நமக்குத்தெரியவரும்
எந்தவிதமானாலும் அழைத்துவந்துசேர்க்கிறேன்போ
உன்மனதுக்கிசைந்தபடி மன்னவனேசெய்கிறேன்போ
என்றதுசொல்லினார் எம்பெருமாளாண்டவரும்
அப்போது அருச்சுனனும் ஆணழகன்தானெழுந்து
வெற்றிமதயானை வீமனண்டையோடிவந்தான்
மதகரியான்வீமனுக்கு வணங்கிநமஸ்கரித்தான்

அண்ணுமதவீமா அடியேனொருவார்த்தை
அல்லியவள்மேலே அமருக்குப்போறீரோ
அண்ணு அவள்மேலே அம்புதொடுக்காதீர்
வில்வித்தைசெய்யவேண்டாம் மெல்லியந்த அல்லியரை
தந்திரமாய்ப்பிடித்து தமயரேகொண்டுவாரும்
என்றுதொழுதானே எழில்விசயனருச்சுனனும்
அப்போதுவீமராசன் ஆனழகன்ஏதுசொல்வான்
நல்லதுதம்பியரே நமக்குத்தெரியவரும்
என்றுசொல்லிமதவீமன் ஏறினன்தேர்மேலே
ஏறினர்தேர்மேலே எடுத்தார்நெடுங்குடையை
மூத்துக்குடைகளும் மூழுவயிரநற்குடையும்
பட்டுக்குடைகளும் பலதிசையுந்தான்பிடித்தார்
கிருஷ்ணாதுதேர்மேலே கெருடக்கொடிபறக்க
வீமாதுதேர்மேலே வீரசிங்கக்கொடிபறக்க
நகுலாதுதேர்மேலே நாமக்கொடிபறக்க
சகாதேவன்தேர்மேலே சாஸ்திரக்கொடிபறக்க
அச்சுகிறுகிறென்னும் யானைநெடுந்தேரசையும்
வண்டில்கிறிச்சியிடும் மதயானைகோஷ்டமிடும்
குதிரையனுமானிக்கும் கோடிமன்னர்சத்தமிட
யானைசேனைபரிவாரம் அடங்கலும்வருகிறதே
செந்தூளெழும்புவது சூரியனைக்கப்பிற்று
கருந்தூளெழும்புவது கதிரோனைக்கப்பிற்று
மண்தூளெழும்புவது மண்டலத்தைக்கப்பிற்று
அடிபடுதேராயபேரி அந்தகாந்தானதிர
வெண்கலப்பேரிகைதான் விருதுமுழங்கிற்று
சண்டைசண்டையென்று சண்டைபேரியடிபடுதே
வெற்றிவெற்றியென்றுசொல்லி வெற்றிநகாரடிபடுதே
ரணங்கள்ரணங்களென்று ரணபேரியடிபடுதே
கோடைகாலத்திடிபோலே குமுறுதேராயபேரி
அடிவானத்திடிபோலே அடிபடுதேராயபேரி
அண்டங்கிடுகிடென்ன அடிபடுதேராயபேரி
மண்தூளுஞ்செந்தூளும் மண்டலத்தைக்கப்பிற்று
வருகிறசெனங்களெல்லாம் மட்டுமிதங்களில்லை
பட்டணத்தைதான்கடந்து பாளையம்வருகிறதே
யூகம்பிரிந்தார்கள் யுத்தங்கள்செய்யவென்று
வந்துமுனைகொடுத்தார் வளம்பெரியசேனையெல்லாம்

இருதாத்துப்பாளையங்கள் எட்டிநெருங்கிறதே
உத்திபிரித்தார்கள் யுத்தமும்பண்ணுகிறார்
வில்வளைத்துநாணிபூட்டி வேணபாணந்தொடுத்தார்
சரமேற்சரம்பொழிந்தார் சாமர்த்தியமுள்ளவர்கள்
அமாதரும்சமாதரும் சமாதரும்அமாதரும்
கலிங்கர்தெலுங்கர்களும் தெலுங்கர்கலிங்கர்களும்
கன்னடியர்வன்னியர்கள் வன்னியர்கள்கன்னடியர்
சத்தியரியர்முத்திரியர் முத்திரியர்சத்திரியர்
யானையொடியானைதாக்க அசுவத்தொடுஅசுவந்தாக்க
ஒட்டகமும்ஒட்டகமும் ஒன்ருகப்போர்செய்யும்
ஒருவர்க்கொருவர்தான் யுத்தங்கள்பண்ணுகிறார்
எட்டிற்றேதல்லசண்டை எழும்பிற்றேராயபேரி
மூள்கிறதேநல்லசண்டை முழங்கிறதேராயபேரி
வந்துமுனைகொடுத்தாள் வாழ்வரசியல்லியம்மாள்
வெற்றிமதயானை வீமராசன்தான்பார்த்து
வந்துவளைத்தானே வல்லிடிபோல்தேர்திருப்பி
தேரைதிருப்பிக்கொண்டான்செங்கையில்வில்லெடுத்தான்
வில்வளைத்துநாரிபூட்டி வில்லேகுணத்தொனிசெய்து
அம்புதொடுத்தானே அல்லியவள்மேலாக
வாரிப்பொழிந்தானே வளம்பெரியஅஸ்திரத்தை
வாயுவாஸ்திரங்களுடன் வருணஸ்திரங்களுந்தான்
இமையாஸ்திரங்களுட னிந்திராஸ்திரங்களுந்தான்
சூரியனதுஅஸ்திரமாம சுப்பிரமணியர்அஸ்திரமாம்
ராமச்சந்திராஸ்திரமாம் லக்குமணாஸ்திரமாம்
மூடுபனிபோலாக முடுகிவிட்டான்பாணமது
பாணம்வரும்வேகாளம் பார்க்கமுடிபோகாது
சரவருஷம்போலாகச் சரமேற்சரந்தொடுத்தான்
கண்டாளே அல்லியம்மாள் கண்கள்சிவந்தாளே
சீறியெரிபறந்து சிங்கத்தைப்போற்கதும்பி
கழுத்திலேமங்கிலியங் கட்டினது ஆடாசொல்
திருட்டுப்பயலேயுன் ஜீவன்பறித்திடுவேன்
சண்டிப்பயலேயுஞ் சமர்க்தையழிப்பேன்பார்
என்சமர்த்துஞ்சேவகமும் இப்போதெரியும்பார்
அல்லிபெயரைச்சொன்னல் அழுதபிள்ளைவாய்மூடும்
அல்லிபெயரைசசொன்னல் அண்டாண்டங்கிடுகிடென
அல்லிபெயரைச்சொன்னல் கல்லுதெய்வங்கூத்தாடும்

அரை நாழிகொள்ளையிலே அந்தகனூர்சேர்த்திடுவேன்
தேரைத்திருப்பினாள் செங்கையிலேவில்லெடுத்தாள்
பம்பரம்போலாகப் பாரதந்திருப்பி
சக்கரந்திகிரிபோலே சமர்த்துடனேதேர்திருப்பி
வில்வளைத்து நாணிபூட்டி விட்டாள்சரபாணம்
தொட்டாளேவில்லதனை தொடுத்தாளேசரபாணம்
விட்டாள்சரபாணம் மேகங்கள்தான்மறைய
ஆகாயமுள்ளதெல்லாம் அம்பாலேபந்தலிட்டாள்
அம்புவரும்விதங்கள் ஆற்றமுடிகூடாது
பாணம்வரும்விதங்கள் பார்க்கமுடிகூடாது
கார்த்திகைமாதத்திலே கனத்தமழைவந்ததுபோல்
ஐப்பசிமாதத்திலே அடர்ந்தமழைபெய்வதுபோல்
சோனைமழைபோலே சொரிகிறாள்பாணங்களை
அக்கினியாஸ்திரங்கள் அனந்தம்பொழிகிறாளே
நெல்லிப்பழம்போலே நெருங்கிற்றேகொப்பளங்கள்
அருநெல்லிபழம்போலே அஸ்தமெல்லாங்கொப்பளிக்க
நான்குநாள்மட்டாக நல்லசண்டைபண்ணுகிறார்
தன்மேல்வரும்பாணமெல்லாம் சங்கரிப்பான்வீமராசன்
ஒருவர்விட்டபாணமது ஒருவர்விலக்கிக்கொள்வார்
இருவர்சமானமாக இனியசண்டைபண்ணுகிறார்
வீமன்விடும்பாணத்தினால் வெகுசனங்கள்மாளுகுது
யானையின்மேலிருந்ததுரை அறுந்துவிழுகிறார்கள்
குதிரைமேலிருந்ததுரை கொக்கரித்துவிழுகிறார்கள்
ஒட்டகமேலிருந்ததுரை ஓலமிட்டுவிழுகிறார்கள்
அம்மாடியென்றுசொல்லி அறுந்துவிழுகிறார்கள்
தென்னங்காய்போலாகச் சேனைதலையுருவிட்டான்
பனங்காய்கள்போலாகப் பறித்தெறிவான்வேணதலை
அறுந்ததலைகளெல்லாம் அம்மானாடுதங்கே
பெட்டியும்பேழைபோலே பலிகொடுத்ததலைபோலே
சட்டிகள்பானைபோலே தலைகளுருளவிட்டான்
அம்மாடியென்றுசொல்லி அனேகந்தலையுருளும்
கால்களற்றுப்போய்விடுதே கைகளற்றுப்போய்விடுதே
ஈரல்குடல்சரிந்து இருநிலத்தில்விழுவாரும்
மணிக்குடல்கள்தான்சரிந்து மண்ணில்விழுவாரும்
நிலப்பூச்சிபோலாக நிலத்தில்நசுங்கலுற்றார்
சாகிறவணிபோலே தரையில்நசுங்கலுற்றார்

மாண்டசனங்களென்றால் செப்பமுடியாது
அல்லின்றன்பாளையங்கள் அலைந்தலைந்தோடுகுது
சண்டைபண்ணமாட்டாமல் சலாம்பண்ணியோடலுற்றார்
ஆயுதத்தைதூரம்வைத்து அனேகசலாம்பண்ணவாரும்
பண்டாரமென்பாரும் பரதேசியென்பாரும்
நாமத்தைக்காட்டுவாராம் தான்தாசனென்பாராம்
பூணூலைக்காட்டுவாராம் பிராமணனென்பாராம்
பிச்சையிரந்துண்ணப் புறப்பட்டோமென்பாராம்
ஆயுதத்தைதூரவைத்து அருகேசலாம்பண்ணுவாராம்
ஐயோகோதெய்வமென்று அலைகிறதேபாளையங்கள்
வடுகரெல்லாம்நீளென்பார் வடதமிழர்தண்ணீரென்பார்
துலுக்கரெல்லாம்பாணியென்று சொல்லிப்புலம்புகிறார்
தண்ணீர்தண்ணீரென்று தவித்துப்புலம்புகிறார்
மார்பவளவுரத்தாறு வழியவிட்டான்வீமசேனன்
பிடாரியதுகோயிலிலே பலிகொடுக்குங்கடாக்களைப்போல்
அம்மையார்கோயிலிலே ஆடுவெட்டும்பாவனைபோல்
துள்ளுகிறதலைகளோ செருக்களங்கள்கொள்ளவில்லை
ரத்தாறுயோடினதே ரணமுண்டங்கொக்கரிக்க
இந்தவிதமாக யினியபோர்செய்வதிலே
தேவாதிதேவரெல்லாஞ் செப்புவாரோர்வார்த்தை
ராமாதுசண்டையென்பார் ராவணன்சண்டையென்பார்
சூரபதமர்சண்டை சுப்பிரமணியாசண்டையென்பார்
வீரபத்ரன்றன்னோடு வேள்விதக்கன்சண்டையென்பார்
யமனைப்போற்சண்டைசெய்வா ராருமில்லைமேதினியில்
வெற்றிமதயானை வீமனவன்பின்னிடையான்
நான்குநாள்மட்டும் நல்லசண்டைபண்ணுகிறான்
அல்லிப்பெருமாளும் ஆக்கரித்துப்பற்கடித்து
ஆலவாய்ச்சொக்கரென்னும் ஆண்டவரைத்தானினைந்
திவ்வியாஸ்திரத்தை தூபமிட்டுத் தானெடுத்தாள்
மந்திரதூபமிட்டு வீமன்மேல்வாங்கிவிட்டாள்
மார்பளவுவாங்கியே தோள்பிளக்கதொடுத்துவிட்டாள்
மேலிட்டுவருகிறதே வீமனதுதேர்மேலே
வாயில்நெருப்பெறிய வந்துவிழுந்தது
தேருமுடைந்தது செம்புரவிச்செத்தது
போட்டசட்டைவச்ரகபாய் பொடிபொடியாச்சுது
சட்டைதமான்வச்ரகபாய் தவுடுபொடியாச்சுது

சரீரங்களுள்ளதெல்லாம் சல்லடைக்கண்ணுச்சு
மானங்குலைந்தானே மதகரியான்வீமசேனன்
விழுந்துஎழுந்தவனும் வெட்கங்கெட்டோடிப்போனன்

ஸ்ரீ கிருஷ்ணபகவான் யுத்தம்.

மாயன்பெருமாளும் மலைராமர்கண்டுவிட்டார்
கைமோசம்வந்ததென்று கரியமால்தேர்திருப்பி
வந்துவேசண்டைசெய்தார் மயிலணையாள்முன்னுக
பம்பரம்போல்தேர்திருப்பி பாணந்தொடுத்துவிட்டார்
அல்லிப்பெருமாளும் ஆக்கரித்துப்பற்கடித்து
சொக்கரைத்தானினைத்து தொடுத்தாள்நெடும்பாணம்
இருவரிரதங்களும் இருநிலத்தில்தான்சுழல
விட்டாள்சரபாணம் மேகவண்ணர்தேர்மேலே
வாயுவாஸ்திரங்களது வருணஸ்திரங்களது
வச்சிரபாணத்தை வாரிச்சரம்பொழிந்தாள்
ஒன்றல்லஇரண்டல்ல ஒருகோடிபாணம்விட்டாள்
சூரியனைத்தான்மறைத்தாள் தொடுத்தவிதபாணமதால்
ஆகாயமுள்ளதெல்லாம் அம்பாலேபந்தலிட்டாள்
பெருமாளும்அல்லியரும் பிரியாதசண்டைபண்ணுர்
மாளுஞ்சனங்களென்றல் மட்டுமிதங்களில்லை
செத்தசனங்களென்றல் செப்பமுடிபோகாது
ஐயோகோதெய்வமென்று அலறுதுபாளையங்கள்
யானைமேலுள்ளவர்கள் அபயமிட்டுமண்ணைக்கவ்வ
குதிரைமேலுள்ளவர்கள் கொக்கரித்துமண்ணைக்கவ்வ
ஒட்டகமேலுள்ளவர்கள் ஓலமிட்டுக்கீழ்புரள
யானைத்தலைகளது அபயமிட்டுக்கீழ்புரள
குதிரைத்தலைகளது கொக்கரித்துத்தான்விழவே
ஒட்டகத்தின்தலைகளது ஓலமிட்டுக்கீழ்புரள
இந்தவிதமாக யினியசண்டைபண்ணுகிறர்
அலைகடல்சத்தம்போலே அபயமிட்டும்வெகுசனங்கள்
கூக்குரலாகிறதே கோஷ்டமிடும்பாளையங்கள்
அபயம்மபயமென்று அலைகிறதேவெகுசனங்கள்
வடுகரெல்லாம்நீளுஎன்பார் வன்தமிழர்தண்ணீரென்பார்
துலுக்கரெல்லாம்பாணிஎன சொல்கிறதேபாளையங்கள்
தன்ணீர்தண்ணீரென்று தவிக்கிதேபாளையங்கள்

அப்போது அல்லியம்மாள் அதிகமானகோபமதாய்
வச்சிரப்பாணந்தன்னை மந்திர தூபமிட்டு
மாயா துதேர்மேலே வரிந்துஇழுத்துவிட்டாள்
இந்திரலஸ்திரமாம் இரீபகவானஸ்திரமாம்
ராமச்சந்திர அஸ்திரமாம் நாராயண அஸ்திரமாம்
அக்கினியஸ்திரமாம் அநந்தம்பொழிகிருளே
ஒன்றல்லஇரண்டல்ல ஒருகோடிபாணம்விட்டாள்
வாரிப்பொழிந்தாளே வரம்பெற்ற அஸ்திரங்கள்
எடுத்துப்பொழிந்தாளே ஏழுலட்சம்பாணங்களை
விழித்தக்கண்சிமிட்டாமல் பொழிந்தாள்ஒருசாமம்
பாதாளமூடுருகப் பாணந்தொடுத்தாளே
ஆயன்சரீரமெல்லாம் அங்கம்பிளக்கடித்தாள்
மாயன்சரீரமெல்லாம் ரத்தமயமாக்கிவிட்டாள்
சல்லடைக்கண்போலே சரீரமெல்லாந்துளைந்துவீட்டாள்
மயிருக்கொருபாணம் மங்கைநல்லாள்தான்தொடுத்தாள்
வில்பிடித்தகைகளெல்லாம் மெத்தசிவப்பேரிற்று
க்கைகளுஞ்சோர்ந்திடவே கன்னியரும்பாணம்விட்டாள்
ஆகாயமுள்ளதெல்லாம் அல்லியரைக்கொண்டாடினார்
இந்தப்படியாக இடர்செய்யும்வேளையிலே
இவனேவெகுபாரம் என்றுஒருபாணமதை
இடிபாணமொன்றை யெடுத்தாளேயல்லியம்மாள்
மார்பளவுவாங்கியே தோள்பிளக்கதொடுத்துவிட்டாள்
வாயில்நெருப்பெரிய வந்துவிழுந்ததுகாண்
தேருமொடிந்துபோய் செப்புரவிநாலும்போய்
சட்டைத்மான்வச்ரகபாய் தவடுபொடியாகி
செங்கையில்வில்லழிந்து தேகசட்டைதானழிந்து
பநாதியாயோடுகிறார் பாரளந்தாரெம்பெருமான்
கைமோசம்வந்ததென்று கரியமாலோடிவிட்டா

சகாதேவன் யுத்தம்.

கண்டான்சகாதேவன் கரியமாலோடுவதை
தேரைத்திருப்பினான் செங்கையிலேவில்லெடுத்தான்
வந்துவளைந்தானே வல்லிபோல்சகாதேவன்
பேரிகையறைவித்து போயெதிர்த்தான் அல்லியுட
சண்டைபேரிகையறைந்து சமத்துடனேவந்தெதிர்த்து

கண்டாளே அல்லியவள் கண்கள்ரெண்டுந்தான்சிவக்க
ஒருபாணம்விட்டாளே உலகமெல்லாந்தானதிர
பேரிகையைக்கிழித்தாளே பெரியடமார்தான்கிழித்தாள்
இடிகளிடித்ததுபோல் இளையோனின்தேருடைத்தாள்
வச்சிரபாணம்விட்டு மார்பைபத்தலாய்க்கிழித்தாள்
விழுந்தானெழுந்திருந்தான்வெட்கங்கெட்டுஓடிவிட்டான்

சகாதேவன் அல்லியைப் புலிக்கூண்டு

செய்து பிடித்தது.

எந்தவிதத்தினலே இவளைச்செயித்திடலாம்
அடங்காதநீலிதன்னை அடக்கும்வழியெப்படிதான்
என்றுநிதானித்து இன்பச்சகாதேவன்
உள்ளங்கைசாஸ்திரத்தை உத்தியுடன்தான்பார்த்தான்
பாதாள அஞ்சனத்தைப் பார்த்தான்சகாதேவன்
பத்துசுற்றுபுலிக்கூண்டைப் பாங்குடன்கொண்டுவந்து
சூதுபண்ணியல்லியரைப் போனில்கடக்கவேண்டும்
இல்லாமற்போனல் இவளைஜெயிக்கமாட்டோம்
இவள்கையால்மாளுவது எல்லவரும்நிச்சந்தான்
சாஸ்திரத்தைதான்பார்த்துத் தளர்ந்தான்சகாதேவன்
செருக்களத்தைவிட்டவனுஞ் சீக்கிரமாய்போகலுற்ருன்
மாளிகையில்போய்ச்சேர்ந்தான் மன்னன்சகாதேவன்
விசுவபிர்மாதச்சாகளை விரைந்தோடியழைமென்ருன்
அப்போதுகாவலர்கள் அழைத்தோடிவந்தார்கள்
ஆயிரந்தச்சர்களை அழைத்துவந்துவிட்டார்கள்
வந்துபணிந்தார்கள் மன்னன்சகாதேவனை
எம்மையழைத்தபணி யாதென்றுகேட்டார்கள்
நிமிஷமரைநாழிகையில் நிருமிப்பீர்புலிக்கூண்டு
ஒருபக்கம்பார்த்தாலே உச்சிதத்தேர்போலே
மறுபக்கம்பார்த்தாலே மச்சிவீடுபோலாக
மற்ருெருபக்கமது வளம்பெரியகோட்டையதாய்
பத்துசுற்றுக்கோட்டையதாய் பக்கங்கதவுவைத்து
வாசலுக்கும்வாசலது வச்சிரத்தாள்போட்டு
சாவியுஞ்சங்கிலியுந் தாப்பாளும்வையுமென்ருன்
ஆயிரத்தச்சர்களும் அக்ஷணமேசொப்பனிட்டார்
நிமிஷமரைநாழிகையில் நிருமித்தார்விசுவபிர்மா

சோடித்தோமென்று தொழுதவர்போனார்கள்
அப்போதுசகாதேவன் அங்ஙனமேதானெழுந்து
தேரைத்திருப்புகிற சூதனைத்தானழைத்து
குதிரையலங்கரித்துக் கூண்டிலேகட்டுமென்றான்
சாத்திரக்கொடிவிருதை சமர்த்துடனேகட்டுமென்றான்
அப்போதுபகவான் அதிதுரிதமுடனெழுந்து
பாராசாரிபுரவிகளைப் பாங்காயலங்கரித்து
கூண்டுக்கழகாக குதிரைகளைக் கட்டினானே
சாஸ்திரக்கொடிவிருதை சமர்த்துடனேகட்டினானே
அங்கேசகாதேவன் அம்புவில்லுங்கைபிடித்து
ஏறினான்கூண்டிலே யெடுத்தடித்தார்பேரிகையை
திறவுகோல்கைபிடித்து சூதனவனேறினானே
கூண்டைத்திருப்பியே கொண்டுபோனான்பாளயத்தில்
செயம்பெற்றசகாதேவன் செங்கையிலேவில்லெடுத்தான்
சண்டைசண்டையென்றுசொல்லிசண்டைபேரியடிபடுது
வெற்றிவெற்றியென்றுசொல்லி வெற்றிநகாடிபடுது
ரணங்கள்ரணங்களென்று ரணபேரியடிபடுது
கண்டாளே அல்லியம்மாள் காற்றைப்போல்தேர்திருப்பி
வந்துவளைந்தாளே வல்லிடிபோல்வில்வளைத்தாள்
எட்டுதேநல்லசண்டை எழும்புதேராயபேரி
மூளுதேநல்லசண்டை முழங்குதேராயபேரி
விட்டாள்சரபாணம் மேனியெல்லாந்தான்மறைய
ஒருவர்விடும்பாணம் ஒருவர்விலக்கிக்கொள்வார்
இருவர்சமானமாக இருவர்சண்டைபண்ணுகிறார்
அர்த்தசந்ரபாணமது அல்லியொருபாணம்விட்டாள்
சகாதேவன்வில்முரிய சமர்த்துடனேபாணம்விட்டாள்
வேகாளமாகவந்து வில்லைமுறித்ததுகாண்
வில்லுமுறியவே வேந்தன்சகாதேவன்
வாள்கடகந்தானெடுத்து மண்ணிற்குதித்தானே
கண்டாளே அல்லியம்மாள் கடுகியவள்கோபமதாய்
கேடயமும்வாளெடுத்துக் கெர்ச்சித்துகீழ்குதித்தாள்
முன்கந்துபின்கந்து முப்பத்திரண்டுகந்து
இந்திரசாலவித்தையினால் எழும்பிவாரான்சகாதேவன்
அப்போது அல்லியவன் ஆரணங்குவதுசொல்வாள்
காணங்கள்போடுகிறாள் கைலாகுபண்ணுகிறாள்
கருடப்பாச்சல்தானெடுத்துக் கடுகவேபாயுகிறாள்

புலியும்புலியுமாய்ப் போயெதிர்த்தபாவனைபோல்
யானையும்புலியுமாய்ச் சீறியெதிர்த்ததுபோல்
சிங்கமுஞ்சிங்கமுமாய்ச் சீறியெதிர்த்ததுபோல்
கொக்கரித்தூவுளியிட்டுக் கொற்றவனும்பாயுகிறான்
துள்ளுமான்குட்டியைப்போல் துள்ளுகிறாளல்லியம்மாள்
ஓடியொளிப்பவன்போல் உபாயமாய்ச்சகாதேவன்
கூண்டிற்குதித்தானே கொப்பனவேசகாதேவன்
ஓடிப்போகிறானென்று உத்தமியாளல்லியம்மாள்
கூடக்குதித்தாளே கூண்டிலேபாய்ந்தாளே
முன்வாசற்புகுந்தவனும் பின்வாசலோடலுற்றான்
அவ்வாசற்பாய்ந்தாளே அல்லிமலர்நாயகியாள்
மூன்றும்வாசலிற்புகுந்து நான்காம்வாசலோடலுற்றான்
அவ்வாசலிற்புகுந்து அல்லியம்மாள்தேடுகிறாள்
எங்கேபோனான்கள்ளனென்று இளங்கொடிதேடுகிறாள்
ஐந்தாவதுவாசலிலே அல்லியம்மாள்தான்புகுந்தாள்
அவ்வாசற்கதவடைத்து அருந்தாப்பாள்பூட்டினனே
சந்தற்கதவடைத்து தாப்பாளும்பூட்டிவிட்டான்
ஐந்துவாசற்கதவடைத்து ஆணழகன்வெளியானான்
அகப்பட்டாளல்லியென்று அடியுமென்றான்பேரிகை
ஜெயங்கள்ஜெயங்களென்று ஜெயபேரிபோடுமென்றான்
அகப்பட்டாளல்லியென்று அடிபடுதோராயபேரி
சிக்கினாளல்லியென்று அடிபடுதோராயபேரி
அத்தண்டபேர்களும் அல்லோருங்கேட்டுவிட்டார்
சந்தோஷப்பட்டார்கள் தருமராசன்சேனையெல்லாம்
தப்பிமீந்தஜனங்களெல்லாம் தனிமதுரையோடிவிட்டார்
தேன்மொழியாள்சேனையது தென்மதுரையோடினதே
அப்போசகாதேவன் ஆனந்தமாய்வருகிறானே
கூண்டைத்திருப்பியே கொண்டுவந்தான்பட்டணத்தில்
அருச்சுனன்தன்னருகே அடிபணிந்துதெண்டனிட்டா
தெண்டனிட்டசகாதேவன் சொல்லுவானொருவார்த்தை
அல்லியுடன்சண்டைபண்ண அமருக்குப்போனபோது
அகங்காரப்பெண்புலிதான் அகப்பட்டதென்கையிலே
வேங்கைப்புலிதனையே விடுகூண்டிலடைத்துவந்தேன்
மதுராபுரியாண்ட வாழ்வரசியல்லியரை
தேரேறிசண்டைசெய்து துரைமகளைகொண்டுவந்தேன்
அவ்வார்த்தைதான்கேட்டு அருச்சுனன்மனமகிழ்ந்தான்

சந்தோஷப்பட்டானே தாமந்தவாழ்மார்பன்
அன்னநடைதுரோபதையாம் ஆரணங்கைதானழைத்து
நாகமடைத்தையரை நறுநுதலைத்தானழைத்து
சோரவளநங்கை சுபத்திரையைத்தானழைத்து
நான்செய்தகாரியத்தை நாயகமேநீர்கேளீர்
மாயவரும்யானுமாக வனவாசம்போனபோது
தீர்த்தயாத்திரைபோகையிலே செய்தபிழைநீர்கேளும்
ஆதிசிவனைநான் அடிவணங்கவேண்டுமென்று
மதுரைபுரியிலேமாணிக்கச் சொக்கலிங்கம்
பிட்டுக்குமண்சுமந்த பித்தரைக்காணவென்று
மதுரைக்குப்போகின்ற வழியிலேயங்கொருவன்
அழுதகண்ணுஞ்சிந்தையுமாய் அங்குபுலம்பிநின்றான்
ஏதுக்கழுகின்றாய் என்றவனைநான்கேட்டேன்
மதுராபுரியாளும் வாழ்வரசியல்லியற்கு
அன்றாடகமுத்தெடுத்து அளப்பானும்நேரிழைக்கு
படிமுத்துக்குறைந்ததென்று பாரில்விழுந்தழுதான்
அல்லியரசாணி அரசுநிலையாள்கிறதும்
அவள்பிறந்தவண்மையது விவரஞ்சொல்லுமென்றேன்
ஆருயிரம்பாண்டியர்கள் அரியதவஞ்செய்ததுவும்
அகிலாண்டசொக்கலிங்கம் அங்கயற்கண்கிருபையால்
அல்லியிலைமேலே அவள்பிறந்தவண்மைகளும்
ஏழுபிராயத்திலே எதிர்த்துவந்தநீன்முகனை
வெட்டித்தலைதுணித்து வீரபட்டங்கட்டினதும்
கொள்ளவருமாப்பிள்ளைக்கு குறடாகொடுப்பேனென்று
சேரவருமாப்பிள்ளைக்குச் சேருபந்துதருவேனென்றும்
ஆளவருஞ்சம்பந்தியையடிப்பேனென்றாள்சேருபந்தால்
மூச்சுகொட்டாதெருவிற்கட்டி மொய்குழலாண்டிருந்தால்
இவ்வார்த்தையான்கேட்டு யென்மனதுதாளாமல்
கட்டினவிருதறுத்துக் கலியாணம்செய்யவேண்டும்
என்றுமனதிலெண்ணி எட்டுநாள்காத்திருந்தேன்
பத்தினியாளல்லியவள் பார்வேட்டைவந்தாளே
பெண்வேஷம்போட்டல்லவோ பின்னேதொடர்ந்தேனே
வரிபுரவிமேலேறி மான்வேட்டையாடையிலே
ஆனந்தமாரியற்கு அம்புபொறுக்கித்தந்தேன்
வேட்டைகளாடியே மெத்தக்களைத்தவளும்
ஆலமரத்தடியில் அங்கேபடுத்தாளே

காலும்பிடித்தேனே கதையொன்றுசொன்னேனெ
அடையாளங்காட்டவென்று யாழிகழற்றிவைத்தேன்
மற்றுநாள்குறத்தியிடம் மருந்துக்குளிகைகொண்டு
பித்தப்பிடித்துப் பெரும்பயித்தியங்கொண்டவன்போல்
அல்லியதுபட்டணத்தில் அழகுதிருக்குளத்தில்
வண்ணமருந்தெடுத்து வளமபாடியானுரைத்தேன்
அனேகந்தாதிமாரைவிட்டு ஆற்றிற்புரட்டுமென்றாள்
அதனாலுஞ்சாகாமல் அல்லிநினைவாயிருந்தேன்
தூக்குமரத்திலே தோகையரும்போடுமென்றாள்
உபாயமாய்ச்செங்கமல உத்தமியைக்கொன்றுவிட்டேன்
காளியம்மன்கோவிலிலே சாவுபடச்சொன்னாளே
பூதக்கிடங்கிலே போட்டடைக்கச்சொன்னாளே
பூதம்பணிமாறப் பிழைத்திருந்தேனவ்விடத்தில்
மாயனொருபெண்ணாகி வாவழைத்துக்கொண்டுவந்தார்
ஆண்டியைப்போல்வடிவெடுத்து அல்லிதலைவாசலிலே
வண்ணமட்டலெடுத்து மாதுபிச்சைவாங்கிவந்தேன்
மாயன்பிடாரனானார் வண்ணவிதப்பானேன்
பாம்புருவாய்போயிருந்து படுக்கையில்தூங்கினேன்
பொற்கொடிமாதினுக்கும் புத்திரனுண்டாக்கிவைத்தே
மற்றொருவேஷமது மற்றுநாள்வடிவெடுத்தோம்
பெருமாளந்தமாயவனார் பிராமணப்பெண்ணானார்
மெத்தகிழவனைப்போல் வேதியனார்வேஷங்கொண்டார்
ஆரணியமானகாட்டி லங்குதண்ணீர்பந்தல்வைததோம்
அவ்வேஷத்தன்னுடனே அரண்மனையிற்போயிருந்தே
தேவேந்திரனைநோக்கி செய்தேன்பெருந்தபசு
யானைத்தலைபோலே அழகானமங்கிலியம்
தும்பிக்கைபோலாகத் திருமங்கிலியச்சரடும்
கொடுந்தனுப்பவேணுமென கொப்பெனத்தபசுசெய்தே
தேவேந்திரபகவான் சித்தமிரங்கியென்மேல்
மாய்கைத்திருநீறும் மங்கிலியந்தந்துவிட்டார்
மாலைப்பசுங்கிளிக்கு மங்கிலியந்தரித்துவிட்டேன்
யாருமறியாமல் அங்கனமேதானெழுந்து
கட்டினவிருதறுத்துக் கடுகியேவந்துவிட்டேன்
நான்குமாதங்கெற்பந்தான் நடக்குதிந்தமாதினுக்கு
இன்னவனென்றுசொல்லி என்னையறியமாட்டாள்
கழுத்திலேமங்கிலியம் கட்டினவனைத்தெரிய

தரணியுள்ளராசர்களைச் சத்தியம்பண்ணவென்று
மண்டலத்தரசர்களை வாவென்றுதானழைத்தாள்
நெய்தனைக்காச்சியே கைதனை துவையுமென்ருள்
மண்டலத்துராசரெல்லாம் வந்துசத்யஞ்செய்தார்கள்
வெற்றிமதயானை வீமன்குடித்துவிட்டான்
ஆகையினாலேயவள் அமருக்குயிங்கேவந்தாள்
தருமமூடியழகன் சகாதேவன்பிடித்துவந்தான்
புலிக்கூண்டிலேயடைத்து பூவையைக்கொண்டுவந்தான்
இந்தவயணமெல்லாம் ஏந்திழைக்குநீயுரைத்து
நம்பிக்கைவாங்கியே நாயகியைவெளிவிடுங்கள்
கோபங்களாற்றுங்கள் கொம்பனையாள்நாயகியை
மனந்தேறச்சொல்லுங்கள் மாலையிடப்பாருங்கள்
சத்தியத்தைச்செய்தபின்பு தையலைவிட்டுவிடும்
ஆயிதத்தைவாங்கியபின் அப்புறத்தில்விட்டுவிடும்
என்றதுசொல்லியே எழில்விஜயனனுப்பிவைத்தான்

துரோபதை முதலானவர்கள் அல்லியரசாணியை

மாலையிடச் செய்தது

அப்படியேயாகுதென்று அன்னநடைமாதர்களும்
துரோபதைநாககன்னி சுபத்திரைவருகிருர்கள்
மந்தாரக்குந்தியம்மாள் மற்றுமுள்ளோர்வருகிருர்கள்
வாசலும்வாசலது படியேழுந்தான்கடந்து
புலிகூண்டுதன்னருகே போய்ச்சேர்ந்தார்மாதரெல்லாம்
தோராவடிவழகி துரோபதையாளோதுசொல்வாள்
ஆடியம்மாளே அழகானகூண்டிலேதான்
இப்பெரியகூண்டிலேதான் இருக்கிறவள்யார்காணும்
வாயைத்திறந்துநீ வந்தவகைசொல்லுமென்ருள்
மகுடத்துரைச்சிவள் வாய்திறந்தேதுசொல்வாள்
என்னசெய்வேனாச்சியரே என்தலைவிதிப்பயனே
யாருக்கடங்காமல் அரசுநிலைசெய்திருந்தேன்
பெண்சென்மமெடுத்ததுதான் போதுமம்மாளெந்தனுக்கு
ஒருவர்வயிற்றிற்பிறந்ததில்லை வன்கொடுமைசெய்ததில்லை
குடலிற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை
ஓடுகிறதண்ணீரிலே உள்ளமணற்சேருமுண்டு

அடிக்கிறகாற்றதனில் அலைகாற்றில் தும்புமுண்டு
காலகாலகண்டருக்குக் கண்டத்திற்கறுப்புமுண்டு
குண்டுமணிக்காணுலுங் கொஞ்சங்கறுப்புமுண்டு
மயிரேகறுப்பொழிய மற்றக்கறுப்புமில்லை
புருவங்கறுப்பொழிய பின்னைக்கறுப்புமில்லை
ஆறுயிரம்பாண்டியர்கள் அரியதவஞ்செய்தார்கள்
மாளுவோமென்றுசொல்லி மலைமேற்றவமிருந்தார்
மாளாதேயென்றுதான் மலரிலேபெண்பிறந்தேன்
அல்லியிலைமேலே ஆச்சியரேயான்பிறந்தேன்
ஏழுபிராயத்திலே யெதிர்த்துவந்தநீன்முகனை
வெட்டத்தலைபிளந்து வீரபட்டஞ்சூட்டிக்கொண்டேன்
நீன்முகனைக்கொன்றுநான் நீலிபட்டங்கட்டினேனே
எல்லையரசாண்டு இருந்தேனம்மா இக்காலம்
கொள்ளவருமாப்பிள்ளைக்குகுறடகொடுப்பேனென்றேன்
சேரவருமாப்பிள்ளைக்குச் சேருபந்துதருவேனென்றேன்
ஆளவருஞ்சம்பந்தியை அடிப்பேனேசேருயந்தால்
பொம்மைவிருதுகட்டி பூமியரசாண்டிருந்தேன்
எவனேதிருட்டுப்பயல் என்கழுத்தில்மங்கிலியம்
தாலியைக்கட்டினனே தனிவிருதையறுத்துவிட்டான்
அறிந்துபிடிக்கவென்று அனைவரையும்யானழைத்தேன்
நெய்தனைக்காசசியே கைதனை துவைபுமென்றேன்
காய்ந்ததொருநெய்தனிலே கையைத்துவைக்காமல்
நெய்தனைக்குடித்துவிட்டான் நிர்மூடனுனவனும்
சண்டைக்குவந்தயிடத்தில் சமர்த்துகளைக்காட்டாமல்
என்னைமோசஞ்செய்து இக்கூண்டிலடைத்துவிட்டான்
சரியாகநிற்கவேண்டுஞ் சண்டைகளைச்செய்யவேண்டும்
எதிரேயிருந்தலவோ என்சமர்த்தைப்பார்க்கவேண்டும்
என்னைமோசஞ்செய்தலவோ இக்கூண்டிலடைத்தானே
வெளியேவிடச்சொல்லும் வீரியத்தைக்காட்டுகிறேன்
இந்தமொழிகேட்டு ஏதுசொல்வாள் துரைபதையாள்
கழுத்திலேமங்கிலியங் கட்டினவண்மையெல்லாம்
அந்தஅதிசயத்தை யாரணங்கேசொல்லுகிறேன்
காட்டிலேநீவேட்டை கடுகிவரும்போது
பெண்வேஷம்போட்டுந்தன் பின்னேதொடர்கிலையோ
அம்புபொறுக்கிலையோ ஆரணங்கேயுந்தனுக்கு
காலும்பிடிக்கலையோ கதையொன்றுசொல்லலையோ

பித்தம்பிடித்தவர்போற் பெருமருந்துகையெடுத்து
வண்ணமருந்தெடுத்துத் தண்ணீரிலுறைக்கலையோ
அல்லிப்பெருமாளே நீ அதிககோபங்கொண்டவோ
ஆற்றிலேபோட்டு நீ அவரைப்புரட்டலியோ
தூக்கிலேபோடுமென்றூர் துய்யபசுங்கிளியே
காளியம்மன்கோயிலிலே காவுகொடுக்கச்சொன்னாய்
பூதக்கிடங்கிலேதான் போட்டுஅடையுமென்றாய்
மற்றுநாள்தெய்வகன்னி மணவானனென்றழுது
தன்புருஷனென்றுசொல்லி தானழைத்துப்போகலையோ
ஆண்டியரைப்போலேவந்து அல்லியேயுன்வாசலிலே
மடலூர்ந்துஉந்தனது வாசலவந்திருக்கும்போது
பாம்புகளைவிட்டு பண்டாரத்தைக்கொல்லுமென்றாய்
யானையைவிட்டு நீ ஆண்டியைக்கொல்லுமென்றாய்
பாம்புபிடாரனைப்போற் பத்தினியேவருகிலையோ
பாம்பாகவேஷங்கொண்டு படுக்கிலையோஉன்னிடத்தில்
உன்னுடன்போகஞ்செய்து உமக்குமந்தனுக்கிவைத்தார்
பார்ப்பானைபோலேவந்து பணிமாலைசூட்டலையோ
தாலிதரித்தவர்தான் தருமர்தம்பியருச்சுனர்காண்
உன்னை-தாலிகட்டிவந்துதான் சமர்த்தென்றுபாராதே
அல்லியிலைமேலே அதியசமாயகித்ததுவும்
மெத்தப்பெரிதென்று மெல்லியமேபாராதே
நான்-அக்கினியிற்பெண்பிறந்த அதிசயத்தைநீர்கேளு
வயிற்றிற்பிறந்ததில்லை வன்கொடுமைசெய்ததில்லை
குடலிற்பிறந்ததில்லை குலக்கொடுமைசெய்ததில்லை;
சந்திரற்குமச்சமுண்டு சற்றேகருப்புமுண்டு
யான்-மயிரேகறுப்பொழிய மற்றைக்கறுப்புமில்லை
புருவங்கறுப்பொழிய பின்னைக்கறுப்புமில்லை
மாசில்லாப்பெண்பிறந்தேன் வளருகின்றேனக்கினியில்
நெருப்பிற்பிறந்தேனே நீலப்பசுங்கிளியே
பாஞ்சாலனெக்ஞயத்தில் பிறந்தபதிவிரதை
மந்திரகிரிமேடையிலே மச்சறையிற்பெண்பிறந்தேன்
அருச்சுனரைமாலையிட அக்கினியிற்பெண்பிறந்தேன்
அரக்குமாளிகையில் ஐவரிறந்தாரென்று
சொல்லும்பிறந்தது துயரமிட்டான்என்தகப்பன்
ஐவரிறந்தாரென்று ஆயாசப்பட்டிருந்தார்
யான்-மீறிவளர்ந்தேனே மெல்லிருதுவானேனே

போதவளர்ந்தேனே பிள்ளைபெரும்நாளானேன்
கொள்ளவேவந்தவர்கள் கோடானகோடியுண்டு
மாலையிடவந்தவர்கள் மட்டுமிதங்களில்லை
அப்போது அர்ச்சுனரும் அன்றுஒருபார்ப்பானுய்
குஷ்டரோகிபோலாகக் கொற்றவனுமவேஷங்கொண்டு
பாஞ்சாலன்பந்தலிலே மார்ப்பான்போல்வந்திருந்தார்
அப்போதுஎன்தகப்பன் ஆலோசனைசெய்துசொல்வார்
வில்லைவளைத்தவர்க்கு மெல்லியளைத்தருவேனென்றூர்
அவ்வார்த்தைதானகேட்டு அரசுமுடிராசாக்கள்
மண்டலத்திராசாக்கள் வந்தல்லோவில்வளைத்தார்
திக்காசாண்டதொரு துரைகளெல்லாம்வில்வளைத்தார்
தேசத்துராசாக்கள் சிலையைவளைத்தார்கள்
வானவர்கோனிந்திரனும் வந்துசிலைவளைத்தார்
விண்ணுலகராசாவும் வில்லைவளைத்த நில்லை
தேசத்துராசாக்கள் சிலையைவளைத்ததில்லை
அரசுமுடிராசாக்கள் அவ்வில்வளைத்ததில்லை
திக்கரசுராசாக்கள் சிலையைவளைத்ததில்லை
வெட்கங்கெட்டாரே வேந்தாந்தராசாக்கள்
யாராலுமுடியாது அவவில்வளைப்பதற்கு
வந்தவந்தராசாக்கள் மானங்குலைந்தார்கள்
அப்போதுஉன்புருஷன் அருச்சுனராசதுரை
பார்ப்பானைப்போலிருந்த பார்த்தீபன் தானெழுந்து
தேவாதிதேவர்மெச்ச துரைகளெல்லாம் பார்த்திருக்க
விஷ்ணுவும்பிர்மாவும் வியர்த்துநடுங்கிடவே
அண்டாண்டந்தானதிர அவ்வில்வளைத்தாரே
நீர்பார்த்துமீனெய்தான் நித்திலங்கும்பூமுடியான்
என்னைமாலையிட்டாரே எழில்விஜயனருச்சுனரும்
எனக்கொருகுறைவுமுண்டோ எனதுடையதங்கையரே
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வாள் நாககன்னி
அல்லியரே அப்பியரே அதிசயத்தை நீகேளும்
நான்-இந்தவுலகமல்ல இந்நாட்டுமனுஷியல்ல
நாகலோகம்பெண்பிறந் நாககன்னி நானல்லவோ
ஊருமொருமாணிக்கம் பேருமொருமாணிக்கம்
மாணிககநந்தன்னுலே மடைபருக்கும்பொற்பாவை
என்னைவத்துமாலையிட்டார் இயலானஉன்புருஷன்
நான்-என்னகுறையாக இருக்கிறேனடி அப்பியரே

இவ்வார்த்தைதான்கேட்டு எழுந்தாள்சுபத்திரையும்
பூவிற்பிறந்தவளே பொற்கொடியேநீர்கேளும்
மகுடத்துரைச்சியரே வார்த்தையொன்றுநீர்கேளும்
ஆயாத்துதங்கையர்காண் அம்மன்மகளல்லோ
என்னைச்சிறையெடுக்க இயலானவுன்புருஷன்
சந்நியாசிவேடங்கொண்டு தார்விஜயன்வந்திருந்தார்
மாயப்பொடிமருந்தை மயக்கத்தூவிவிட்டார்
என்னைச்சிறைபிடித்து இட்டுவந்தாருன்புருஷன்
நானென்னகுறைவாக இருக்கிறேனடி அப்பியரே
அருச்சுனரைப்பார்த்தாலே ஆவல்தெளியாதோ
மீசைமுறுக்கழகர் விழியிற்கருப்பழகர்
நாவிலேநட்சத்திரம் நயனவிழிப்பார்வைகளும்
தோளில்துளசிமாலை தொப்புளில்அமிர்தகலசம்
பல்லிற்பாசவீணை பாதத்திற்செந்தாமரை
முதுகிலேமட்சரேகை முழங்காலில்முத்துமாணிக்கம்
லீலைக்குமன்மதனடி நேரிகைக்குகந்தவனடி
அருச்சுனரைப்பார்த்தாலே அம்சகளைதீரும்
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லியருமேதுசொல்வாள்
அழகுவேண்டுமென்றுசொல்லி யாரடிகாத்திருந்தார்
மாப்பிள்ளைவேண்டுமென்று காத்திருந்தாரரடிதான்
வேண்டுமென்றிருந்தாலல்லோ விஜயனைவேண்டுவது
இராசாக்கள்தன்னைப்போலே யானுமகுடஞ்சூட்டி
மாணிக்கக்கிரீடமது மகுடஞ்சிரசிலிட்டு
சத்திகட்டிசீமைகளைக் கன்னியரேஆளலையோ
எதிர்த்தவரைச்சங்கரித்து எல்லையரசாளலையோ
மண்ணாண்டராசாத்தி மனையாட்டியாயிருந்தா
பூமியாண்டராசாத்தி பெண்சாதியாயிருந்தால்
கண்டார்நகையாரோ கலிபுகத்தாரேசாரோ
பாரத்தார்நகையாரோ பாருலகமேசாதோ
இவ்வார்த்தைதான்கேட்டு ஏதுசொல்வாள்பாஞ்சாலி
மகுடத்துரைச்சியரே வார்த்தையொன்றுநீர்கேளும்

தலையிலெழுதியதை தள்ளிவைப்பாராருமில்லை
ஏட்டிலெதியதை எடுத்தெறிவாராருமில்லை
அன்றெழுதும் ஆதிசிவன் அழித்தெழுதப்போவதில்லை
கதியைத்துலைக்கலாம் காவேரியை நீந்திடலாம்
விதியை துலைப்பதற்கு வேறுவிதம் நாமறியோம்
கழுத்திலேதாலியது கட்டியிருக்கையிலே
வயிற்றிலேயிள்ளையது வந்துமிருக்கையிலே
ஆயாசப்படுவது அந்நியர்க்குப்பேச்சாகும்
தாணியுள்ளோர்கேட்டாலே சற்றேநகைப்பார்கள்
மாலைதரித்து நீ மணமுகூர்த்தஞ்செய்யவேண்டும்
எப்போதும்போலே இராச்சியம்போய்சேரும்
மதுராபுரியென்னும் மண்டலத்தையாண்டேயிரு
எப்போதும்போலே நீ எல்லையாசாளும்
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லியம்மாளேதுசொல்வா
தல்லது ஆச்சியரே நம்மைவெளியேவிடும்
மெல்லியமனதின்படி விவகாரம்பேசிடுவோம்
கூண்டிலடைத்தென்னை விவகாரம்பேசுவதேன்
விழியெதிரே நிற்கவேண்டும் விவகாரம்பேசவேண்டும்
வெளியேவிடுங்களென்றாள் மெல்லியிளங்கொடியாள்
அவ்வார்த்தைதான்கேட்டு அன்னநடை துரோபதையா
தோகைமயிலாளுந் துரோபதையுமேதுசொல்வாள்
கையிலிருக்கும்வாளை கன்னியரேவிட்டுவிடும்
சந்திராயுதத்தை நீ சந்தலிலேவீசிவிடும்
என்வார்த்தைதள்ளிநீ யாதொன்றும்பேசவேண்டாம்
நம்பிக்கைதந்தாலே நான்விடுவேன்வெளியிலேதான்
சத்தியந்தந்தாலே தையலரேவிடுவேனம்மாள்
அவ்வார்த்தைதான்கேட்டு அல்லியுமேதுசொல்வாள்
அப்படியேயாகுதென்று ஆணங்குமேதுசொல்வாள்
சொக்கர்திருவாணை ஸ்ரீராமர்தன்னாணை
ஆதிசிவன்றன்னாணை ஆருயிராவாணை
அங்கயற்கண்ணம்மை அலர்மேலுந்தன்னாணை

ஆகாயவாணியம்மை ஐயன்பிடாரிகளும்
பரமசிவன்தன்னுணை பார்வதியாள்தன்னுணை
சந்திரர்சூரியருஞ் சமஸ்தானதேவதைமேல்
ஈஸ்பரருமீஸ்வரியும் இருடியர்மேலாணையென்றுள்
இந்திரரும்பிர்மாவும் எல்லார்மேலாணையென்றுள்
சத்தியந்தவறுவேனென் றெண்ணுதேதையலரே
காலம்பிரண்டாலும் கலியுகம்பொய்த்தாலும்
சந்திரர்சூரியர்கள் தெற்குவடக்கானாலும்
சத்தியந்தவறுவேனென் றெண்ணுதேதையலரே
கதவைத்திறந்தலவோ கடுகவிடுங்களென்றுள்
அப்போதுரோபதையாள் ஆரணங்குமேதுசொல்வாள்
சகாதேவராசாவைச் சடுதியில்தானழைத்து
கதவைத்திறந்துநீர் கன்னியைவிடுங்களென்றுள்
அப்போதுசகாதேவன் அன்புடனேதானெழுந்து
தந்திரவுபாயத்தினுற் சாற்றுங்கதவுகளை
எட்டித்திறந்தானே இயலானபொற்கதவை
சூத்திரமாகவேதான் திறந்துவிட்டான்கதவுதன்னை
மின்னலொளிபோலே வெளிபட்டாளல்லியம்மாள்
சந்திரனைப்போலே தளும்புகிறுள்தோகைநல்லாள்
குன்றின்மேற்சந்திரனது குதித்தெழுந்தபாவனைபோல்
மகுடத்துரைச்சியவள் வந்தாள்வெளியாக
மூடுசிவிகைவைத்தார் முன்னுலேஅல்லியற்கு
ஏறினுள்சிவிகைதனிலெடுத்தார்கள்தாதியர்கள்
அந்தப்புரத்திலே ஆரணங்கைக்கொண்டுசென்றுர்
பத்தாங்கட்டரண்மனையிற் பத்தினியைக்கொண்டுசென்று
சிவிகைதனைவிட்டிறங்கி சென்றுளேமாளிகையில்
கெண்டியிற்தீர்த்தமது கொண்டுவந்துமுன்புவைத்தார்
கைகாலுஞ்சுத்திபண்ணி கனிவாயைக்கொப்பளித்து
அமுதுண்ணும்மண்டபத்தில் ஆரணங்குபோய்ச்சேர்ந்து
பந்திப்பாய்மேலாக பாங்குடனேவந்தமர்ந்தாள்
வாழையிலைபோட்டு வரிசையுடன் நீர்தெளித்து

மல்லிகைமொக்குபோலே மாற்றுவெள்ளிநிறம்போலே
போசனமும்பாயாசமும் பொற்கரியும்வைத்தார்கள்
பத்துவகைக்கறியும் பதினெட்டுபச்சடியும
சர்க்கரைபால்போசனமும் முப்பழமும்பாயசமும்
உண்டுபொசித்தவர்கள் உரிமையுடனல்லவரும்
கைகாலலம்பினர்கள் கனிவாய்சுத்திபண்ணினர்கள்
மற்றுமொருமண்டபத்தில் வந்தமர்ந்தாரெல்லவரும்
சந்தனமும்புஷ்பமுந் தாம்பூலந்தான்கொடுத்தார்
வாங்கித்தரித்தவர்கள் மண்டபத்திற்கொலுவிருந்தார்
அன்னநடைதுரோபதையை அருச்சுனருந்தானழைத்து
கல்யாணமுகூர்த்தமடி கடுகிநாள்வையுமென்றாள்
ஓலையெழுதியே ஊருருக்கனுப்புமென்றாள்
ஆறாயிரம்பாண்டியர்கள் அனைவர்க்குமோலையது
எழுதியனுப்புமென்றாள் இன்பத்துரோபதையாள்

கல்யாணஓலை யெழுதி இராசருக்கு

அனுப்புதல்.

அவ்வார்த்தைதான்கேட்டு அருச்சுனனுமனமகிழ்ந்து
அண்ணன்தருமருக்கு அறிக்கையிட்டானருச்சுனனும்
மாயன்பெருமாளும் மற்றுமுள்ளோர்யோசனையாய்
சாஸ்திரிபிராமணரைச் சடுதியிலேதாமழைத்து
ஊர்கணக்கப்பிள்ளைகளை உத்தமரைவரவழைத்து
சீமைக்கணக்கரைச் சீருடனேதாமழைத்து
திங்கட்கிழமையிலே தசமிநல்லமுகூர்த்தம்வைத்து
அல்லியற்கும்அர்ச்சுனற்கும் அழகுமுகூர்த்தம்வைத்து
ஆறாயிரம்பாண்டியர்கள் அனைவோரும்வாருமென்று
எழுதுமென்றுரோலையது இன்பமுடன்தருமலிங்கம்
அப்போதுகணக்கப்பிள்ளை அன்புடனேஓலைகொண்டு
ஈழப்பனையோலை இருபக்கம்காம்பரிந்து
தாளிப்பனையோலை தலைபக்கங்காம்பரிந்து
வாதியவோலையிலே மஞ்சளைமேற்பூசி

ஆறுயிரம்பாண்டியர்கள் ஐயன்மார்தங்களுக்கும்
வக்கணையாகவேதான் வைத்துஎழுதினார்கள்
எழுதியஓலைதன்னை யெடுத்துசுருள்மடித்து
செந்திரிக்கம்போட்டுத் திருவடிக்கீழ்வைத்தார்கள்
நமஸ்காரமென்றுசொல்லி நடந்தார்கணக்கர்களும்
ஓலைதனையெடுத்து உத்தமனார்தருமலிங்கம்
காற்றிலதிகமான கடுந்தூதரையழைத்து
மலையுடனேதலைகொடுக்கும் மன்னவரைத்தானழைத்து
ஓலைகொண்டுபோவென்றார் உத்தமனார்தருமலிங்கம்
இந்திரபுரந்தாண்டி இயலானகாடுவிட்டு
காடுமலைதாண்டி கரியமலைதான்கடந்து
ஆறுசுனைதாண்டி அதிகவனங்கடந்து
குன்றுமலைதாண்டி கொப்பெனவேதூதாட்கள்
மதுராபுரிபட்டணத்தில் வந்துவிட்டார்தூதாட்கள்
பாண்டியராசர்முன்னே பாங்குடனேஓலைவைத்தார்
ஆறுயிரம்பாண்டியர்கள் ஐயன்மார்முன்புவைத்தார்
சாஷ்டாங்கமாகவே சரமிட்டார்தூதாட்கள்
ஓலைதனைகைபிடித்து உத்தமர்கள்தான்மகிழ்ந்து
சந்தோஷப்பட்டார்கள் தர்மமுடிராசாக்கள்
நாமும்வருவோமென்று ராசாக்கள்பந்தலுக்கு
ஆறுயிரவராம் ஐயன்மார்பயணமானார்
பொன்னின்மலைநாடாளும் போர்வழுதியார்கூட்
மற்றுமுள்ளராசாக்கள் மன்னர்பயணமானார்
யானைபரிவாரம் அடங்கலும்பயணமானார்
துரியோதனராசனுக்குச் சுருளோலைவந்ததுகாண்
துருபததேசனுக்குச் சுருளோலைவந்ததுகாண்
மாத்திரதேசனுக்கு வந்ததேஓலையது
மண்டலத்துராசருக்கு வந்ததேஓலைகள்தான்
கல்யாணவோலைதன்னைக் கண்டந்தராசாக்கள்
சகலமானராசர்களும் சந்தோஷமாய்வருகிறார்கள்
திக்குகளையாண்டதொரு துரைகளெல்லாம்வருகிறார்கள்

மண்டலமாண்டவர்கள் வருகிறார் துரைகளெல்லாம்
முழங்குதுமேளம் மும்மண்டலந்தானதிர
செந்துளெழும்புவது சூரியனைக்கப்பிற்றே
கருந்துளெழும்புவது கதிரோனைக்கப்பிற்றே
முத்தைபிளந்தார்கள் மூன்றாங்கால்நட்டார்கள்
பவளம்பிளந்தார்கள் பந்தற்கால்நாட்டினார்கள்
வெள்ளியாற்கால்நிறுத்தி வெத்திலையால்பந்தலிட்டு
மூங்கிற்பிளந்தார்கள் மூச்சூடும்பந்தலிட்டார்
கரும்பாலைகால்நிறுத்தி அரும்பாலேபந்தலிட்டார்
ஈர்க்குப்பிளந்தார்கள் எங்கெங்கும்பந்தலிட்டார்
பச்சோலைப்பந்தலது பதிந்தார்கள்எத்திசையும்
வன்னிமரங்கமுகுமரம் வாசலெல்லாம்நாட்டினார்கள்
தென்னைபலாமரமுந் தெருவெல்லாம்நாட்டினார்கள்
வாழைமரங்களது வாசலெல்லாம்நாட்டினார்கள்
மாவிலைத்தோரணமும் வாசலெங்குங்கட்டினார்கள்
எங்கெங்குஞ் சாலர்களும் எத்திசையும்தோரணமாம்
கண்ணாடிசல்லிகட்டி கவரிமான்குச்சிகட்டி
பஞ்சவர்னக்கிளிகளைப்போல் பந்தலிலே தூக்கிகட்டி
அன்னமுமயிலினமு மழகுபெறக்கட்டினார்கள்
சன்னலிலேபனிநீரைச் சாடினாரெத்திசையும்
நிலக்கோலமிட்டார்கள் நிலமெல்லாம்பூத்தெளித்தார்
அத்தர்புனுகுகளை யள்ளித்தெளித்தார்கள்
பட்டுரத்னப்பாய்போட்டார் பந்தலுக்குள்ளாக
சாரத்தலையணையுஞ் சகலாத்துத்திண்டுவைத்தார்
அந்தசமயத்தில் அனந்தங்கோடிராசாக்கள்
வருகிறதுரைகளென்றால் மட்டுமிதங்களில்லை
வாகனங்கள்விட்டிறங்கி வந்தார்துரைகளெல்லாம்
சந்தனவடிவழகர் தருமருக்கேதெண்டனிட்டார்
பந்தலில்வந்தமர்ந்தார் பாங்குள்ளராசாக்கள்
அத்தண்டபெண்டுகளும் அனைவரும் சிவிகைவிட்டு
அந்தப்புரத்திலே அனைவோரும்போய்ச்சேர்ந்தார்

சாஸ்திரிபிராமணர்கள் சகலபேரும்வந்தமர்ந்தார்
செந்நெல்லைகிழிட்டு சேனைமணைபோட்டு
மணவரைப்பந்தலுக்கு மாப்பிள்ளையைக்கூட்டிவந்தார்

அல்லியரசாணியை அருச்சுனன் மாலையிடுதல்.

மாப்பிள்ளையும்பெண்ணுமாக வந்தமர்ந்தார்வாசலிலே
சேஷமணைமேலே சீருடனேவந்தமர்ந்தார்
செந்நெலரிசிகொண்டு தெற்குநோக்கிப்பொங்கலிட்டார்
நாவிதன்வந்துநின்றான் நல்லமணப்பந்தலிலே
பாலால்நகந்தொடைத்தான் பத்துவிரல்நகம்வாங்கி
பணிசெய்வன்சங்கூதப் பார்த்திபர்குடைகவிய
சங்கீதமேளங்கள் சபையில்முழங்கிநிற்க
வெற்றிச்சங்கூதவே விருதுமேளமடிபடவே
சீக்கைக்கழித்தார்கள் சீராயிருவருக்கும்
முன்னூறுபிராமணப்பெண் மூன்றுநலங்குசெய்தார்
ஐந்நூறுபிராமணப்பெண் ஐந்துநலங்குசெய்தார்
எழுநூறுபிராமணப்பெண் ஏழுநலங்குசெய்தார்
மஞ்சனச்சாலையிலே மஞ்சணீராட்டிவைத்தார்
ஸ்தானங்களாடினார் தாமமுடியாரும்
நீர்சாட்டியுலத்தினார் நிலங்கிள்ளிகாப்புமிட்டார்
ஈரத்துகில்களைந்து இழைசேர்ந்தபட்டுடுத்தி
நனைத்ததுகில்களைந்து நர்கத்தளிர்பட்டுடுத்தி
மாப்பிள்ளையும்பெண்ணையும் மண்டபத்தில்கூட்டிவந்தார்
அலங்காரம்பண்ணலுற்றார் அழகாயிருவரையும்
எழில்விஜயராசாவை எப்படியலங்கரிப்பார்
கோதிமுடித்தார்கள் கொண்டைமுடிபோட்டார்கள்
உச்சிகொண்டைபோட்டார்கள் உருமாலைகட்டினார்கள்
வண்டித்தலைப்பாகை மன்னனுக்குத்தான்தரித்தார்
முத்துக்கடுக்கனது முகமழகாய்க்காதிலிட்டு
முத்துதுராய்கலிக்கத்துராய் முன்நெற்றியிலேசொருகி
தலாடத்தில்சிம்மதுராய் நடுத்தலையிலேசொருகி

ஒட்டுக்கடுக்கனது உலகம்விலைபெறுமே
பச்சைக்கல்லால்முருகு பதித்தார்களருச்சுனற்கு
வச்சிரக்கடுக்கனுடன் மாணிக்கக்கடுக்கனிட்டார்
கண்டசரங்களொடு கனவுத்ரசஞ்சமுடன்
மோகனமாலையென முத்துசரப்பளியும்
ஐந்தாம்பிறைபோலே அடுக்கடுக்காய்மார்பதக்கம்
சிங்கமுகக்கடகம் சீரானபாஜிபந்து
அரைநாண்கயிறுகளும் ஐந்துவிரல்மோதிரமும்
நீட்டிவைக்குங்கால்களுக்கு தெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூசல்லடமாம்
சந்திரகாந்திதட்டிகட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
பூவிழைத்த அங்கியாம் பூட்டியலங்கரித்தார்
பொனனிழைத்தபட்டாடை போட்டார்கள்வல்லவாட்
சிவசிவாவென்றுசொல்லி திருநீற்றுக்காப்பணிந்து
சந்தனப்பொட்டுமிட்டார் தருமர்தம்பி அருச்சுனற்கு
மல்லிகைமாலைதன்னை மார்பிலணிந்தார்கள்
அருச்சுனரைச்சோடித்தார் அழகுபெறத்தோழரெல்லாம்
ஆறுயிரம்பெண்களவர் அல்லியரைச்சோடிப்பார்
சம்பங்கிஎண்ணெய்கொண்டு தடவிமயிராற்றி
சீவிமயிராற்றிச் சிமிள்கொண்டைபோட்டார்கள்
ஒவ்வொருமயிருக்கு ஒவ்வொருபொன்னிதழாம்
பூவிதழும்பொன்னிதழும் பூட்டியலங்கரித்தார்
கட்டிமுடித்தகொண்டை காதின்கீழ்சோதிமின்ன
சுத்திமுடித்துக்கொண்டை சூரியனைப்போலிருக்கும்
பொன்னுயிரம்பெற்ற வன்சவுரியுட்சொருகி
ஆண்மயிலைபெண்மயிலை அண்டையிலேகோர்த்தார்கள்
சந்திரனைச்சூரியனைத் தானும்பிறையணிந்து
பக்கத்திற்கோர்த்தார்கள் பல்லியாழ்வார்பிறையும்
பல்லீடுமேலீடு பக்கப்புகடிகளும்
அழகுகொப்புசொருகுவாளி அன்னவாளிபுன்னைவாளி
பச்சைக்கல்முருகுகளும் பதித்தார்கள் அல்லியற்கு

மூக்குத்திசிந்தாக்கு முருகுமேற்காதுகளில்
நாகரீகக்காறையது நடுக்கழுத்திலேபூஷணமாம்
ஒற்றைச்சரடுகளாம் ஒருபுறமாம்பொற்சரிகை
இரட்டைச்சரடுகளாம் இருபுறமாம்பொற்சரிகை
மூத்துவடங்களாம் மோகனமாலைகளாம்
வட்டச்சரப்பணியாம் மார்புநிறைந்ததாவடமாம்
ஐந்துவிரலுக்கும் அழுத்தியமோதிரமாம்
பத்துவிரலுக்கும் பதிந்தகணையாழிகளாம்
பாடகந்தண்டைகளாம் பருஞ்சிலம்புகாலாழி
காலாழிகல்லணையாம் பீலாழிபில்லணையாம்
அஷ்டாபரணமெல்லாம் அலங்காரம்பண்ணினூர்கள்
சோடித்தோமென்று தோழியாகள்தெண்டனிட்டார்
அருச்சுனரை அல்லியரை அழைத்துவந்தார்பந்தலிலே
மணவரையின்மேலாக வந்தமர்ந்தாரிருவருமாய்
அரசாணிநாட்டினூர்கள் அம்மிக்குழவிவைத்தார்
சாலுங்கரகமுஞ் சட்டமுடன்வைத்தார்கள்
அம்மிவலமாக அரசாணிமுன்பாக
குத்துவிளக்குகளும் குடவிளக்குமுன்பாக
பார்த்திபனர்ச்சுனர்முன் பாலியெதிராக
ஓமப்புகையிலே யுடனிருந்துவேதஞ்சொல்ல
ஆறுயிரம்பிராமணர்கள் அங்கிருந்துவேதஞ்சொல்ல
காப்பரிசிதான்வழங்கிக் கங்கணந்தரித்தார்கள்
ஆறுயிரம்பாண்டியர்கள் ஐயமார்தாமெழுந்தார்
மஞ்சளுடன்நெல்விதை மாவுங்கழுநூலும்
தாலியுங்கூரையும் தந்தாரேபாண்டியர்கள்
காலுக்குமிஞ்சியிட்டார் கைக்குகணையாழியிட்டார்
காலைக்கழுவியே கன்னியைத்தானமிட்டார்
தந்தேன்உனக்கீந்தேன் தாரைநீர்பிடியுமென்றூர்
ஈந்தேன்உனக்கீந்தேன் இஷ்டநீர்பிடியுமென்றூர்
தாரைநீர்வார்த்தார்கள் தந்துவிட்டார்பெண்ணரசை
மாவுங்கழுநூலும் மஞ்சளுடன்அரிசி

அத்தண்டபிராமணர்கள் அஸ்தமிட்டார்மங்கிலியம்
மண்டலத்துராசாக்கள் மன்வர்கள் அஸ்தமிட்டார்
ஆறுயிரம்பாண்டியர்கள் அல்லவரும்அஸ்தமிட்டார்
மாயன்பெருமாளும் மலைராமர் அஸ்தமிட்டார்
அரகராவென்றுசொல்லி அழுத்துகின்மங்கிலியம்
சிவசிவாவென்றுசொல்லி தேர்விசயன்கட்டலுற்றுன்
மாதுதலைகுனிய மன்னவன் தரிக்கலுற்றுன்
பிர்ம்மூடிமூன்றுமுடி போட்டானேபுண்ணியனும்
தேவதுந்துமிமுழங்க தேவர்பூமார்பெய்தார்
சங்கீதமேளமது சபையில்முழங்கிற்று
அடிபடுதோரயபேரீ அந்நகரந்தானதிர
முப்பத்துமுக்கோடி மூனிவருந்தேவரெல்லாம்
ஆகாயவீதியிலே அருச்சுனரைவாழ்த்தினுர்கள்
மூப்புரத்தைத்தானெரித்த முக்கண்ணர்வாழ்த்திஞரே
அருச்சுனற்கும்அல்லியற்கும்அட்சதையெறிந்துவிட்டா
ஆரசாணிசுற்றினுர்கள் அம்மிமிதித்தார்கள்
அப்போது அருச்சுனர்க்கு அல்லிப்பெருமாளும்
அருந்ததிபூசைபண்ணி அள்ளிப்பொறியிறைத்தார்
கணையாழிமாற்றினுர் கட்டழகியிருவருமாய்
மாலைதனைமாற்றி வந்தமர்ந்தாரிருவருமாய்
அத்தண்டபேர்களும் அள்ளியேசேஷையிட்டார்
வந்திருந்தராசாக்கள் வருந்தியேசேஷையிட்டார்
ஆறுயிரவரும் ஐயன்மார்சேஷையிட்டார்
சேஷைதரித்தபின்பு சீருடனேமொய்யுமிட்டார்
மகுடமுடிராசாக்கள் வந்தவர்கள்மொய்யுமிட்டார்
காப்பரிசிதான்வழங்கி கங்கணம்அவிழ்த்தார்கள்
அனைவரையும்தெண்டனிட்டு அரண்மனையினுட்புகுந்தா
பாலியப்பாய்மேலேபாங்குடனே போய்ச்சேர்ந்தார்
பாலும்பழங்கண்டு பசியாறிவீற்றிருந்தார்
அந்தமணப்பந்தலிலே அழகானதருமலிங்கம்
மொய்ப்பாக்கும்வெற்றிலையும் முடிமன்னராசருக்கு

சந்தனமும்புஷ்பமுந் தாம்பூலம்வழங்கினாரே
ஆரியர்பிராமணாக்கும் அகுதிபாதேசிகட்கும்
பலதானங்கொடுத்தவர்கள் பார்ப்பார்களெல்லவர்க்கும்
தானதருமமுள்ளதெல்லாம் தருமர்தம்பிவழங்கினாரே
பலதானம்வாங்கியே பார்ப்பாரும்போனார்கள்
மண்டலத்துராசாக்கள் வந்திருந்த துரைகளெல்லாம்
போசனச்சாலையிலே போய்ப்புகுந்தாரெல்லவரும்
பந்திப்பாய்போட்டார்கள் பாங்குடனேவந்தமர்ந்தார்
வாழையிலைபோட்டு வரிசைநீர்தெளித்தார்
அப்பமுடன்தோசைகளும் அதிரசமும்எள்ளுருண்டை
முப்பழமுஞ்சர்க்கரையும் முடிமன்னர்வைத்தார்கள்
புத்துருக்குநெய்வார்த்து போசனமுண்ணுமென்றார்
அத்தளிகையுண்டபின்பு மறுதளிகைமுன்னேவைத்தார்
மல்லிகைமொக்குபோலே மாற்றிவெள்ளிநிறம்போலே
போசனங்கள்பாலித்து பொற்கரியும்வைத்தார்கள்
பத்துவிதக்கரியும் பதினெட்டுபச்சடியும்
பொன்போல்பருப்புவைத்து புத்துருக்குநெய்சொரிந்தார்
அத்தளிகையுண்டபின்பு மறுதளிகைவைத்தார்கள்
இளந்தோய்சசல்தயிரும்விட்டார் எலுமிச்சங்காயுமிட்டார்
போசனங்களுண்டபின்பு பொடியிட்டுக்கைதிமிரி
கைகாலுஞ்சுத்திபண்ணி கனிவாயுங்கொப்பளித்தார்
மணவரைப்பந்தலிலே வந்தமர்ந்தார் துரைகளெல்லாம்
சம்பந்தத்தாம்பூலம் தட்டோடேவழங்கினார்கள்
உறவின்முறைதாம்பூலம் உத்தமர்கள்வழங்கினார்கள
யானையலங்கரித்து அருச்சுனற்குகொண்டுவந்தார்
அத்தளங்கள்சோடித்து அல்லியற்குகொண்டுவந்தார்
யானைமேலருச்சுனரும் அத்தளத்திலல்லியரும்
ஏறினாரிருவருமாய் எடுத்தார்நெடுங்குடைகள்
சண்டாபறக்கவிட்டார் கனிபேரிகையடித்தார்
யானைமேல்பேரிகையாம் குதிரைமேல்டங்காவாம்
ஒட்டகமேல்நகபத்து ஓசைமுழங்கவேதான்

சங்கீதமேளமது சபையில்முழங்கவேதான்
எக்காளம்சின்னம் யெழில்பெறவேயூதிவர
பாஞ்சசன்யம்தேவதத்தம் பலவாத்தியமுழங்க
சாமரங்கள்சங்குசின்னம் தனிக்காளையூதிவர
பகல்வத்திமத்தாப்பு பட்டப்பகற்போல்பிடித்தார்
புருசுவெடிபாணம் போதமுழங்கிற்றே
நட்சத்திரபாணமது நன்ருய்முழங்கிற்றே
ஆடாதகூத்துகளும் அரும்பவனிநாடகமும்
கேளிக்கைதன்னுடனே கீர்த்திமன்னருச்சுனனும்
நான்குதெருவூர்கோலம் நன்ருவருகிருரே
தண்ணீர்தெளிப்பார்கள் சாம்பிராணிபோடுவார்கள்
வாழைமரங்கமுகுமரம் வாசலெல்லாம்நாட்டுவார்கள்
தென்னைபலாமரங்கள் தெருவெங்கும்நாட்டுவார்கள்
நிலக்கோலமிடுவார்கள் நிலமெல்லாம்பூத்தெளிப்பார்
ஊர்க்கோலமாகியே உத்தமர்கள்வந்தார்கள்
ஆலஞ்சுற்றினார்கள் அருச்சுனர்க்குமல்லியற்கும்
திருஷ்டிகள்சுற்றியே தெருவிலேகொட்டுவார்கள்
வாகனங்கள்விட்டிறங்கி மண்டபத்திற்போய்ப்புகுந்தார்
பாலும்பழங்களுண்டு பசியாறிவீற்றிருந்தார்
ஐந்துநாள்சென்றபின்பு அத்தண்டராசாக்கள்
அவரவர்மாளிகைக்கு அனைவோரும்போகவென்று
தருமர்செல்வதனுல் தானடந்தார்மாளிகைக்கு

பாண்டியரும் அல்லியும் விடைபெற்று

மதுரைக்கு வந்தது.

ஆருயிரவரும் ஐயன்மார்தங்கள்முதல்
முடுசிவிகையிலே மெல்லியளை வைத்துக்கொண்டு
காலாளுஞ்சேவகருங் கடுகப்பயணமென்ருர்
தருமர்செல்வதினுற் சந்தோஷமாயெழுந்து
யானைகளுஞ்சேனைகளும் யாவர்களுமாக

மேளமுழங்கிவர முடிமன்னர்போகிறார்கள்
மதுராபுரிபட்டணத்தில் வந்தார்களெல்லவரும்
நான்குதெருக்கோலம்வந்து நாயகிபோய்ச்சேர்ந்தாள்
மண்டபத்துக்குள்ளாக வந்தமர்ந்தாரெல்லவரும்
அப்போது அய்லியரும் அரசிகுணமானாள்.

அல்லியரசாணி பாலகனை

பெற்றது.

ஓராந்தான்மாதமது ஒருதிங்கட்கிழமையிலே
இரண்டாந்தான்மாதமது இரண்டுதிங்களாச்சு
மூன்றாந்தான்மாதமது மூத்துகொங்கைமுகங்கறுத்து
நான்காந்தான்மாதத்திலே நன்மசக்கையானாளே
ஐந்தாந்தான்மாதத்திலே அடிவயறுகனத்திடுமாம்
ஆறாந்தான்மாதத்திலே அங்கமெல்லாந்தங்கநிறம்
ஏழாந்தான்மாதத்திலே இசைந்தசீமந்தஞ்செய்தார்
எட்டாந்தான்மாதத்தில் இளைப்புந்தவிப்பானாள்
ஒன்பதாம்மாதத்திலே உடம்பெங்கும்நோகுதென்பாள்
பத்தாந்தான்மாதத்திலே பாலகனைப்பெற்றெடுத்தாள்
பப்பிரவாகனென்று பாண்டியர்கள்பெயருமிட்டார்
மாணிக்கத்தொட்டிலிலே வளருகிறானிந்திரனும்
சொக்கரருளாலே சுகமாகவாழ்ந்திருந்தார்
பாரினுள்ள ஆடவரும் பாலகரும்மங்கையரும்
ஆரியரும்மற்றோரும் யாவர்களுந்தான்படிக்க
முன்னாளில்மூதோர் மொழிந்தவள் அல்லியின்கதையை
இந்நாளில்போற்றவெழுதா வெழுத்ததனை
அச்சுக்கூடத்ததிப ரனேகரிதுவரையில்
உச்சிதமாச்சிலிதை யோங்கப்பதிப்பித்தார்கள்

கோள்டன்-அச்சியந்திரசாலையி பண்பாகயச்சிலிட்டார்
அட்டதிக்கும்புகழ அச்சிவிதைதானியற்ற
கற்றோரும்மற்றோரும் களிப்பாய்ப்படிப்பதற்குச்
சொற்குற்றமில்லாமல் சுத்தப்பிரதியதாய்
தப்பிதங்களைத்திருத்தி தன்னாலியன்றமட்டும்
குப்புசாமிகுரிசில் குவலயத்தோர்கொண்டாட
வாழிமிகவாழி மங்காதநூல்வாழி
வாழிசெங்கோல்செலுத்து மன்னர்மிகவாழி
அன்னைசுற்றம்வாழி அருந்தமிழோர்தான்வாழி
சின்னஞ்சிறுபிள்ளை செல்வமுளன்தான்வாழி
இந்தக்கதையிலே எழுத்துப்பிழையிருந்தால்
தப்புப்பிழைதிருத்தி தயவுபண்ணியிரட்சிக்கவும்
ஆல்போல்தழைத்து அருகுபோல்வேரூன்றி
பால்போல்ருசிக்க பாரில்மிகத்தான்வாழி
மூங்கில்போலன்னைசுற்றம் மூசியாமற்றான்வாழி
ஓங்கியநால்வேத மூயிர்பலவுந்தான்வாழி

விருத்தம்.

சுந்தரிவல்லிமாது சுபமாலைசரிதையான
இந்தநற்கதையைபாரி லெழுதினோர்கற்றோர்[illegible]ோர்
அந்தமார்க்க டருக்கீந் தாயுசுபலன்பெற்றெ[illegible]
மைந்தரைப்பெருவார்தாமே மாவீசாருளினாலே

இதுவுமது.

மாதவத்தோர்கள்வாழ்க மற்றுமுள்ளதேவர்வாழ்க
வேதமும்வாழ்கவீர சைவத்தோர்தாமும்வாழ்க
ஆதுலர்முனிவர்வாழ்க அருந்தவரிஷிகள்வாழ்க
பூதலம்வாழ்கவிந்தப் புவியுளோர்வாழ்கத்தானே.

விருத்தம்.

இப்பெருங்கதையை யுரைத்தவர்படித்தோ
ரெழுதினோர்பொருள் விரித்துரைத்தோர்
செப்பருமன்பாற் கேட்டுளோரிதன்பேர்
செப்பினோர் தீமையிற்றீர்ந்தே
எப்பெருஞ்சிறப்பு மைந்தரும்வாழ்வு
மிசைந்ததீர்க் காயுளுமுளராய்
ஒப்பருங்கதியி னிலைபெறவிளங்கி
யும்பரும்புகழ வாங்குவரே.

அ ல் லி ய ர சா ணி மா லை

மு ற் றி ற் று.

---





# புத்தக விளம்பரம்.

[illegible] கண்ட புஸ்தகமும் இன்னம் இதரபுஸ்தகங்கள் தேவையானவர் [illegible] கண்ட விலாசத்திற்கு எழுதினால் வீ. பீ. தபால் மூலிய [illegible]ப்படும், தபால் சார்ஜ் பிரத்யேகம்.

| | ரூ. | அ. |
|---|---|---|
| முதலாயிர திவ்ய ப்ரபந்தம் ... | 2 | 0 |
| திருப்பா[illegible]ந்தானம், ... | 1 | 0 |
| [illegible] வடசலை ... | 0 | 12 |
| வி[illegible]டானவிதி ... | 0 | 8 |
| அற்புத [illegible]லோகரம்பை ... | | |
| கதை படத்துடன் ... | 1 | 0 |
| சாதகாலங்காரம் மூலமும், ... | | |
| விரிவ[illegible]டன் ... | 2 | 0 |
| [illegible]கிர வைத்திய சேகரம் | 1 | 0 |
| [illegible] முருகசேகரம் ... | 1 | 0 |
| [illegible]க்கிரம் ... | 1 | 0 |
| [illegible]மணி 1-பாகம்... | 1 | 0 |
| டை 2-ம் பாகம் ... | 1 | 4 |
| டை 3-ம் பாகம் ... | 1 | 0 |
| ஆ[illegible]ர்வேத சுருக்கம் ... | 0 | 12 |
| வைத்திய மூலிகை அகராதி ... | 1 | 8 |
| 18-சித்தர் நாடிசாஸ்திரம் ... | 1 | 4 |
| சோதிட நூலாதாரம் ... | 0 | 4 |
| சர்[illegible]னவின்பலன் ... | 0 | 4 |
| சகுனங்காணும் சாஸ்திரம் ... | 0 | 4 |
| [illegible]மான சுவாமிபாடல் ... | | |
| [illegible]ட்பேப்பர் ... | 2 | 8 |
| டை கிக்கு கலிகோ ... | 1 | 0 |
| [illegible]பதான்சாகிப பாடல் ... | | |
| ஆட்பேப்பர் ... | 2 | 0 |
| டை கிக்கு கலிகோ ... | 1 | 0 |
| நீதிநெறி அரிச்சந்திர நாடகம் | 2 | 8 |
| சிவசாமி அரிச்சந்திர நாடகம் | 1 | 8 |

| | ரூ. | அ. |
|---|---|---|
| நிகண்டு 12-தொகுதியும் ... | 2 | 4 |
| 11-வது நிகண்டு ... | 1 | 0 |
| 12-தொகுதி திவாகரம் கிளேஸ் | 1 | 8 |
| டை தின் ... | 1 | 4 |
| விக்கிரமாதித்தன் கதை பெ. எ. | | |
| கிளேஸ் ... | 4 | 0 |
| டை திக்கு ... | 3 | 0 |
| டை தின் ... | 2 | 0 |
| நந்தனார் சரித்திரக்கீர்த்தனை ... | | |
| சிதம்பர சக்கரத்துடன் ... | 0 | 12 |
| டை தின் ... | 0 | 8 |
| பஞ்சபாண்டவர் வனவாசம் ... | | |
| பெ. எ. திக்கு ... | 1 | 0 |
| டை தின் ... | 0 | 12 |
| அபிமன்னன் சுந்தரிமாலை ... | | |
| பெ. எ. திக்கு ... | 0 | 12 |
| டை தின் ... | 0 | 10 |
| மதுரவீரசுவாமி கதை பெ. எ. | | |
| மந்திர சக்கரத்துடன் திக்கு | 0 | 4 |
| ஆரெழுத்தந்தாதி மூலம் ... | 0 | 2 |
| டை விரிவுரையுடன் ... | 0 | 12 |
| திருப்புகழ் 151-பாட்டு தின் ... | 0 | 6 |
| ஸ்ரீராமர் அஸ்வமேதயாகம் ... | 2 | 0 |
| புலிப்பாணி சோதிடம். ... | 0 | 12 |
| சுந்தரசேகரம், 1-ல் பாகம். ... | 0 | 12 |
| டை 2-ம் பாகம் ... | 0 | 12 |
| டை 3-ம் பாகம் ... | 0 | 12 |
| சோதிட மாலை ... | 0 | 4 |

எமது மேல்விலாசம்,

டி. கோபால் அண்டு கோ.,

"கோல்டன் பிரஸ்,"

17/18, காளத்தியப்ப முதலிவீதி, மதராஸ், என். சி.